# மார்க்கோ போலோ

வி. எஸ். வி. இராகவன்




கிளை: 89, லிங்கிச் செட்டித் தெரு,
சென்னை - 600 001

# மார்க்கோ போலோ

வி. எஸ். வி. இராகவன்




கிளை: 89, லிங்கிச் செட்டித் தெரு,
சென்னை - 600 001

முதற் பதிப்பு : 1954
ஆறும் பதிப்பு : செப்டம்பர், 1979
(முற்றிலும் திருத்திய பதிப்பு)


பதிப்பாசிரியர் : **ச. மெய்யப்பன், எம். ஏ.**

டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்
**அவர்கள் நூல்களின் தமிழாக்கம்:**

1. இந்தியப் பெரியார்கள்
2. கெளதம புத்தர்
3. மதத்தில் கிழக்கும் மேற்கும்
4. இந்தியாவின் இதய ஒலி
5. சுதந்தரமும் பண்பாடும்
6. மதமும் பண்பாடும்
7. நமது பாரம்பரியம்

**வரலாற்று நூல்கள்**

8. பிளினி
9. பெரிப்ளூஸ்
10. மெகஸ்தனிஸ்
11. தாலமி
12. யுவான் சுவாங்
13. பாஹியான்
14. மார்க்கோ போலோ
15. புதுநாடு கண்ட பெரியார்கள்

**விலை: ரூ. 7-50**

---

அச்சிட்டோர் :
கற்பகம் அச்சகம், சென்னை 600 002.

# பதிப்புரை

பல நூற்றுண்டுகளுக்கு முன் தரை வழியாகவும் கடல் வழியாகவும் உலகின் பல இடங்களுக்கும் அஞ்சாது சென்று அரும்பெரும் புதுமைகளை உலகிற்கு அறிவித்த பயணிகளுள் சிறந்து விளங்குபவர் **மார்க்கோ போலோ.** இவர் வாழ்ந்து வந்த காலம் கி.பி. 1254-1324.

இவர் தாம் கண்டுகளித்த புதுநாடுகளையும், ஆங்காங்கே கண்ட புதுமைகளையும் இந் நூலிலே கண்டு மகிழலாம். கி.பி. 13ஆம் நூற்றுண்டில் இந்தியாவைப் பற்றிக் கிடைக்கப்பெறும் மேலை நாட்டு ஆதாரச் செய்திகள் இவை ஒன்றே.

பல வரலாற்று நூல்களுக்கு ஆசிரியரான **திரு. வி. எஸ். வி. இராகவன்** அவர்களே இந் நூலுக்கும் ஆசிரியர். **டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்** அவர்களின் உலகு புகழ் தத்துவ நூல்களின் தமிழ்ப் பெயர்ப்பாளர். மற்றும் நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களுக்கு ஆசிரியர். சிறந்த பதிப்பாசிரியரும் ஆவார். ஆயிரத்துக்கும் மேற்பட்ட தமிழ் ஆங்கில நூல்கள் இவர் கைவண்ணத்தால் மெருகேற்றப்பட்டு செவ்வனே வெளிவந்துள்ளன. பல அகராதித் தொகுப்புகளுக்குத் துணை ஆசிரியரும் ஆவார்.

**மார்க்கோ போலோ** எனும் மகுடமிட்ட இந் நூலுடன், **பிளினி, பெரிப்ளூஸ், மெகஸ்தனிஸ், தாலமி, பாஹியான், யுவான் சுவாங்** ஆகிய வரலாற்று நூல்களையும் இதே வரிசையில் விரிவான விளக்க உரைகளுடன் வெளியிட்டுள்ளோம்.

தமிழ் கூறும் நல்லுலகம் இவ்வரிசையில் வெளியிட்ட ஆதாரச் செய்திகள் அடங்கிய அடிப்படை நூல்களை நன்முறையில் போற்றி வரவேற்கும் என்று எண்ணுகிறோம்.

புதிய எழுத்தாளர்களை இனம்கண்டு அறிமுகம் செய்வதிலும், புதுவகை நூல்களைப் பதிப்பிப்பதிலும் தன்னிகரற்று விளங்கும் **பதிப்புச் செம்மல் உயர்திரு ச. மெய்யப்பன், எம். ஏ.** அவர்கள் இந் நூல் வெளிவர உறுதுணையாய் அமைந்தார்கள். அவர்க்கு எங்கள் உளங்கனிந்த நன்றி.

தமிழன்னைக்குக் காணிக்கையாக இந் நூலை அத்தேவியின் திருப்பாதங்களில் வைத்து மகிழ்கின்றோம்.

வாழ்க தமிழ்! வளர்க வரலாற்றுச் சான்றுகள்!

**மெ. மீனாட்சி சோமசுந்தரம்.**

# முன்னுரை

தமிழ் நாட்டின் நிலவளமும், நீர்வளமும், மலைவள முமம், கடல் வளமும் அந்நியர் பலரை அன்போடழைத்து ஆதரவு அளித்து, அறிவுத்துறையிலும் சிறப்புற்று ஓங்கி வளர ஊக்கமளித்து நின்றன. அதுவும் யாத்திரிகர்கள் பற்பல தேசங்களினின்றும் ஓயாமல் வந்து நம் நாட்டின் பண்பாட்டை நன்கு தெரிந்து, தம் நாட்டிற்கேகி, அவற்-றைப் பன்மடங்காகச் சிறப்பித்துக் கூறுவாராயினர். இத் தகைய யாத்திரிகர்களில் முக்கியமானவர் நாம் இந் நூலுள் கூற முனைந்திருக்கும் மார்க்கோ போலோ.[1]

மார்க்கோ போலோ வெனிசு[2] நகரத்தில் கி.பி. 1254 ஆம் ஆண்டுப் பிறந்தார். வெனிசு நகர வர்த்தக மக்கள் குடியைச் சேர்ந்த அவரது தந்தையின் பெயர் நிக்கொலோ போலோ[3]. தந்தையும் அவரது நண்பருமான மாப்பியோ[4] என்பவரும் சேர்ந்து வர்த்தக நிமித்தமாகக் கான்ஸ்டான்டிநோபிள்[5] என்ற பெரு நகரத்துக்குப் பயணப்பட்டனர். பற்பல இன்னல்களைக் கடந்து, இறுதியில் சீனப் பேரரசரான குப்ளாய்கானின்[6] அரண் மனையை அடைந்து, அவ்வரசரால் சில காரியங்களை முடித்து வர மீண்டும் ஐரோப்பாவுக்குத் திரும்ப ஏவப் பட்டனர். அவ்வாறே அவர்கள் திரும்பித் தம் நாடடைந்து,

---

[1] Marco Polo [2] Venice [3] Nicholo Polo [4] Maffeo [5] Constantinople [6] Kublai Khan

இரண்டாம் முறை சீனப் பேரரசுக்குப் பயணப்படும் போது பதினேழு வயது நிரம்பியுள்ள இளைஞர் மார்க்கோ போலோவைத் தம்முடன் அழைத்துச் சென்றனர். அவர்கள் அங்கே பதினேழு ஆண்டுகள் சீனப்பேரரசரிடம் பல்வேறு உத்தியோகங்களை வகித்து வந்ததாகவும், கடைசியாகப் பாரசிக மன்னர்க்கு மனைவியாகப் போகும் மங்கை யொருத்திக்குத் தக்க துணையாகத் திரும்பி அனுப்பப்பட்டதாகவும், திரும்பி வரும் வழியில் பல நாடுகளைத் தாம் கண்டதாகவும், மார்க்கோ போலோ தமது வரலாற்றில் விரிவாக எழுதி வைத்திருக்கிறார். அவர் எழுதிவைத்த யாத்திரைக் குறிப்புகள் அக் காலத்திலேயே மக்களால் மாயக் கதைகளாகப் போற்றப்பட்டு வந்தன.[1]

மார்க்கோ போலோ 1295ஆம் ஆண்டில் தம் தாய் நாடு திரும்பியதும், நாட்டில் ஏற்பட்ட குழப்பத்தின் காரணமாக, அவர் சிறைப் பிடிக்கப்பட்டு, 1299ஆம் ஆண்டு விடுதலை அடைந்தார். அவர் வரலாற்றை முதன் முதல் ஆங்கிலத்தில் தொகுத்து எழுதியவர் ஜான் பாப்டிஸ்ட் ரமுசியோ[2] என்பவர். இவர் மார்க்கோ போலோவை அடிக்கடி 'கோடீஸ்வரர்'[3] என்று வருணிப்பதிலிருந்து, மார்க்கோ போலோ சீனப் பேரரசரிடமிருந்து எத்தகைய பெருமதிப்புக்கொண்ட வெகுமதிப் பொருள்களைப் பெற்றுத் திரும்பி யிருக்க வேண்டும் என்பது ஒருவாறு புலனாகும். கடைசியாக, இன்பம் நிறைந்த இல்வாழ்க்கை நடத்தி, 1324ஆம் ஆண்டில் மார்க்கோ போலோ காலமானார்.

மார்க்கோ போலோ எழுதிவைத்த புத்தகம் யாத்திரைப் புத்தகங்கள் யாவற்றிலும் தலை சிறந்து விளங்குகின்றது. இன்றைக்கும் மத்திய ஆசியா வழியாகச்

---

[1] Fairy tales [2] John Baptist Ramusio [3] Il Milione

செல்லும் யாத்திரிகர்களுக்கு இப் புத்தகம் ஒரு வழி காட்டியாகவும் உதவுகின்றது. ஆசியாக் கண்டத்தைக் கடந்து சீனப்பேரரசரின் சீர்மையையும், மாட்சிமையை யும் முதன் முதல் உலகத்துக்கு அறிமுகப்படுத்தியவர் மார்க்கோ போலோ அல்லவா? சீனவிலும், ஜப்பானிலும் கிடைக்கும் ஏராளமான முத்து, பொன், நவரத்தினம் முதலிய அரிய செல்வங்களும், அகில், துகில் முதலிய வாசனைப் பண்டங்களும் மார்க்கோ போலோவினல் மேலே நாட்டிற்குப் பின்னும் அறிமுகப் படுத்தப்பட்டன. இங்ஙனமே நமது பாரத நாட்டின் கடற்கரையிலமைந்த பல நாடு, நகரங்கள் பற்றியும் அங்கு விளையும் அரிய பொருள்கள் பற்றியும் மேனாட்டார் அறிவதற்கும் மூல காரணமாக இவரது குறிப்புகள் விளங்கின. இவை யாவும் கதைபோல் வழங்கப்பட்டு, அக் கதைகளே அன்றிருந்த கிறிஸ்தோபர் கொலம்பஸ்[1] என்ற யாத்திரி கரை வசீகரித்து நின்றன. இவற்றின் சிறந்த தூண்டு தலினல் உந்தப் பெற்றுத் தாமும் கீழ்த்திசை நாடுகளை யடையப் புதியதொரு பாதையிலே செல்ல அவர் புதிய தொரு கண்டத்தை—அமெரிக்கா[2] என்னும் அழகிய பெரும் பூமியைக்—கண்டுபிடித்தார். மார்க்கோ போலோ எழுதிவைத்த குறிப்புகளே தம்மை இவ்வாறு தூண்டிற்று எனக் கொலம்பஸே ஓரிடத்தில் வரைந்துள்ளார்.

எனவே, இத்தகைய சிறப்புகள் பல வாய்ந்த மார்க்கோ போலோவின் யாத்திரை வரலாறு புதுமை பல நிறைந்து படிக்கப் படிக்க இன்பம் தருகின்றது. அதுவும் மார்க்கோ போலோ எழுதிவைத்த நம் தமிழ்

---

[1] Christopher Columbus [2] America

நாட்டுச் செய்திகளைப் படிக்கும்போது யாவற்றையும் விடப் பேரின்பம் அளித்து நிற்கும். தமிழ் நாட்டைப் பற்றி அவர் கூறும் செய்திகளில் சிற்சில முரண்பாடுகள் காணப்பட்டாலும், நமக்கு அக் காலத்தைப் பற்றிக் கிடைக்கும் ஆதாரச் செய்திகள் அவை ஒன்றே.

மார்க்கோ ப்போலோ எழுதி வைத்த குறிப்புகளில் காணப்படும் ஊர்ப்பெயர்கள், நாட்டின் பெயர்கள், அரசர் பெயர்கள் ஆகிய யாவும் இன்று மிகவும் திரிந்தே வழங்கி வருகின்றன. ஒவ்வொரு பெயருக்கும் பொருத்த மான பெயரைக் குறிப்பிட்டு, ஆராய்ச்சி மிகுந்த அடி வரவுகளாகச் சில குறிப்புகளும் இப் புத்தகத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றைத் தமிழ் கூறும் நல்லுலகம் நன்முறையில் போற்றும் என்பதே எனது நம்பிக்கை.

இப் புத்தகத்தில் கொடுக்கப் பட்டிருக்கும் செய்திகள் அவர் **இந்தியாவிலும்** மற்றும் **சில வெளி நாடுகளிலும்** செய்த சுற்றுப் பயணத்தைப் பற்றி எழுதிவைத்த குறிப்புகளின் சிரிய தமிழ்த் தழுவலேயாகும். அவை முறையே முதல் இரண்டாம் பகுதிகளில் காணப்படும். ஏனைய நாடுகளைப் பற்றியும் ஈண்டு எழுதப்புகின், அது மிகப் பெரிய புத்தகமாக விரிந்து விடுமாதலால், சில பகுதிகளின் குறிப்புகளை மட்டும் தொகுத்து இந் நூலில் கொடுத்துள்ளேன்.

வரலாற்று நூல்கள் நடுநிலைமையான ஆராய்ச்சி களுடன் தமிழ் மொழியில் இன்றளவும் போதிய அளவிற்கு வெளிவரவில்லை. அடிப்படை நூல்களும், ஆதார நூல்களும் தமிழில் எங்கேனும் கிடைக்குமா என்று தேடிப் பார்க்கும் அவல நிலையில்தான் இருக்கின்றோம்.

இக் குறையைப் போக்க, மேநாட்டு வரலாற்று ஆசிரியர்களின் ஆதாரமாக விளங்கும் நூல்களைத் தமிழில் பெயர்க்கத் துணிந்தேன். அவ்வரிசையில் மார்க்கோ போலோ எனும் மகுட மிட்ட இந் நூலும் ஒன்றாகும்.

மற்றும் எனது முந்தைய வரலாற்று நூல்களான பிளினி,[1] பெரிப்ளூஸ்,[2] மெகஸ்தனிஸ்,[3] தாலமி,[4] பாஹியான்,[5] யுவான் சுவாங்,[6] புது நாடு கண்ட பெரியார்கள்[7] எனும் நூல்களுக்குத் தமிழன்பர்கள் அளித்த ஆதரவைப் போலவே, மார்க்கோ போலோ[8] எனும் இந்நூலுக்கும் அளிப்பார்கள் என எண்ணுகிறேன்.

இந் நூலுக்கு ஆராய்ச்சி மிகுந்த அடிக் குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. மற்றும் இப் பதிப்பு முற்றிலும் புதிய முறையில், இதுகாறும் வந்த பதிப்புகளில் காணாத வரலாற்றுச் சான்றுகளுடன் வெளியிடப்படுகிறது. இவ்வாராய்ச்சி மிகுந்த அடிக் குறிப்புகளைத் தமிழ் கூறும் நல்லுலகம் நன்முறையில் வரவேற்றுப் போற்றும் என்பதே எனது நம்பிக்கை. இப் புத்தகம் ஆதாரச் செய்திகள் அடங்கிய அடிப்படை நூலாகும் என்பதே பேராசிரியர்கள் பலர் ஒருங்கே ஒப்புக் கொண்ட கருத்தாகும்.

நல்ல தமிழ் நூல்கள் வெளியிடுவதையே வாழ்வு நோக்கமாகக் கொண்டு, அரிய ஆய்வு நூல்களைத் துணிவுடன் வெளியிடும் **பதிப்புச் செம்மல் உயர்திரு ச. மெய்யப்பன் எம். ஏ.** அவர்கள் இந் நூல் வெளிவர உறு துணையாய் அமைந்தது என் நல்லூழேயாகும். அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றி உரித்தாகுக.

---

[1] Pliny [2] Periplus [3] Megasthenes [4] Ptolemy [5] Fa-Hien [6] Yuwan Chwang [7] Great Discoverers of Newlands [8] Marco Polo

இத் தமிழ்த் தழுவலை அன்புடன் ஏற்று, என்னை மேன்மேலும் இப் பணியில் ஊக்குவிக்குமாறு ஆசிரிய அறிஞர்களையும், தமிழன்பர்களையும் வேண்டிக் கொள்கிறேன். அன்பர்கள் அளிக்கும் அரிய ஊக்கமே இதைப் போன்ற பல நூல்கள் யாத்தற்குரிய பெருந் தூண்டு கோலாய் அமையும் என்பது உறுதி, உறுதி.

வாழ்க மார்க்கோ போலோவின் சொல்லோவியங்கள்! வாழ்க தமிழ்! வளர்க தமிழ்ப் பண்பாடு!

**வி. எஸ். வி. இராகவன்**

# பொருளடக்கம்

## முதல் பகுதி

### (இந்தியா)



## இரண்டாம் பகுதி

### (பிற நாடுகள்)

# 1. மார்க்கோ போலோவின் வாழ்க்கை வரலாறு

பண்டைக் காலந் தொட்டுப் பண்புமிக்க நாடுகள் பல வற்றுள் நம் இந்தியாவும், சீனுவும் அரும்பெரும் புதையல்கள் பல கொண்ட நாடுகளாகக் கருதப்பட்டு வந்தன. முத்தும், பொன்னும், மணியும், அகிலும், துகிலும், ஆரமும் அளவின்றிக் கிடைக்கும் நாடுகளாகத் தலைசிறந்து விளங்கி வந்தன. இவ்விரு நாடுகளின் பெருமைகளைப் பற்றியும், கிடைக்கும் அரிய பொருள்களைப் பற்றியும் மேனுட்டு யாத்திரிகர்கள் பலர் பலவாறு எழுதி வைத்திருக்கின்றனர். ஆதிகாலந் தொட்டே நம் நாட்டிற்கும் மேலை நாடாகிய கிரேக்க நாட்டிற்கும் வாணிபத் தொடர்பு உண்டென்பது பிளினி[1], பெரிப்ளூஸ்[2] முதலிய மேல்நாட்டு நூல்களால் தெரிய வருகின்றது. அரிசி, தோகை, கர்ப்பூரம், மிளகு, அகில் போன்ற பல தமிழ்ச் சொற்கள் கிரேக்க மொழில் மருவி வழங்குவதும், ஒரா[3] போன்ற கிரேக்கச் சொற்கள் நம் நாட்டு மொழி வழக்கில் இடம் பெற்றிருப்பதுமே இதற்குப் போதிய சான்றுகளாகும்.

**இந்தியாவின் பெரும் புகழ்**

கீழைநாடு போந்த மேலை நாட்டு யாத்திரிகர்கள் தம் நாடு திரும்பியவுடன், அந் நாடுகளின் பெருமையையும், புகழையும் பலபடப் புனைந்து எழுதி வைத்தனர். அவ்வாறு அவர்கள் எழுதிவைத்ததனுலன்றே மேனுட்டார் பலர் இந்தியா போன்ற செல்வம் கொழிக்கும் நாடுகளுக்குச் சென்று, அச் செல்வங்களைக் கொணரப் பெரிதும் அவாக் கொண்டனர். ஆயினும், அவா மட்டும் இருந்து விட்டால் போதுமா? அதனை அடையும் மனத் துணிவும் பெரிதும் வேண்டுவதன்றே? அவ்வரிய மனத் துணிவு

**பயணக் குறிப்புகள்**

[1] Pliny [2] Periplus [3] Hora

பெற்ற சிலரே கப்பலேறிக் கடல் கடந்து காணுத் தேசங்களே யும் கண்டுகளித்தனர்.

யாத்திரிகர்கள் எழுதிவைத்த குறிப்புகளுள் மேலே நாட்டு மக்களின் மனத்தை மிகவும் தூண்டியது சீனப் பேரரசைப் பற்றிய பெரும் வரலாற்று உண்மைகளே. குப்ளாய்கான் என் பவர் சீனப் பேரரசைப் பதின்மூன்ரும் நூற்ருண்டின்[1] பிற் பகுதியில் ஆண்டு வந்தார். அவருடைய செல்வமும், பெருந் தகைமையும், புகழும் கடல் கடந்து உலகம் முழுவதும் பரவின. அவருடைய ஆளுந் தன்மையும், அவர் நாட்டில் உள்ள பண்டைப் பொருள்களின் மிகுதியும், மணி, பொன் முதலியவற்றின் குவியல்களும் பலர் மனத்தைக் கவர்ந்த வண்ணமாயிருந்தன. ஆகவே, சீனப் பேரரசர் குப்ளாய்கானே அண்டி அரிய செல்வத்தை அடைய அரும்பாடுபட்டுக் கடல் கடந்து சென்றனர் தீரமுள்ள யாத்திரிக மணிகள். அவர் களுள் முக்கியமானவர் இங்கே கூறப்புகும் **மார்க்கோ போலோ** ஆவார்.

**மார்க்கோ போலோவின் பிறப்பு**

மார்க்கோ போலோ என்னும் வீரம் செறிந்த பெருந்தகை யாளர் இத்தாலி நாட்டில் சிறந்து விளங்கிய வெனிசு நகரத்தில் கி.பி. 1254 ஆம் ஆண்டுத் தோன்றினர். உயர் குடியில் பிறந்து வளர்ந்த அவரது தந்தையின் பெயர் நிக்கொலோ போலோ என்பதாகும். நிக்கொலோ போலோ கான்ஸ்டாண்டி நோபிள் என்ற பெரும் பட்டணத்துடன் வாணிபத் தொடர்பு கொண்டு வாழ்க்கையைச் செப்பனிட்டுச் சீரும் சிறப்புமாய் வாழ்ந்து வந்தார். அவரும், அவருடன் வாணிக முதலீடு இட்ட மாப்பியோ என்பவரும் சேர்ந்து, கிரிமியா என்னும் நாட்டுக்கு வாணிக நிமித்தமாகச் சென்றனர். வாணிகம் செழித்தோங்கியதனுல், அவர்கள் பெரும் பொருள் ஈட்டினர். ஆனுல், அவர்கள் திரும்பித் தங்கள்

---

[1] கி.பி. 1280—1300 குப்ளாய்கான் அரசாட்சி செய்த காலம் என வரலாறு கூறுகின்றது. ஆனுல் மார்க்கோ போலோ, இவர் கி. பி 1256—1294 வரையில் அரசு செலுத்தினர் எனவும், இவர் கி.பி. 1203-ல் பிறந்தார் எனவும் இவருக்குக் கி.பி. 1288-ல் 85 வயது ஆயிற்றெனவும் வேருேர் இடத்தில் கூறுகிருர். ஆகையால், இவற்றில் எது சரியானது என நிர்ணயிப்பது ஆராய்ச்சியாளருடைய பொறுப்பாகும்.

நாடடைய நினைக்கும்பொழுது வழியில் டார்டார் என்பவர் களின் போர் நடைபெற்றது. அப் போர் அவர்களைத் தடுத்து, தங்கள் சொந்த நாட்டுக்குத் திரும்பிச் செல்ல முடியாமல் செய்துவிட்டது.

இதனுல் அவர்கள் யோசனை செய்து இறுதியாகப் பொகாரா[1] என்னும் பாலைவனத்தைக் கடந்து அங்குள்ள நாடுகளில் வாணிபத்தின் பொருட்டு மூன்று ஆண்டு இருந்தனர். இவ்வாறு அவர்கள் அந் நாட்டில் வாணிகம் செய்து வரும் சமயம், சீனப் பேரரசின் சக்கரவர்த்தியாகிய குப்ளாய் கானின் பெயர் அவர்கள் காதுக்கு எட்டியது. அப் பேரரசை நோக்கி அவ்விரு வணிகர்களும் பயணப்பட்டனர். ஓர் ஆண்டுப் பயணம் செய்து வழியிலுள்ள பல நாடுகளைக் கடந்து கடைசியாகச் சீன தேசம், சென்றடைந்தனர். ஒரு நன்னுளில் அவர்கள் குப்ளாய் கானின் அரண்மனையில் நுழைந்தனர். அச் சீனப் பேரரசர் அவர்கள் வருகையை யறிந்து அகமகிழ்ந்து, அவர்களுக்குத் தக்க மரியாதைகளுடன் சிறந்த வரவேற்பு அளித்தார். அப் பொழுது சீன தேசம்[2] இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டிருந்தது. மேல் பாகம்—அதாவது வடபாகம்—கெதே[3] என்றும், கீழ்ப்பகுதி—அதாவது தென்பாகம்—மஞ்சி[4] என்றும் வழங்கப்பட்டு வந்தன.

**சீனப் பிரிவுகள்**

நிக்கொலோ போலோவும் அவரது நண்பரும் சீன தேசத்தில் அதன் பேரரசர் குப்ளாய்கானுல் வெகுவாக ஆதரிக்கப்பட்டனர். பின்னர், அவர்களை ரோம் நகரில்[5] வதிந்து வந்த போப்பாண்டவரிடம்[6] தூதாக அனுப்பிப் பாதிரிமார்கள் சிலரைத் தம்மிடம் அனுப்பித் தருமாறு குப்ளாய்கான் வேண்டினர். மற்றும்

**ரோம் நகருக்குத் திரும்புதல்**

1 Bokhara  2 China  3 Cathay  4 Manji
5 Rome  6 Pope

போப்பாண்டவர் சன்னிதியினின்று விளக்கெரிக்க உதவும் எண்ணெயில் சிறிது பாகம் பெற்றுக் கொண்டு வரவும் அவர்களை அனுப்பியிருந்தார். அவர்கள் மூன்று ஆண்டுகளாகப் பல நாடுகளையும் கடந்து, இறுதியாக ரோம் நகரை அடைந்தனர். ஆனால், அவர்கள் அவ்விடத்தை யடைந்த பொழுது, யாரை எதிர்பார்த்து வந்தார்களோ அப் போப்பாண்டவர் ஆவி துறந்திருந்ததை யறிந்தனர். அடுத்த போப்பாண்டவர் யார் என்பதை நிச்சயிக்க ஒரு தேர்தல் நடைபெறும் நாளையும் அறிந்தனர். ஆனால், அதுவரையிலும் தங்கள் காலத்தை ரோமில் கழிக்க மனமில்லாமல் தங்கள் சொந்த ஊராகிய வெனிசு நகரத்தை அடைந்தனர். அவர்கள் அவ்வாறு அடைந்தது கி.பி. 1269 ஆம் ஆண்டு ஆகும்.

**வீட்டில் கேட்ட பேரிடி**

வீட்டை யடைந்ததும் பேரதிர்ச்சி ஒன்று அவர்கள் காதுக்கு எட்டியது. நிக்கொலோ வீட்டில் நுழைந்து, தம் மனைவியைத் தேடினார். ஆனால், அவள் இருந்தால்தானே எதிர்கொண்டழைக்க? அவள் இறந்து பல ஆண்டுகள் ஆயின என்பதைப் பின்னர் அறிந்தார். அவளுக்கு ஒரு மகன் மட்டும் இருந்தான். அம் மகன் பெயர் மார்க்கோ போலோ. அப்பொழுது அம் மகனுக்கு வயது பதினைந்து நிரம்பியிருந்தது. அவரே இப் புத்தகம் வருணிக்கும் யாத்திரிகர் ஆவார். மார்க்கோ போலோ அதுகாறும் தமது மாமன் வீட்டில் வளர்ந்து வந்தார்.

**மார்க்கோ போலோவின் புறப்பாடு**

தந்தையும், நண்பரும் சில காலம் வெனிசு நகரத்தில் வசித்துப் போப்பாண்டவரின் தேர்தலை எதிர்நோக்கியிருந்தனர். ஆனால், அத்தகைய தேர்தல் நாள் எக் காரணத்தாலோ தள்ளி வைக்கப்பட்டதால், அவர்கள் மீண்டும் கி.பி.1271 ஆம் ஆண்டு சீனப் பேரரசர் குப்ளாய்கானிடம் செல்ல நினைத்தனர். அவ்வாறு நினைத்த அவர்கள் பயணப்பட்டுப் பற்பல தடைகளுக்கு ஆளாகி, கி.பி. 1275 ஆம் ஆண்டுச் சீனப் பேரரசை

அடைந்தனர். அவர்களுடன் இளைஞர் மார்க்கோ போலோவும் தமது பதினேழாவது வயது முடியுந் தருவாயில் கிளம்பினர். ஆண்டவர் சன்னிதியில் பெற்ற சிறிது எண்ணெயையும் தங்களுடன் எடுத்துச் சென்றனர்.

**சீனப் பேரரசை அடைதல்**

அவர்கள் வரவைக் கண்டதும், சீனப் பேரரசரான குப்ளாய்கான் மிகுந்த மரியாதைகளுடன் வரவேற்றுத் தக்கவாறு உபசரித்தார். மார்க்கோ போலோ, அப்பொழுது வாலிபராக இருந்த காரணத்தால், அவருடைய பேச்சுகளும், நடை, உடை, பாவனைகளும் அப்பேரரசரின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. சிறிது காலத்தில், மார்க்கோ போலோ டார்டார் மொழியையும், சீன மொழியையும் அறிந்தார். சீன மக்களுடைய நடை, உடை முதலியவற்றையும் அவர்களின் பண்பாடுகளையும் நன்கு அறிந்து கொண்டார். அன்னியர் மொழியில் ஆர்வம் காட்டி, அவர்களிடம் அன்புகொண்டு பழகியதால், குப்ளாய்கான், மார்க்கோ போலோவை, வெளிநாட்டுத் தூதுவராக அடிக்கடி அனுப்பி வைத்தார். இவரும் தமக்கு இட்ட பணியைச் செவ்வனே செய்து பேரரசரின் மனத்தைக் களிப்படையச் செய்தார். இவ்வாறு அயல்நாட்டு அலுவலாளராகச் செல்லும் பொழுது நம் இந்தியாவிலும் இறங்கிப் பல நாடுகளைச் சுற்றித் தாம் கண்டு மகிழ்ந்தவற்றைச் சிறந்த வரலாருக எழுதி வைத்தார். அவ்விளைஞர் மார்க்கோ போலோ குப்ளாய்கானிடம் பதினேழு ஆண்டுகள் அயல் நாட்டு அலுவலாளராகப் பணியாற்றி வந்தார்.

குப்ளாய்கானுக்கு வயது அதிகமாகிக் கொண்டே வந்ததால், இன்னும் சில காலமேனும் வாழ்வது நிச்சயிப்பதற்கில்லை என்ற நிலை ஏற்பட்டது. இதை மார்க்கோ போலோவும், மற்றைய இருவரும் அறிந்து, அதற்குத் தக்கவாறு

**வெனிசு திரும்புதல்**

நடந்து கொள்ள முயன்றனர். குப்ளாய்கானுக்குப் பிறகு பட்டத்துக்கு வரும் சீனப் பேரரசர் அதே சலுகைகளைத் தங்களுக்குக் காட்டுவாரா என்று மனத்தில் பெரும் ஐயப்பாடு தோன்ற, அந் நாட்டினின்று அகன்று

தங்கள் நாட்டிற்குத் திரும்பிச் செல்ல விழைந்தனர். ஆனால், இவ்வெண்ணத்தை நேரடியாக அப் பேரரசரிடம் எங்ஙனம் எடுத்துரைப்பது என்னும் பெரும் குழப்பத்தில் ஆழ்ந்திருக்க, ஊழ்வினையின் நற்பயனாய் அவர்களுக்கு அதற்கொரு நல் வாய்ப்புக் கிடைத்தது. பாரசீக தேசத்து மன்னனான 'ஆர்கான்'[1] என்பவன் குப்ளாய்கான் உறவினர் ஒருவரின் எழில் மிக்க பெண்ணை மணக்க உத்தேசித்து அவளைத் தக்க துணையுடன் தன் நாட்டுக்கு அனுப்பித் தருமாறு குப்ளாய் கானின் உதவியை வேண்டி நின்றான். ஆனால், அப் பெண் ணுடன் வழித்துணையனுப்ப அந் நாட்டிற்குரிய வழியைத் தெரிந்தவர் யாரேனும் இருத்தல் வேண்டுமன்றோ? அவ்வாறு வழி நன்கு தெரிந்திருந்தவர்கள் மார்க்கோ போலோவும், மற்ற இருவருமே. ஆதலால், அவர்கள் அப்பெண்ணுக்கு வழித் துணையாகத் தாங்கள் செல்வதாக வாக்களித்தனர். ஆனால், குபளாய்கானுக்கு அவர்களைப் பிரிய மனமில்லை. என்றாலும், கடைசியில் பாரசீக மன்னரின் வேண்டுதலை உத்தேசித்து அவர்களை அப் பெண்ணுடன் அனுப்பி வைத்தார். அனுப்பும் போது, குப்ளாய்கான், மார்க்கோ போலோவுக்கும், அவர் தந்தைக்கும், தந்தையின் நண்பருக்கும் பலவித மரியாதைகள் செய்து வழியனுப்பி வைத்தார். மார்க்கோ போலோவிடம் சிறப்பான நட்புக்கொண்டதால் அவருக்குத் தனியாகப் பொன் னும், மணியும் பல்வகைச் செல்வங்களும் பரிசுகளாகக் கொடுத்து, பொன்னால் செய்யப்பட்டதும் தம் பெயர் பொறிக் கப் பட்டதுமான கேடயம் ஒன்றையும் கொடுத்தார். வழியில் யாதொரு தொல்லையும் ஏற்படாவண்ணம் போய்ச் சேர அக் கேடயம் அவருக்கு உதவிற்று. குப்ளாய்கான் கொடுத்த அக் கேடயத்தை அவர் எங்குக் காட்டினாலும், அத் தேசத்தார் அவருக்கு உயர்ந்த மரியாதைகள் செய்து, வேண்டியவற்றை வேண்டியவாறு அளித்து உதவுவர். இவ்வாறு அவர்கள் சீனா தேசத்தை விட்டுப் புறப்பட்டனர்.

மணமகளுடன் புறப்பட்ட அம் மூவரும் பாரசீக நாட்டை யடைந்து, மூன்று ஆண்டு அங்குத் தங்கிப் பின் கி.பி.1295ஆம்

[1] Argon

ஆண்டுத் தங்கள் சொந்த நாடாகிய இத்தாலி நாட்டையடைந் தனர். இதற்கிடையில் அவர்கள் பட்ட துன்பங்கள் கொஞ்ச நஞ்சமன்று. எழுத்தால் எழுதமுடியாத பல இன்னல்களை யெல்லாம் கடந்து இறுதியில் தங்கள் நாடு வந்து சேர்ந்தனர் தங்கள் நாடடைந்ததும், சீனப் பேரரசர் குப்ளாய்கான் இறந்துவிட்ட செய்தியை அன்றே அறிந்து மிக மிக வருந்தினர்.

தந்தையும் நண்பரும் ரோம்நகரிலே தங்கள் சொந்த அலுவலை முன்னிட்டுத் தங்கிவிட, மார்க்கோ போலோ மட்டும் தம் உற்றூர் உறவினரைக் காண வெனிசு நகரம் வந்தடைந் தார்.

சொந்த நகரத்தில் மார்க்கோ போலோ இறங்கியதும் இவரை எவராலும் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. இவருடன் யாவரும் கலந்து உறவாட மறுத்தனர். இந் நிலையில்

**அடையாளம் கண்டு கொள்ள திகைப்பு**

தாமே மார்க்கோ போலோ என நிலை நாட்டி, தம் உறவினரிடம் உரிமை யோடு வாழ்வது எங்ஙனம் என்று சிந்தித்த பொழுது சட்டென இவருக்கு அரிய எண்ணம் ஒன்று உதித்தது. தம்மிடமிருந்த விலை உயர்ந்த - குப்ளாய்கான் அன்பளிப்பாக அளித்த—பொன், வைரம், நவரத்தினம், தந்தம், வாசனைப்பண்டங்கள் முதலிய பல பொருள்களைக் காட்டவே, அவ்வெனிசு நகரப் பெருமக்கள் சிறிது நம்பிக்கை கொண்டனர். பொன்னின்பால் பெருமையும் மோகமும் கொண்ட அவ்வுறவினர்கள் மார்க்கோ போலோ கொடுத்த பரிசுகளை ஏற்று இவரைத் தம் உறவினருள் ஒருவராக நடத்த இசைந்தனர்.

ஆனல், மார்க்கோ போலோ வெனிசு நகரத்தில் நெடு நாள்கள் இருக்கவில்லை. போர் முரசு கொட்டியதால், இளைஞர்

**போரில் பெற்ற சிறைவாசம்**

யாவரும் நாட்டுப் போரில் கலந்து கொள்ள ஆணையிடப்பட்டனர். ஆகவே, நம் மார்க்கோ போலோவும் அரசினர் ஆணையின்படி அமர்க்களத்தில் அரும் பணி புரியச் சென்றூர். போர்க்கப்பல் தலைவனுக அமைந்து,

மாற்ருேடு பொருதார். ஆனல், துரதிட்டவசமாக, இவருடைய கப்பல் நாசமாக்கப்பட்டது. இவர் பக்கம் இருந்த போர் வீரர்கள் தோற்கடிக்கப்பட்டுச் சிறைபிடித்துச் செல்லப்பட்டனர். கி.பி.1296 ஆம் ஆண்டுச் சிறைபட்ட மார்க்கோ போலோ மூன்று ஆண்டு ஜினேவா சிறையில்[1] தவங்கிடந்தார் என்றே கூறலாம். அச் சிறையிலிருந்த ஆண்டுகளிலேதான், தாம் அதுகாறும் கண்டனவற்றைப் பிரெஞ்சு மொழியில் தமது நண்பராக இருந்த, பைசா[2] நகரத்தைச் சேர்ந்த ரொஸ்திசெல்லோ[3] என்பவரைக் கொண்டு எழுதி வைத்தார். அக் குறிப்புகளே பிற்காலத்தில் பலர் பலவாறு மொழி பெயர்க்க மூலமாக உதவிற்று.

**இறுதி நாள்கள்**

கி.பி.1299 ஆம் ஆண்டுச் சிறைமீட்சி பெற்றதும், மார்க்கோ போலோ தமக்குப் பிடித்த மங்கையொருத்தியை மணந்து இல்லறத்தை நல்லறமாக நடத்தி வந்தார். நிறைந்த செல்வமும், புகழும் படைத்திருந்ததால், வெனிசு நாட்டு வர்த்தகர்களிடையே அவர் சிறந்த நன் மதிப்பைப் பெற்று, நடுநாயகமாய் விளங்கி வந்தார். உயர்ந்த பதவியிலிருக்கும் அலுவலாளர் பலர், மார்க்கோ போலோவின் உதவியைப் பெரிதும் நாடி வந்தனர் என்றும், உதவியளிப்பதில் அவர் என்றுமே தயங்கியது கிடையாது என்றும் வரலாற்று உரைகள் நமக்குத் தெரிவிக்கின்றன. வீட்டுக்குக் குழாய் வைக்க வேண்டுமாயினுஞ் சரி, நாட்டுக்குச் சேனை தயாரிக்க வேண்டுமாயினுஞ் சரி, மார்க்கோ போலோவின் உருவமே யாவர் மனத்திலும் முன்னின்று, அவரையே யாவற்றிற்கும் தலைமை தாங்கிச் செய்யுமாறு அந் நாட்டு மக்கள் வேண்டலாயினர். இத்தகைய உயர்ந்த செல்வாக்கோடும், பண்பட்ட உள்ளத்தோடும், ஆதரவு அளிக்கும் மனப்பான்மையோடும் வாழ்ந்து வந்த மார்க்கோ போலோ, வாழ்வின் இறுதிக்கட்டத்தை அடைந்தார். இனித் தாம் வாழ முடியாதென உறுதியாக எண்ணி, தம் மக்களுக்கு உயில் ஒன்றை

[1] Genoa [2] Pisa [3] Rustigielo

எழுதி வைத்தார். மார்க்கோ போலோவின் மிகுந்த செல்வத்தைப் பங்காகப் பெற்றவர்கள் அவர் மனைவியான டோனுடாவும்,[1] அவர் பெண்கள் மூவரும் ஆவர். நோய்வாய்ப்பட்டுக் கிடந்த யாத்திரிகர் மார்க்கோ போலோ, கி.பி. 1324 ஆம் ஆண்டு—உயில் எழுதிய அதே ஆண்டில்—இவ்வுலகத்தை விட்டு நீங்கி, வேறுலகத்துக்கு மீளா யாத்திரையாகச் சென்று விட்டார். இறக்கும் பொழுது மார்க்கோ போலோவுக்கு வயது எழுபது நிரம்பப் பெற்றிருந்தது. அவரது சடலம் சான் லாரன்சோ[2] என்ற வேதக்கோயிலில்[3] அடக்கஞ் செய்யப் பட்டது.

ஆயினும், எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னர் மார்க்கோ போலோ எழுதிவைத்த வரலாறுகள், இன்றைக்கும் நமக்குப் புத்தம் புதியனவாகத் தோன்றுகின்றன. அதற்குக் காரணம், அவர் உண்மை நோக்கத்தோடு உள்ளத்தைப் பண்பட்ட முறையில் செலுத்திப் பரந்த நாட்டைத் தமது விரிந்த மனப்பான்மையால் கண்டு களித்துத் தாம் கண்டனவற்றைக் கண்டவாறே எழுதி வைத்ததுதான். பதின்மூன்றும் நூற்றுண்டில் நம் இந்தியாவின் நிலைமையையும், முக்கியமாக நம் தமிழகத்தின் சீரும் சிறப்பையும் பற்றி அவர் வரைந்திருப்பது நமது அறிவுக்கு ஒரு நல் விருந்தாகும். அவை யாவும் வரலாற்று ஏட்டில் பொன் எழுத்துகளால் பொறிக்கப்பட வேண்டியவை என்றுல் மிகையாகாது; முக்காலும் அது உண்மையே யாகும். வாழ்க மார்க்கோ போலோவின் அரிய அழகிய சொல் ஓவியங்கள்!

சிறப்பினுக்குக் காரணம்

---

[1] Donata [2] San Lorenzo [3] Church

# 2. மாபர் நாட்டில் மார்க்கோ போலோ

பதின்மூன்ரும் நூற்ருண்டில், பல்வளமும் பாங்குறப் பெருகிய தமிழ் நாட்டினை, அராபியக் கப்பலோட்டிகள், "மாபர்"[1] என்று வழங்கி வந்தனர். அப்பொழுது மதுரையை ஆண்டு வந்த மன்னன் சுந்தர பாண்டியன் ஆவான். அவன் பெரும்புகழுடன் மதுரையை ஆண்ட காலத் திலேதான் மார்க்கோபோலோ, அயல் நாட்டுத் தூதுவராகத்

---

1, MAABAR " மாபர் ' என்ற நாடு சில பிரதிகளில் 'மலபார்' என்று பிழையாக எழுதப்பட்டுள்ளது. ஆனல், 'மலபார்' என்ற நாட்டை மிகத் திருத்தமாகவே மற்ருெரிடத்தில் எழுதி வைத்திருக்கிருர். ஆகையால் மாபர் நாடு வேறு; மலபார் நாடு வேறு.

மாபர் நாடு என்பது திருநெல்வேலி, இராமேச்சுரம், நாகை, மகாபலிபுரம், மயிலாப்பூர் இறுதியாக உள்ள கடற்கரை நாடும் அவற்றை அடுத்துள்ள நாடு களும் ஆகும்.

மாபர் என்ற சொல் அரபு மொழிச் சொல்லாகும் என்றும், பொன், முத்து பவழம், நவரத்தினங்கள் விற்கப்படும் இடமே மாபர் நாடு என்று வழங்கப்பட்ட தாகவும் கூறப்படுகிறது. —(பெரிப்ளூஸ் ; அதி. 1 குறிப்பு-3, பக். 57)

இதுபோலவே ஜான்ஸிபார் அருகில் பொன் முத்து பவளம் விற்கப் பட்டதால், அந் நாடு மபாரிடிக் நாடு (Mapharittic Land) என்று வழங்கப் பட்டது.

ஆடம்ஸ் பாலம் (Adams Bridge) என்ற முக்கியமான முத்துக் குளிக்கப் படும் இடம் இராமேச்சுரம் அருகில் இருந்ததால் அவ்விடத்தைக் கொண்டு அக் கடற்கரைப் பிரதேசத்துக்கு மாபர் என்ற பெயர் இடப்பட்டிருத்தல் வேண்டும் எனச் சில அறிஞர்கள் கருதுகின்றனர்,

ஆனல். ஒன்றை மட்டும் நாம் நினைவில் வைத்திருத்தல் வேண்டும், மார்க்கோ போலோ தமிழ் நாட்டைச் சுற்றி வந்தது பதின்மூன்ரும் நூற்ருண் டின் பிற்பகுதியில் அல்லவா? அப்பொழுது சேர சோழர்களின் முடியாட்சி மறைந்து, பாண்டிய வமிசத்தினர் மட்டும் மதுரையை ஆண்டு வந்தனர், அவ்வாறு மதுரையை ஆண்ட மன்னனின் பெயர் சௌந்திரபாண்டியன் என்ப தாகும்.

அக் காலத்துக்கு நெடுங்காலம் முன்னரிருந்தே காஞ்சிபுரமும் அதையடுத் திருந்த மாகபலிபுரமும் முறையே பிரசித்தி பெற்ற நகரமாகவும் துறைமுக மாகவும் விளங்கி வந்தன என்று வரலாற்றுப் பேராசிரியர்கள் பலரும், ஆராய்ச்சி வல்லுநர் பலரும் வரைந்திருக்கின்றனர். ஆகவே, மகாபலிபுரம் என்ற சொல்லே மாபர் என்று திரிந்து வழங்கப் பெற்றது எனக் கொள்வதற்கு இடமுண்டு எனத் தோன்றுகிறது. ஏனெனில், மார்க்கோ போலோ ஒரு கப்பலோட்டி. அதுவும் சிறந்த பிரசித்தி பெற்ற மாலுமியும் கூட. ஆகவே அவர் இங்கு வந்தது கடல் வழியாகத்தான் என்பதை அவர் வாக்காலேயே அறியலாம், சிலோன் என்ற இலங்கையை இதற்கு முன்னர்க் கூறிவிட்டுப் பிறகு மாபர் நாடு என்பதை

விவரிப்பதால் மாபர் நாட்டிற்கும் அவர் கப்பலிலேயேதான் வந்தார் என்பதை யூகித்தறியலாம். கிழக்குக்கரையில் விளங்கிவந்த துறைமுகம் மகாபலிபுரம் அதாவது மாமல்லபுரம் அல்லவா?

சிலப்பதிகாரத்தில்,

"இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்"

—(கடலாடு காதை 141)

என்றலால் காவிரிப்பூம்பட்டினம் என்று கூறப்படும் செழும்பதி அருகில் கலங்கரை விளக்கம் ஒன்று இருந்ததாகவும் தெரிகிறது. ஆனால், பதின்மூன்றும் நூற்றாண்டில் அக் கலங்கரை விளக்கம் அழியப் பெற்று மகாபலிபுரம் சிறந்து விளங்கி, கப்பல்களுக்கு உதவியளித்து வந்தது எனச் சரித்திர வரலாறு கூறு கின்றது. இம் மகாபலிபுரத்தில் உள்ள கலங்கரை விளக்கத்தை இன்றும் நாம் கண் கூடாக் காணலாம். ஆகையால் மகாபலிபுரத்தையே சுருக்கமாகக் கூற வேண்டி, அதையே மாபர் எனச் சிதைத்துக் கூறினர் என்று கொள்வதே பொருத்தமுடையது.

(மாமல்லபுரம்-மகாபலிபுரம்-மகாபல்பூர்-மால்பூர் - மால்பர் - மாபர் என்று திரிந்து வழங்கியிருத்தல் வேண்டும்.)

சதுரங்கப்பட்டினம் ஆங்கிலத்தில் சாட்ராஸ் (Sadras) என்று வழங்குவதும், சென்னைப் பட்டினம் மெட்ராஸ் (Madras) என்று வழங்குவதும் இதற்குத் தக்க சான்றுகளாகும். மகாபலிபுரம் என்ற நீண்ட சொற்றொடரைச் சரியாக உச்சரிக்க முடியாமல் அதையே மாபர் என்று சுருக்கம் செய்து கூறினர் எனக் கொள்வது பொருத்தமான கொள்கையே.

மற்றும், மூவர் - அதாவது சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தர்கள் ஆண்ட நம் தமிழ் நாட்டினைக் குறிப்பதால், இதை மூவர் நாடு என்றும், அதுவே மாபர் நாடு என வருவி வழங்கலாயிற்று என்றும் சில அறிஞர்கள் கருது கின்றனர்.

மற்றுஞ் சில அறிஞர்கள் மறம்—அதாவது திண்மை வாய்ந்த மறவர் வாழ்ந்தநாடு—மறவ நாடு என்று கொண்டு, அதனையே அவர் மொழியில் மாபர் நாடு என எழுதி வைத்தார் என்றும் கொள்கின்றனர்.

எது எப்படியிருந்தாலும், மாபர் நாடு என்பது தமிழ் நாடே என்பதை மார்க்கோ போலோவின் வாக்கினாலேயே அறிகிறோம்,

சௌந்தரபாண்டியன் வரலாறு பின்வருமாறு கூறப்படு படுகிறது :

### 1. முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியன் :

இவன் (கி.பி. 1216—1238) மதுரை மாநகரில் வீற்றிருந்து, பாண்டி நாட்டை ஆண்டான். மாறவர்மன் என்னும் பட்டம் உடையவன். கி.பி. 1219-ல் சோழ நாட்டின்மீது போர்தொடுத்து மூன்றும் இராசராச சோழனைப் போரில் வென்று, உறையூரையும் தஞ்சாவூரையும் தீக்கிரையாக்கி விட்டான். கி.பி. 1231 ஆம் ஆண்டு மீண்டும் சோழ நாட்டின்மீது படையெடுத்தான். கி.பி. 1238-ல் காலமானான்.

### 2. இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் :

இவன் (கி.பி. 1239-1251) முதல் மாறவர்மனுக்குப் பின் அரசாண்டான்.

### 3. முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியன் :

இவன் (கி.பி. 1251-1271) மதுரையிலிருந்து பாண்டி நாட்டை ஆட்சி செய்தான். இவன் சிதம்பரத்திலும், திருவரங்கத்திலும் பல திருப்பணிகள் செய்துள்ளான். அக் கோபுரங்களுக்குப் பொன் வேய்ந்தான், அதனால் "கோயில் பொன் வேய்ந்த பெருமாள்" என்ற விருதுப் பெயரால் வழங்கப் பட்டான். கி.பி. 1271-ல் காலமானான்.

4. முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் :

இவன் (கி.பி. 1272—1311) மதுரையில் அரசாண்ட மாபெருமன்னன். இவன் ஆட்சிக் காலத்தில் பாண்டி ராச்சியம் செழிப்புற்றது. இவன் காலத்தில்தான் மார்க்கோ போலோ பாண்டி நாட்டில் பல நகரங்களைச் சுற்றிப் பார்த்து, இவன் ஆளுகையின் சிறப்பை எழுதியுள்ளார். மார்க்கோ போலாவின் காலத்தில் (கி.பி. 1254-1324) பாண்டிய மன்னர் ஐவர் இருந்தனர் என்றும், அவர்களுள் குலசேகர பாண்டியனே மூத்தவன் என்றும் அவன் இராச்சியத்தில் நடு நிலைமையுடன் செங்கோல் செலுத்தி வந்தான் என்றும், வணிகர்களுக்குப் பேருதவி புரிந்தான் என்றும் குறிப்புகள் காணப்படுகின்றன.

5. மாறவர்மன் குலசேகர பாண்டியன் :

இவன் ஆண்ட காலம் கி.பி. 1341—1346

6. மாறவர்மன் பராக்கிரம பாண்டியன் :

இவன் ஆண்ட காலம் கி.பி. 1347— 1352

7. மாறவர்மன் வீரபாண்டியன்

இவன் ஆண்ட காலம் கி.பி. 1353-1380. மகமதிய ஆசிரியர் வாசப் (Wasf) பாண்டி நாட்டிற்கு வந்து சில குறிப்புகளைக் கொடுத்துள்ளார் (கி.பி. 1310) :

''சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1296-1342) சடையவர்மன் வீர பாண்டியன் இருவரும் மாறவர்மன் குலசேகர பாண்டியன் புதல்வர்கள். இவர்களுள் வீரபாண்டியன் தன் மாற்றாந்தாயின் மகன், இளைஞன், அவனுக்குப் பட்டம் கட்டியதை வெறுத்துத் தன் தந்தையைக் கொன்றுவிட்டான். கொன்று கி. பி 1310-ல் அரியணை ஏறினான்.''

சுந்தரபாண்டியனுக்கும், வீரபாண்டியனுக்கும் போர் ஏற்பட்டது. அதில் சுந்தரபாண்டியன் தோல்வியடைந்ததால், டில்லியில் ஆண்ட அலாவுதீன் கில்ஜியின் (கி.பி. 1296-13'6) படைத் தலைவனான மாலிக்காபூரைத் தென்னாட்டின்மீது படையெடுக்குமாறு அழைத்தான். பாண்டி நாடு (கி.பி. 1311) மகமதிய தளபதியால் கொள்ளையடிக்கப்பட்டது.

சுந்தரபாண்டியனுக்குப் பிறகு வீரபாண்டியன் ஆட்சி செய்தான். வீர பாண்டியன் ஆட்சியின் பிற்பகுதியில், மகமதியத் தலைவன் சலாலுடின் அசன்ஷா என்பவன் மதுரையைக் கைப்பற்றினான். அவன் டில்லி அரசனான மகமது பின் துக்ளக் (கி.பி. 1325-1351) என்ற அரசனால் அனுப்பப்பட்டான். அவன் மதுரையை வென்று, டில்லி அரசரின் பிரதிநிதியாக மதுரையிலிருந்தே ஆளத் தொடங்கினான்.

இதன் பிறகு பாண்டியர் ஆட்சி வெகுவாக வீழச்சியுற்றது

—(பாண்டியர் வரலாறு ; T.V. சதாசிவ பண்டாரத்தார், பக்கம் 152—155)

&

—(An Advanced History of India, By R.K. Mukerjee, M.A. pp. 305-306).

இதனால் செந்தர்பாண்டி என்பது சுந்தரபாண்டியன் என்ற பெயரையும், குலசேகரபாண்டியன் என்ற பெயரையும் குறிப்பதாகக் கொள்ளப்படுகிறது, ஆனால் 'செந்தர் பாண்டி' என்றே மார்க்கோபோலோ கூறுவதால், சுந்தர பாண்டியன் என்ற அரசனைச் சுட்டுவதாகவே கொள்ளவேண்டும்.

தமிழ் நாட்டு எல்லைக்குள் வந்தார். இங்கிருந்து, இலங்கை முதலிய இடங்களுக்குச் சென்றார். அவர் கண்டனவற்றை அழியாச் சொற்களால் எழுதிவைக்க ஏற்பாடுகள் செய்தார் என்பதை முன்னரே அறிந்தோம் அல்லவா? அவ்வாறு, மார்க்கோ போலோ, நம் தமிழ் நாட்டினைப் பற்றிக் கூறிய வரலாற்றினை ஈண்டு நோக்குவோம் :

"செய்லான்[1] தீவினை விட்டகன்று மேற்கு முகமாக அறுபது மைல், கப்பற் பயணம் செய்தால், மாபர்[2] என்ற பெருநாட்டை நீவிர் அடைவீர். இத் திரு நாடு ஒரு தீவு அன்று. பரந்த இந்தியாவின் ஒரு பாகமே ஆகும். இது பண்பாட்டிலும், மாட்சிமையிலும் சிறந்த நாடாகக் கருதப்பட்டு வந்தது. இந் நாட்டினை நான்கு வேந்தர்கள் அரசு நடாத்தி வந்தனராயினும், அவர்களில் செந்தர் பாண்டி[3] என்றவனே முக்கியமானவனும், தலை சிறந்த அரசனுமாவான். அவன் ஆளும் நாட்டின் எல்லைக்குள், மாபருக்கும் செய்லானுக்கும் இடையே, முத்துக் குளிக்கும் இடம் ஒன்று உண்டு. அஃது ஒரு வளைகுடாப் போல் தோற்றமளிக்கும். அவ் வளைகுடாவிலே கடலின் ஆழம் பத்திலிருந்து பன்னிரண்டு பேதம்ஸ்[4] வரையில் இருக்கும். சிற்சில இடங்களில் இரண்டு ஆள் ஆழம்கூட இருப்பதில்லை.

**நாட்டின் நிலைமை**

மீன் பிடிக்கும் பரதவர் தொழிலும், முத்துக் குளிப்பும் பின்வருமாறு நடைபெறுகின்றன :

சிறுசிறு கூட்டங்களாக வணிகர் பலர் குழுமி, பற்பல அளவுள்ள கப்பல்களையும் படகுகளையும் தங்கள் வாணிகத்துக்கு வாடகையாக அமர்த்திக் கொள்வர். இக் கப்பல்கள் யாவும் அடிப்பாரம் தரைசாம்பி[5] நங்கூரம் பாய்ச்ச வசதி பெற்றனவாக இருக்கும். மற்றும் முத்துக் குளிப்பதில் அனுபவம் உடையராயும், அக் கலையில்

**முத்துக் குளிக்கும் தொழில்**

---

[1]Zelian (Ceylon)-இலங்கை [2] தமிழ் நாடு [3] Sender Pandi - சௌந்தர பாண்டியன். (விவரம் பக்கம் 11-12 பார்க்கவும்,)

[4] Fathom - ஆறடி கொண்ட ஓர் அளவு.

[5] Ground tackle - பொருள்களை மேலே இழுக்கும் ஒருவிதக் கயிறு. A kind of crane or pulley.

வல்லுநராயும் உள்ளவர்களே அமர்த்தி, இக் கப்பல்கள் வேலே மேல் செல்லும். வலேயால் ஆக்கப்பட்ட பைகளில் சிப்பிகளே இட்டு, அவ்வலேகளேத் தங்கள் உடலிற் கட்டிக் கொண்டு, அடிக்கடி கடலின் மேல் மட்டத்திற்கு வருவார்கள். மூச்சு விட முடியாத நிலேமையில், அவர்கள் கடல் மட்டத்துக்கு மேல் வந்து, மூச்சு இழுத்து, மீண்டும் உள்ளே சென்று மூழ்கி முத்துக் குளிப் ர். இம் முத்துக் குளிப்பு நாள் முழுவதும் நடந்தேறும். அவர்கள் இதில் விடாப்பிடியாக முனேவர். இவ்வாறு அவர்கள் அப் பருவத்தில் சேகரிக்கும் சிப்பிகள் எல்லா நாடுகளுக்கும் தேவையான முத்துகளேக் கொடுக்கும் அளவுள்ளனவாக இருக்கும். இத் துறையில் வளேகுடாவில் கிடைக்கப் பெறும் முத்துகள் பெரும்பாலும் நல்ல ஒளியும் திடமும், கனமும் உள்ளவனவாக இருக்கும். சிப்பிகள் மிகப் பெருவாரியாக எடுக்கப்படும் இடத்துக்குப் பேதலா[1] என்று பெயர் வழங்கப்படும். அது தாய் நாட்டின் கடற்கரையில் உள்ளது. அவ்விடம் முதற்கொண்டு அச் சிப்பி எடுத்தலும், மீன் பிடித்தலும். தெற்கு முகமாக அறுபது மைல்கள்[2] வரையிலும் நடைபெறுகிறது.

**முத்துக் குளிக்க ஏற்பாடு**

இக் குடாவில் அளவிற் பெரிய மீன்கள் பெருவாரியாக நிறைந்திருப்பதால், அவை முத்துக் குளிப்பவர்களே அடியோடு கொன்று விடுகின்றன. இக் கேட்டினேத் தவிர்க்கும் பொருட்டு அவ் வணிகர்கள் தங்களுடன் மந்திரத்தால் வசியம் செய்யும் பலரை அழைத்துச் செல்வர். பார்ப்பனக் குடியைச் சேர்ந்த இம் மந்திரவாதிகள் அம் மீன்களின்மீது தாங்கள் கற்ற வித்தையை ஏவி, அதனல் மீன்களேத் தம்வயப்படுத்தி, முத்துக் குளிப்போருக்கு யாதொரு தீங்கும் நேரிடாதவாறு தடுத்துப் பாதுகாக்கின்றனர், முத்துக் குளிப்பது பகலில் மட்டுமே நடைபெறும், அதன் காரணமாக இவர்கள் மாலே வேளேகளில் அம் மந்திரத்துக்குச்

---

[1] **Betala** - தூத்துக்குடித் துறைமுகத்துக்கும் இராமேச்சுரத்துக்கும் இடையில் உள்ள ஆழமான பாதலம் என்ற கடற்பகுதி. இப்பொழுது அப் பெயர் வழக்கில் இல்லே.

[2] இலங்கையின் கிழக்குப் பாகத்தையும் சேர்த்துக்குறிப்பிடுகிருர் போலும்.

சக்தி யாதும் இல்லாமல் போகும்படி செய்து விடுகின்றனர். பகலில் நடப்பது போல் இரவிலும் நடக்கும் என நம்பி இராக் காலத்தில் முத்துச் சிப்பிகளைக் கவர வரும் வணிகர்களும் திருடர்களும் அம் மீன்களுக்கு இரையாவார்கள் என்றும், நம்பிக்கை கொண்டு விளங்குகின்றனர். இம் மந்திரவாதி கள் ஏனைய பறவைகளையும், மிருகங்களையும், நஞ்சு மிக்க நாகங்களையும் நயமாக வசியம் செய்யும் சக்தி வாய்ந்தவர் களாகக் காணப்படுகின்றனர்.

**முத்துக் குளித்தல்**

இத்தகைய முத்துக் குளித்தல் மே மாதம் இடையில் துவங்கும். இதில் ஈடுபட விரும்புவோர் அரசனிடம் தகுந்த அத்தாட்சிப் பத்திரம் வாங்கியே அதில் ஈடுபடவேண்டும். அரசன் அவ்வாறு கிடைக்கும் வருவாயில் பத்தில் ஒரு பங்கினையே, தனக்கென பெற்றுக் கொள்வான். முத்துக் குளிப்பவர்கள் தாங்களே அப் பணத் தைத் தனியாக ஒதுக்கி வைத்துக் கொடுத்து விடுவார்கள், மேற்கூறிய பருவம் முடிவதற்கும், இக் குடாவில் முத்துக் குளித்தல் முடிவடைவதற்கும் சரியாக விருக்கும். இக் காலத்துக்குள் அக் குடாவில் உள்ள முத்துச் சிப்பிகள் யாவும் எடுக்கப்பட்டுவிடும். ஆகவே, அவர்கள் இங்கு முத்துச் சிப்பி தீர்ந்துவிட்ட காரணத்தால், தங்கள் கப்பலை வேறு இடங்களுக்கு ஓட்டிச் செல்வார்கள். முன்பு முத்துக் குளித்த இடத்திலிருந்து அவ்விடம் ஏறக்குறைய முந்நூறு மைல்கள் தொலைவு உள்ளதாக இருக்கும். அப் புதிய இடத்தில் அவர்கள் செப்டம்பர் அக்டோபர் மாதங்களில் முத்துக் குளிப்பார்கள். அரசன் மேற்கூறியபடி பத்திலொரு பங்கைப் பெறுவதோடு அம் முத்துகளில் நல்ல பெரிய வடிவான சில வற்றைப் பெறவும் உரிமை படைத்துள்ளான். அவ்வாறு பொறுக்கப்பட்டு எடுத்துக் கொள்ளப்படும் முத்துகளுக்கு அரசன் தனியான சலுகை காட்டி, அவற்றிற்கேற்ற விலையாக நிறையப் பொருள் தருவதால், அத்தகைய முத்துகளை அரசனிடம் கொண்டு காட்டுவதில் வணிகர்கள் எவ்வித மனக்கசப்பும் கொள்வதில்லை.

மாபர் நாட்டின் இப்பகுதியில் உள்ள ஆதிக் குடிகள் மானத்திற்காகக் காக்க வேண்டிய உறுப்புகளை மட்டும் சின்னஞ்சிறு துணியொன்றினுல் மறைத்துக் கொள்வர். மேலும் அவர்கள் எப்பொழுதும் அரை நிர்வாண நிலையிலேயே செல்கின்றனர். அரசன் அவர்களை விட விலை மிக்க துணியினை அணிந்து கொண்டிருக்கிருன் என்பதைத் தவிர அவன் அதிகமான துணிகளை எம் முறையிலும் அணிந்து கொள்வதில்லை. ஆனுல் பல்வகை அணிகளாலும் முத்துகள், வைரம், வைடுரியம் முதலிய நவ மணிகளால் அலங்கரிக்கப்பட்ட ஆபரண வகைகளாலும் மேன்மைப் படுத்தப்பட்டு, பெருமிதத்துடன் காட்சியளிக் கின்ருன். மற்றும் அவ்வரசனது கழுத்திலிருந்து மார்புவரை எட்டும்படியான பட்டு நூலில் கோக்கப்பட்ட 104 மணிகள்[1] கொண்ட மாலை பலவகையான வைரங்களாலும், கோமேதகங் களாலும் ஆனது. இந்த எண்ணுடைய மணிகளை அரசன் அணிவதற்குக் காரணம் ஒன்று உண்டு. அதாவது அவன் தினமும் தன் தேவதையை மகிழ்விக்க, தான் போட்டுக் கொண்டிருக்கும் ஆரத்தில் உள்ள மணிகளைக் கைகளில் உருட்டிக்கொண்டே அத்தனை தரம் செபிக்கவேண்டும் என்பதே. இன்னும் அவ்வரசனுடைய முன்னேர் இச் செபம் செய்வதினின்று என்றும் தவறியதே கிடையாது என்று பரம்பரை நம்பிக்கை ஒன்று உண்டு. இவ்வாறு தினந்தோறும் செபிக்கப்படும் மந்திரத்தில் காணப்படும் சொற்கள் பகவுதா[2] என்பதாகும். இம் மந்திரச் சொற்களை அவர்கள்

இப்பகுதியின் மக்களும் அரசனும்

[1] நம் நாட்டில் 108 என்ற எண்ணிக்கைக்கே முக்கியத்துவம் நெடுநாள் களுக்கு முன்பிருந்தே கொடுக்கப்பட்டு வந்திருப்பது யாவரும் அறிந்ததே. (1) திருப்பதிகள் 108 (2) காயத்திரி மந்திரங்கள் செபிப்பது 108 (3) கோவிலில் அர்ச்சனை 108 (4) ஹோமம் செய்வதில் 108 அவிசுகள் (5) பிள்ளையாருக்குத் தேங்காய் உடைத்தலில் 108; ஆக இங்ஙனம் பல. ஆனுல் மார்க்கோ போலோ 108 என்பதை மறதியாக 104 என்று கூறுகிருர் போலும்.

[2] பகவுதா - பகவான் என்ற சொல்லின் சிதைவாக இருத்தல் வேண்டும். தெலுங்கில் பகவந்துடு (கடவுள்) என்றிருப்பதை நோக்குக. ஆதலால் கடவுளைக் குறிக்கும் ஒரு சொல்லாக இதைக் கொள்ளவேண்டும். மற்றும் ஒவ்வொரு மந்திரங்களின் பின்பு சொல்லப்படும் ''ஓம்'' என்னும் பிரணவ மந்திரத்தைக் குறிப்பிடுவதாகவும் கொள்ளலாம்.

தினமும் 104 முறை[1] செபிக்கின்றனர். ஒவ்வொரு தோளிலும் முத்தாலும் வைரத்தாலும் அழகு செய்யப் பட்ட மூன்று பொன் வளையங்களையும் அணிந்திருக்கிறான். காலிலும் மூன்று வேறு வேறான இடங்களிலும், அவ்வாறே பொன் வளையங்களையும் அணிந்திருக்கிறான். அவனது கால்களிலும், கை விரல்களிலும், விலை மதிக்க முடியாத மிக உயர்ந்த கழல்களையும் மோதிரங்களையும் அணிந்து கொள்கின்றான். அவன் அணியும் முத்துகளும் இரத்தினங்களும் தன் சொந்த நாட்டின் பொருள் ஆனதால், அவ்வளவு பெருமையாக - அரச சின்னங்களைப் பகட்டாக- வெளிக் காட்டிக் கொள்வது அரசனுக்கு மிகமிக எளி தாகவே தோன்றுகிறது.

### வேந்தன் பணியாளரின் வரலாறு

அரசன் தன்னைச் சுற்றிலும் பற்பல வீரர்களைப் பாதுகாப்புக்காக வைத்திருக்கின்றான். அவர்களுக்கு "வேந்தர்க்கு வேண்டியவற்றை வேண்டியவாறு இம்மை யிலும்,மறுமையிலும் செய்யும் பக்திகொண்ட பணியாளர்," என்ற விருது அளிக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் அரசனை எப்பொழுதும் - அரண்மனையிலும், நீதித் தலத்திலும், மற் றும் இராப்பொழுதிலும் கூட—காக்கக் கடமைப்பட்டவ ராவர். அவர்கள் குதிரைமீது இவர்ந்து வருவர். அன்னார் அரசாங்கக் காரியங்கள் யாவற்றிலும் எல்லாத் துறை களிலும் அதிகாரம் வகித்து ஆட்சி செலுத்துகின்றனர். அரசன் இறந்ததும் அவன் சடலத்தைக் கொளுத்தும் சடங்கு நடை பெறும். அப்பொழுது, மேற்கூறிய உண்மை மெய்க்காப்பாளர்கள், அரசன் உடல் வேகும் தீயில் திட மனத்துடன் குதித்து, அவ்வரச உடலுடனே தாமும்

---

[1] 108 என்று இருத்தல் வேண்டும்; மீண்டும் மறதியாக 104 என்று கூறுகிறார்.

சாம்பலாகிவிடுவார்கள். இதனால் அவர்கள் அவ்வரசனுடனே வேறு உலகத்துக்குச் சென்று, மீண்டும் அவ் வேந்தன் இவ்வுலகில் பிறந்திடும்போது, அப்பெரும் பணியாளர்களும் அரசனுக்காகவே ஊழியம் செய்யப் பிறந்திடுவார்கள் என்ற திடமான நம்பிக்கை அவர்களுக்கு உண்டு.

## தன் முயற்சியே சிறந்தது

பின் வரும் பழக்கமும் அவர்களிடம் காணப்படுகிறது. அரசன் மரணமடைந்தவிடத்து, அவனுக்குப் பிறகு அர்ச பதவி வகிக்கும் அவன் மைந்தன் தன் தந்தை சேமித்து வைத்த செல்வத்தைத் தீண்டும் வழக்கமே கிடையாது. அவ்வாறு பிறர் சேமித்துவைத்த செல்வத்தால் தான் வாழ்வதாக நாடு நினைப்பது தன் உரிமைக்கும் பெருமைக்கும் இழுக்காகும் என்பதே. மற்றும், தந்தையின் செல்வத்தைத் தனயன் பெருக்கவேண்டியதே தவிர, அதை வைத்துக் கொண்டு வாழ முயல்வது தவறு என்றும் நினைப்பர். இன்னும் தந்தைபோலத் தானும் நிதிச்சாலையை நிரப்பச் சிறந்த முயற்சிகள் யாதும் எடுக்கவில்லை என்ற தவறான எண்ணம் மக்களிடையே ஓங்கி நிற்கும் என்று அதைத் தவிர்க்கவே, தந்தை விட்டுவைத்த செல்வத்தைத் தனயன் தொடுவதில்லை இத்தகைய சிறந்த மனப்போக்கின் மாட்சிமையால், தலைமுறை தலைமுறையாய், வழி வழியாய்ப் பெருஞ்செல்வம் சந்ததிகளால் சேமிக்கப்படுகிறது என்ற கொள்கை பலராலும் போற்றப்பட்டு வருகிறது.

## குதிரை வாணிகம்

இந் நாட்டில், குதிரைகள் பிறந்து வளர்க்கப்படுவதில்லை. அனேகமாக இந் நாட்டில் குதிரைகள் பிறக்கவும் விடுவதில்லை. அரசனும், அவனுடைய மூன்று அரசியல்

சகோதரர்களும் ஆர்மஸ்,[1] தியூபார்,[2] பெசர்,[3] ஆதென்,[4] என்ற துறைமுகங்களிலுள்ள வணிகர்களிடமிருந்து குதிரைகளை வாங்கப் பெருவாரியான தொகையைச் செலவிட்டு நல்ல குதிரைகளை நாட்டின் நலத்துக்காகத் திரட்டிவைக்கிருர்கள். இவர்கள் இவ்வாருக ஐயாயிரம் குதிரைகள் வரை இறக்குமதி செய்து, ஒவ்வொரு குதிரைக்கும் ஐந்நூறு சாகி[5] என்ற அளவுள்ள பொன்னைப் பெற்று வாணிகத்தில் பெருத்த ஊதியத்தை நியாய முறைகளால் அடைகிருர்கள். இவ்வாறு வாங்கப் படும் ஐயாயிரம் உயர்ந்த குதிரைகளுள், அவற்றைச் சரியாகப் பாதுகாக்கும் காவலாளர் அருகிப்போவதாலும், அவற்றுக்குக் கொடுக்கப்படும் மருநது வகைகள் கிடைக் காமல் போவதாலும், ஏறக்குறைய முந்நூறு குதிரைகளே எஞ்சி நிற்கின்றன. அதன் காரணமாக, புதியனவாகப் பல குதிரைகள் வாங்கும் அவசியம் உண்டாகிறது. ஆனல் அராபியநாட்டுக்குதிரைகள் இந்த நாட்டுச் சீதோஷ்ண நிலை ஒத்துக் கொள்ளாமல் இறந்துவிடுகின்றன என்றே நான் எண்ணுகிறேன். அதன் காரணமாக இந் நாட்டிலேயே, குதிரை வளர்ப்பு வகைகள் நடை முறையில் ஏற்றுக் கொள்ளாமல் கைவிடப்பட்டன. குதிரைகளை வளர்ப்பதும், வாழவைப்பதும் முடியாத காரியமாகவே விளங்குகிறது. அவற்றின் தீனிக்கு இறைச்சி கலந்த அரிசிச் சோற்றையும், வேறு சில தீனிகளையும் கொடுக்கின்றனர். ஏனெனில், அரிசியைத் தவிர வேறு தானியங்கள் இங்குப் பயிரிடப் படுவதில்லை. இந் நாட்டில் பிறக்கும் குதிரைக் குட்டி களின் கால்கள் நீண்டும், வயிறு பெருத்தும், அழகற்றன வாய்ச் சவாரி செய்யப் பயனற்றனவாயும் பிறக்கின்றன.

---

[1] Ormus [2] Diufar [3] Pecher [4] Aden

[5] Sagi-ஒன்றரை ருபாய் பெறுமானமுள்ள ஒரு நாணயம்.

இம் மாபர் நாட்டின் மண்வாசியே இதற்கு முக்கியக் காரண மாகும்.

## தண்டனை நிறைவேற்றும் முறை

இவ்விடங்களில் பின்வரும் வியப்பிற்குரிய வழக்கம் நடைமுறையிலிருந்து வருகிறது குற்றஞ் சாட்டப் பட்டவன் நீதித் தலத்தில் மரண தண்டனை அளிக்கப் பட்டவுடன், கொலைக் களத்துக்கு அழைத்துச் செல்லப் படுவான். அப்பொழுது, தனக்குகந்த தெய்வத்துக்காகத் தன்னைப் பலிகொடுக்க விரும்பினுல், அச் செய்தியை அவன் முன்னதாகவே தெரிவித்து விடவேண்டும். இதையறிந்த அவனுடைய உற்ருரும், பெற்ருேரும், உறவினரும், நண்பரும் ஒருங்கு சேர்ந்து அவனைத் தனிப்பட்ட ஒருவகை நாற்காலியில் உட்காரவைத்து, கூராக்கப்பட்ட-உறுதியும், கொடுமையும் வாய்ந்த-பன்னிரண்டு கத்திகளை அவன் கையில் கொடுப்பார்கள். இவ்வேற்பாடுகளுடன் அக் குற்ற வாளியை அவர்கள் நகரத்தைச் சுற்றி ஊர்வலமாக எடுத்துச் செல்வார்கள். எடுத்துச் செல்லுகையில், அவர்கள் உரத்த குரலில் "இந்த வீரப் பெருமகன் தன் தெய்வத்தின் மீதுள்ள தீவிர பக்தியால் தன்னைத்தானே பலியாகக் கொடுக்க முன்வந்திருக்கிருன்,'' என்று கூச்சலிட்டுக் கும்பல் கூடிச் செல்வார்கள்.

கொலைக்களத்தை யடைந்ததும், அக் குற்றவாளி தன் கைகளில் கொடுக்கப்பட்ட பன்னிரண்டு கத்திகளில் இரண்டினை எடுத்துக் கையில் பிடித்துக் கொண்டு "என் தெய்வத்துக்காக என்னை அரிய பலியாக அர்ப்பணிக் கிறேன்,'' என்று உரத்த குரல் எழுப்பி, ஒவ்வொரு கத்தி யையும் தனது ஒவ்வொரு தொடையிலும் வேகமாகவும், சுருக்கெனவும் குத்திக்கொள்வான். பிறகு இரண்டு

கத்திகளை எடுத்து, அவற்றைத் தனது ஒவ்வொரு கைகளிலும் ஏற்றிக்கொள்வான். இதே விதமாக, வயிற்றிலும், மார்பிலும் குத்திக்கொள்வான். ஒவ்வொரு செயலிலும், தான் முன்பு அறை கூவின அதே சொற்களை உரக்கக் கத்துவான். எஞ்சி நிற்கும் கத்திகளை எடுத்து உடலின் பல்வேறு பாகங்களிலும் இவ்வாறு பாய்ச்சிக்கொண்டு, கடைசியாக எஞ்சி நிற்கும் கத்தியினை எடுத்துத் தன் இருதயத்தில் மிக வேகமாகச் செலுத்தி, உடனே மாண்டு போவான்

## ஆணும் பெண்ணும் ஒருங்கே இறத்தல்

இக்காட்சி நடந்தேறியதும், இறந்தவனுடைய சுற்றத்தினர் அவனுடலைக் கொளுத்துவதற்கு எக்காளத்தோடும் ஆரவாரத்தோடும் எடுத்துச் சென்று, மயானத்தில் கொண்டு சேர்ப்பர். இறந்தவனுடைய ஆருயிர் மனைவி, தன் கணவன்மீது கொண்ட அன்பின் மேலீட்டால், எரியும் தீயில் துண்ணென விழுந்து தானும் தன் கணவன் சடலத்துடன் சாம்பலாகி விடுவாள். இத்தகைய திண்மையான கற்பினுக்கு எடுத்துக்காட்டாய் நிற்கும் பெண் திலகங்களைச் சமூகமும் சீரிய முறையில் பாராட்டுகின்றது. ஆனல் அதற்கு மாருக, அத்தகைய உடன்கட்டை ஏற மனமில்லாது வாழும் பெண்களைச் சமூகம் அவமானத்துக்குள்ளாக்கி, அழியாப் பழிக்கு ஆளாக்கிவிடுகிறது.''

---

# 3. மாபர் நாட்டில் மக்கள் வாழ்க்கை

## பலவகைப் பண்பாடு

"இம் மாபர் நாட்டில், விக்கிரகங்களையும் சிலைகளையும் வணங்கும் ஆதி வாசிகளில் பெரும்பாலோர் மாட்டினிடம் பயபக்தி காட்டி, அதற்கு மரியாதை செய்வர். எந்தக் காரணம் கொண்டும், அவர்களை மாட்டிறைச்சி உண்ணும்படி செய்வது அரிதினும் அரிதே. ஆனால், அக் குடிகளில் "கவுஇ"[1] என்று தனிமையான ஒரு சாதியார் காணப்படுகின்றனர். அச் சாதி மக்கள் மாட்டின் இறைச்சியைத் தின்றாலும், அவ்விலங்கை எவ்வாற்றானும் கொல்ல மனம் ஒருப்படுவதில்லை. ஆயினும் இயற்கையாகவோ அல்லது வேறு விதத்தாலோ இறந்து கிடக்கும் அம் மாட்டின் சடலத்தை அக் 'கவுஇ' க்கள் சமைத்து உண்பார்கள். எச்சாதி மக்களும் பசுமாட்டுச் சாணத்தைக் கொண்டே வீட்டை மெழுகுவார்கள் தரை மீது உட்காரும்போது பாயோ, சமுக்காளமோ விரித்து உட்காருவார்கள். அவ்வாறு உட்காருவதின்

---

[1] GAUI—"கவுஇ"-மாடு தின்னும் புலையரைக் குறிக்கும் ஒரு சொல்லாகும். கோஹத்தி, கோமாரா என்பன பசுவின் தொடர்பைக் கொண்ட சொற்கள். தமிழில் கோன், கோபாலன் என்ற வடமொழிப் பிறந்த சொற்களும் 'கோ' என்ற சொல்லின் அடிப்படையாகப் பிறந்த சொற்களே. ஆக, 'கோ உரி' என்ற சொல் (பசுத் தோல் உரிப்பவர் என்று பொருள்) சிதைந்து கவுஇ என்று எழுதப் பட்டிருக்க வேண்டும். மற்றும், 'ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்' என்று திருநாவுக்கரசர் **தனித்திருத் தாண்டகத்**தில் கூறியிருப்பதும் நோக்கத் தக்கது.

காரணத்தை வினவின், அதற்கு அவர்கள், "பூமியினின்றும் நாம் தோன்றி, அப் பூமிக்குள்ளேயே கடைசியில் மண்ணோடு மண்ணாக மறைந்து போவதால், பூமிக்குத் தகுந்த மரியாதை கொடுத்தல் நமது கடமையாகும். மற்றும், அது நம் தாய் போல் ஆவதால், அதன்மீது ஆசன மிலலாது உட்காருவது பெருங்குற்றமாகக் கருதப்படும். ஆகையால், தரைமீது ஆசனமிட்டு அதன்மீது உட்காருவது மிகப் பெருமைதரும் செயலும், நம் நாட்டுப் பண்பாடும் ஆகும்,'' என்று காரணங் கற்பிப்பர்.

### திட நம்பிக்கை

அக் 'கவுஇ' க்களும் அவர்களுடைய இனத்தவர்களும் இறைவன் இயல்பை எடுத்துரைத்த தாமஸ் முனிவரைக்[1] கொன்றவர்களின் வர்க்கத்தில் வழி வழிவந்தவர்களே. இக் காரணம் பற்றி அவ்வினத்தாரில் எவரும் அருளடைந்த தாமஸ் முனிவரின் திருமேனி அடக்கம் செய்யப்பட்டிருக்கும் புனித கட்டடத்திற்குள் நுழைய முடியாது. திண்மை வாய்ந்த பத்துப் பெயர்கள் தங்கள் பலமெல்லாம் கொண்டு அவர்களில் ஒருவனை உள்ளே பிடித்துத் தள்ளினாலும், தெய்வாம்சம் அடைந்த அத் தாமஸ் முனிவரது புனித சடலத்தின் ஆற்றல் அவனை வெளியே சுருக்கெனக் கொணர்ந்து தள்ளிவிடும்.

### கொல்வதில்லை; தின்பதுண்டு

இந் நாடு அரிசியும், எள்ளும்[2] தவிர வேறெதையும்

---

[1] Saint Thomas. [2] Sesame என்று அவர் எழுதியிருக்கிறார். திலம் என்பது எள்ளைக் குறிக்கும் சமஸ்கிருத மொழி. அது ஹிந்துஸ்தானி மொழியிலும் இடம் பெற்றுள்ளது; எண்ணெயை உண்டாக்க உதவும் 'எள்' என்ற தமிழ்ச் சொல்லும் 'தில்' என்ற பிறமொழிச் சொல்லும் Sesame என்றதையே குறிக்கிறது.

விளைவிப்பதில்லை. ஆடை எதுவும் அதிகம் அணிந்து கொள்ளாமல் ஈட்டியும், கேடயமும் தாங்கி, அம் மக்கள் மெதுவாகப் போருக்குப் புறப்படுவர். அதனால் அவர்கள் போர் என்றாலே பின்வாங்கும் கோழைச் சாதியினர் ஆவர். எந்த விதமான பிராணியையும் உணவுக்காகக் கொல்வது அவர்களுக்கு வழக்கமில்லை. ஆனால் அவர்கள் ஆடு, பறவை முதலியவற்றின் இறைச்சியை உண்ண விரும்பின், அத்தகைய வழக்கிற்குப் புறம்பான சாரசன்[1] என்ற துருக்கியர்களை அவ்வகைத் தொழிலிற்குப் பயன்படுமாறு அமர்த்திக் கொள்வார்கள்.

## உடற் சுத்தம்

ஆண்கள் பெண்கள் என்னும் இருபாலாரும் தங்கள் உடலினை நாள்தோறும் இருமுறை காலையிலும் மாலையிலும் தேய்த்துக் குளிப்பர். இத்தகைய குளித்தல் முடிவு பெறாதவரையில், அவர்கள் நீர் அருந்துவதோ, அன்றைய உணவு உண்பதோ கிடையாது. இத்தகைய வழக்கத்தையும் விதியையும் நடைமுறையில் மேற்கொள்ளாதவர்கள் மதத்தை அவமதித்த சண்டாளர்களாகக் கருதப்படுகின்றனர்.

## உணவருந்தும் வகை

ஒன்றை மட்டும் சற்று நோக்குங்கள். அவர்கள் உணவருந்தும்போது, தங்கள் வலக்கை ஒன்றினை மட்டுமே பயன்படுத்துவார்களேயன்றி, தமது இடக் கையால் உணவை எக் காரணத்தாலும் எப்பொழுதும் தொடவே மாட்டார்கள். தூய்மை பொருந்திய மேன்மையான

---

[1] Saracen - சிரியா நாட்டுத் துருக்கிய சாதியினர்.

காரியங்களுக்கெல்லாம் வலக் கையையும், மற்றைய இழி வான காரியங்களுக்கு இடக் கையையும் பயன்படுத்துவர்.

## நீர் பருகும் முறை

ஒவ்வொருவரும் தமக்கென வைக்கப்பட்டிருக்கும் தனியான செம்பிலிருந்தே தண்ணீர் பருகுவர். ஒருவன் தண்ணீர் அருந்தின பாத்திரத்தை மற்றவன் உபயோகிக்க மாட்டான். நீர் பருகும்போது, அவர்கள் பாத்திரத்தை நேரடியாக வாயில் வைத்துக் குடிப்பதில்லை. ஆனல், அதைத் தங்கள் தலைக்கு மேலாகப் பிடித்துக்கொண்டு, பாத்திரத்தில் இருக்கும் பானத்தை நேரடியாக வாயின் வழியாகத் தொண்டைக்குச் செல்லுமாறு தூக்கிக் குடிக் கின்றனர். இதனுல் அப்பாத்திரம் எச்சில் படுவதில்லை. அயலான் எவனுக்காகிலும் அருந்த நீர் கொடுக்க வேண்டு மாயின், அப் பாத்திரத்தை அவன் கையில் கொடுத்து விடுவ தில்லை. அவனுக்குச் சொந்தமாகப் பாத்திரம் யாதொன்றும இல்லாத விடத்து, பானத்தை அவனது குவித்த கைகளில் ஊற்ற, அதை அவன கிண்ணத்திலிருந்து குடிப்பதுபோல் குடிப்பான்.

## கடன்பட்டார் கடமை

குற்றங்களுக்கு விதிக்கப்படும் தண்டனைகள் மிகக் கடுமையாகவே இருக்கும். சிறந்த நீதி செலுத்தப்பட்டு அத் தண்டனை பிறர்க்கும் ஓர் எடுத்துக் காட்டாயும், அச்சத்தை விளைவிப்பதாயும் இருக்கும். "கடன்காரர்" என்ற முறையில் அவர்களிடம் பின்வரும் வழக்கம் காணப்படும் :

தான் கொடுத்த கடனை உடனே திருப்பித் தந்துவிடல் வேண்டுமென்று கடன் கொடுத்தோன் கடன் பட்டவனைத்

தொந்தரவு செய்வான். கடன் பட்டவனோ, தான் பெற்ற கடனை அதிவிரைவிலே கொடுத்து விடுவதாகவும் சொல்வான். ஆனால் வாங்கிய கடனை மட்டும் திருப்பிக் கொடுக்க மாட்டான். இத்தகைய இக்கட்டான நிலைமையில் கடன் கொடுத்தவன், கடன் பட்டவனைப் பின்தொடர்ந்து சென்று, தேடிக் கண்டுபிடித்து, அவன் நிற்கும் இடத்தைச் சுற்றி ஒரு வளையம் கீறி, அப் பொய்யனைக் கையும் மெய்யுமாகப் பிடித்துக் கொண்டதுபோல், அவனைத் தானிட்ட கோட்டைத் தாண்டிச் செல்லாதவாறு செய்துவிடலாம். கடன்காரன் அவ்வமயம் கடன் கொடுத்தவனுக்குத் தகுந்த நபர் சாமீனோ அல்லது கடனையோ திருப்பிக் கொடுத்த பிறகுதான் அவன் கீறிய கோட்டினைத் தாண்டி வெளிவர வேண்டும். அவ்வாறின்றி, கடன்பட்டான் கீறிய கோட்டைத் தாண்டிச்செல்ல முயன்றாலும், அதிலிருந்து தப்பியோட முயன்றாலும், அவன் சட்டத்தின் நியாய வரம்பினைத் தகர்த்து எறிந்தவனாகக் கருதப்பட்டு, கொலைத் தண்டனைக்கு அரசனால் உட்படுத்தப்படுவான்.

## கடனாளியைப் பற்றிய உண்மை நிகழ்ச்சி

அயல் நாட்டில் வாணிகம் செய்து வந்த வணிகன் ஒருவனுக்கு அரசன் சிறிது தொகை கொடுக்க வேண்டியிருந்தது. அதை அவ் வணிகன் அரசனிடம் பலமுறை கேட்டும் அதற்கு அரசன் கெடுவு நாளை வேண்டுமென்றே தள்ளி வைத்துக் கொண்டு வந்தான். ஒருநாள் அவ்வரசன் குதிரை மேல் சவாரி செல்லும்போது, அச் சமயத்தை நன்கு பயன்படுத்திக் கொண்ட கடன் கொடுத்த வணிகன் அரசனையும், அவன் ஏறிவந்த குதிரையையும் சுற்றி ஒரு வட்டம் வரைந்தான். வணிகன் தனக்கு என்ன செய்தான் என்பதையறிந்ததும், அரசன் அவ்விடத்தை விட்டுப் பெயராமல் அங்கேயே நின்றுவிட்டான். மற்றும் அவ்

வணிகனது கோரிக்கைகள் யாவும் நிறைவேறு மட்டும், அக் கோட்டினின்றும் சிறிதும் பெயர்ந்தானல்லன். அங்குக் கூடிநின்ற மக்கள் அப்பொழுது நடந்த விவரத்தை யறிந்து, ஆச்சரியமடைந்தனர். அவ்வரசன் தானே அறச் சட்டத்துக்கு உட்பட்டு நடந்துகொண்டதால், "நிலையாய அறவோன் என்ற பட்டத்துக்கு அவ்வரசனே உரியவனு வான்," என்று மக்கள் வியந்து புகழ்ந்து போற்றினர்.[1]

## குடித்தல் தவிர்த்தல்

இந்நாட்டு மக்கள் திராட்சைப் பழத்திலிருந்து வடித் தெடுக்கப்பட்ட சாராயத்தையோ, பானத்தையோ அருந்து வதில்லை. இவ்வாறு எவனுகிலும் குடிப்பது கண்டுபிடிக்கப் பட்டுவிட்டால், அவன் செயலை மிகவும் இழிவானதாகக் கருதி, அவன் கொடுக்கும் சாட்சியத்தை நீதி மன்றத்தில் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். அடிக்கடி கடல்மீது அயல்நாட்டுக்குச் செல்பவர்களும் இவ்வாருகவே இழி வாகக் கருதப்படுகின்றனர். எவ்வித நிலையும், கதியும் அற்றவர்களே இத்தகைய கடல் பயணம் செய்வார்கள். ஆதலால், அவர்களுடைய சாட்சியம் ஒப்புக்கொள்ளக் கூடியதல்ல என்று மக்கள் மனத்தில் உறுதியாய் நம்பி யிருந்தனர்.

மற்றும், அவர்கள் பரத்தையருடன் வாழும் ஒழுக் கத்தைக் குற்ற மெனக் கருதுவதில்லை. இந் நாட்டின் சீதோஷ்ண நிலை மிக வெப்ப முள்ளதாக இருப்பதால், இங்கே மக்கள் அநேகமாக அரை நிர்வாணமாகவே

---

1 மார்க்கோ போலோ தம்முடைய சொந்த நாட்டுக்குத் திரும்பிச் செல்லும்பொழுது, இந் நாட்டில் தங்க நேர்ந்தது. அவ்வமயம் இத்தகைய நிகழ்ச்சி ஒன்றினை அவர் தம் கண் களால் காண நேரிட்டது.

போவார்கள். ஜூன், ஜுலை, ஆகஸ்டு மாதங்கள் தவிர, ஏனைய காலங்களில் மழை என்பதே கிடையாது. இம் மூன்று மாதங்களிலேனும் மழையால் காற்று குளிர்ந்து வீசவில்லை யென்றால், இங்கு உயிர் வர்க்கமே பிழைத் திருக்க முடியாது.[1]

## உடலியல் கலை

மனித வர்க்கத்தின் குணதிசயங்களையும், அவர்களின் நற்போக்கு, தீயபோக்கு ஆகியவற்றையும் பாகுபடுத்தி அறிவிக்கும் "சாமுத்திரிகா கலை" அல்லது உடலியற்கலை என்னும் சாத்திரத்தில் வல்லுநர் பலர் இருக்கின்றனர். ஆணாகிலும், பெண்ணாகிலும் எதிரே வர நேர்ந்தால், இக் கலை நுட்பத்தால், அவர்களுடைய குண குணங்களை அக் கலை வல்லுநர் உடனே கூறுவர். மற்றும், சிற்சில பறவை களும், விலங்குகளும் எதிர்ப்படுவதனால் சம்பவிக்கும் நிகழ்ச்சிகளை நன்கு அறிந்து எடுத்துரைப்பர். பறவை களின் பறக்கும் செயலை, உலகத்தில் உள்ள மக்கள் யாவரையும்விட, அவர்கள் உன்னிப்பாக ஆராய்ந்து, அதன் விளக்கத்தைக் கூறும் சக்தி பெற்றவர்களாவார்கள். அதன் காரணமாக, இனி நிகழப்போகும் நன்மையையோ, கேட்டினையோ அக் கலை வல்லுநர் முன்னதாகவே நன்கு எடுத்துரைப்பர்.

## சோதிடக்கலைக் குறிப்புகள்

வாரத்தின் ஒவ்வொரு நாளிலும் ஒரு குறிப்பிட்ட மணியைக் கெடுதல் விளைவிக்கும் "கேடுள்ள காலம்"

---

[1] மலையாள நாட்டு நிலவரத்தைக் கவனக் குறைவினால் இந்நாட்டிற்கு ஏற்றிக் கூறுகிறார்போலும். மாபர் நாடு (Maabar), மலபார் நாடு (Malabar) என்ற சொற்களுக்கு ஏற்பட்ட மயக்கமே, இங்கு ஒன்றன் கூற்றினை மற்றொன்றின் மீது ஏற்ற ஏதுவாய் அமைந்துவிட்டது.

என்று அழைப்பர். அக் கேட்டினை விளைவிக்கும் மணியை-நேரத்தைச் - சோயியாச்[1] என்ற பெயரால் வழங்குகின்றனர். எடுத்துக்காட்டாக திங்கட்கிழமை யன்று மி-டியர்ஸ்[2] என்ற கால அளவு ஆரம்பமாகும் வேளை காலை ஏழு மணி ஆகும். செவ்வாய்க் கிழமையில், டியர்ஸ்[3] என்ற கால அளவு அன்று நடுப்பகல் மூன்று மணிக்கு மேல் ஆரம்பமாகும். ஆக இத் தியாச்சிய காலங்களில் மறந்தேனும் நல்ல காரியங்களைத் தொடங்க மாட்டார்கள். அச் சமயம் பண்டங்கள் வாங்கப்படுவதும் கிடையாது; விற்கப்படுவதும் இல்லை. வாணிகத் தொடர்பு ஏதும் வைத்துக் கொள்ளப்படுவதில்லை. ஏனெனில், அக் காலத்தில் செய்யப்படும் காரியங்கள் நன்ருக முடிவதில்லை என்ற நம்பிக்கை பெருவாரியான மக்களுக்கு உண்டு. அதே வித

---

[1] Choiach (or) Koiach - இது வடமொழியில் உள்ள தியாச்சியம் என்ற சொல்லின் சிதைவு. இப்பொழுது அது இராகுகாலம் என வழங்கப்படுகிறது. இராகுவும், கேதுவும் சாயாக் கிரகங்களாகக் கருதப்படுகின்றன. அதுவும் இராகுவுக்குச் சோதிடத்தில் முக்கியமான இடம் உண்டு. ஆகவே, சாயா தியாச்சியம் என்பதையே (அதாவது சாயா கிரகமான இராகுவினது தியாச்சியம் என்று பொருள்) சோயியாச் என்று அவர் உச்சரிப்புத் தெரியாமல் எழுதியிருக்க வேண்டும்.

[2] Mi-Tierce - அதாவது Merza-Terza என்ற இலத்தீன் மொழிச் சொல்லின் சிதைவு. அதுவே Medium - Tertia என்று பின்னர் வழங்கப்பட்டது. Media Tertia என்ருல் 7 மணிக்கு மேல் பகல் 10 மணி வரையிலும் உள்ள காலத்தின் அரைப்பகுதி. ஆக, அத்திய காலம் காலை 7-30 முதல் 9-00 வரையிலும் என்று கொள்ளப்பட்டது பொருத்தமானதே

[3] Tierce - இச் சொல் Tertia என்பதின் சிதைவு. இது ஒரு நாளின் பிற்பகுதியின் பாகுபாட்டைக் குறிக்கும் சொல்லாகும். அதாவது மாலை மணி மூன்றிலிருந்து ஆறு வரையில் உள்ள காலத்தின் பாதிப் பாகம். சரியாக 3 முதல் 4½ வரை எனக்கொள்ளலாம்.

மாக, ஒவ்வொரு நாளின் நன்மை தீமைகளும் பற்றி அவ்வாண்டு முழுவதற்கும் தங்கள் புத்தகத்தில் எழுதி வைத்திருப்பார்கள்.[1]

இப்பொழுது இன்ன மணி என்பதை, செங்குத்தாய் நிற்கும் ஆளின் நிழலைக் கொண்டு அளந்து அறிகிறார்கள். பிறக்கும் குழந்தை ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி, அது பிறந்ததும், தாயோ, தந்தையோ அக் குழந்தை பிறந்த கிழமை, சந்திரன் வயது அல்லது திதி, மாதம், மணி முதலியவற்றைப் பற்றிய குறிப்புகள்[2] எழுதிவைப்பார்கள். சோதிடக் கலையால், தங்கள் வருங்கால வாழ்க்கையை நன்கு தெரிந்து கொள்ளலாம் என்று அவர்கள் நம்பிக்கை கொண்டுள்ளதால், இவ்வாறு அவர்கள் சனனக் குறிப்புகளைக் குறித்து வைத்துக் கொள்கின்றனர். சோதிடக் கலையில் அவர்களுக்குப் பூரண நம்பிக்கை உண்டு. அதில் வல்லுநர் பலர் இருக்கின்றனர். அவர்களுக்கு என்றுமே அழைப்புகள் ஆங்காங்கிருந்து வந்து கொண்டிருக்கும். நவக்கிரகங்கள் யாவும் தெய்வாம்சம் பொருந்தியவை என்ற திட நம்பிக்கை அவர்களுக்கு உண்டு.

## சிறுவரின் பொறுப்பு

பெற்றோர், தம் மகனுக்குப் பதின்மூன்று வயது[3] ஆனவுடன் அவனைத் தன் விருப்பப்படியே வெளியே

---

[1] நாம் இப் புத்தகத்தை இப்பொழுது "பஞ்சாங்கம்" என வழங்குகின்றோம்.

[2] நாம் இதை "ஜாதகம்" என்னும் பெயரால் வழங்குகின்றோம்.

[3] இவ்வயது 18 ஆக இருத்தல் வேண்டும்; 13 என்று தவறாக எழுதுகிறார் போலும். ஒருகால் அவருடைய காலத்தில் அப் பழக்கம் இந்தியாவில் இருந்திருக்கக் கூடும்.

செல்லவும், சொந்த வாழ்க்கைக்கு அடிகோலி அமைக்கவும் விட்டுவிடுகின்றனர். தன் பெற்ருேருக்குப் பாரமாக அமைந்து அவன் வாழவேண்டுமென்ற நியதி இல்லை. அக் குமாரனுக்கு இருபது முதல் இருபத்து நான்கு குரோட்ஸ்[1] வரை பெறுமான நாணயங்களைக் கொடுத்து அதனை முதலீடாக வைத்து, வாணிகத்தில் ஈடுபட்டுப் பொருள் ஈட்டு மாறு ஏற்பாடு செய்கிருர்கள். அவ்வாறு அனுப்பப்பட்ட குமாரர்கள் அல்லது இளைஞர்கள் ஓரிடத்தில் சில பொருள்களை வாங்கியும், அதை வேருேரிடத்தில் சிறிது இலாபம் வைத்து விற்றும் வாணிகம் செய்து கொண்டிருப் பதை எக்காரணத்தாலும் நிறுத்துவதே கிடையாது.

## இளைஞர் செய்யும் வாணிகம்

கடலில் முத்துக் குளித்தல் நடைபெறும் சமயத்து இவர்கள் கடற்கரைக்குச் சென்று பரதவரிடமிருந்தோ, மற்றும் அங்குள்ள பிறரிடமிருந்தோ, ஐந்து ஆறு அல்லது தங்களுடைய தகுதிக்கேற்றவாறும் அதற்கு மேலாகவும் சிறு முத்துகளை விலைக்கு வாங்குவார்கள். அவ்வாறு விலைக்குப் பெற்ற முத்துகளை, சூரியனுடைய வெப்பத் துக்குப் பயந்து வெளியே வராது தங்கள் வீட்டினுள்ளே பதுங்கிக் கிடக்கும் பணம் பெருத்த வணிகர்களிடம் கொடுத்து, "இவ்வருமை முத்துகளை அதிக விலை கொடுத்து நாங்கள் வாங்கி வந்திருக்கிருேம். அதற்குச் சிறிது இலாபம் வைத்துக் கொடுத்தால் அதுவே எங்களுக்குப் போது-மானது. இவற்றைத் தயவு செய்து தாங்களே எடுத்துக்

---

[1] Groats- 25 பைசே மதிப்புள்ள பழைய நாணயம் இப்பொழுது அதுபுழக்கத்தில் கிடையாது. இத்தாலிய ஆங்கிலச் செலாவணியில் அதன் பெறுமானம் நான்கு பென்னியாகும். அதுவும் இப்பொழுது உபயோகத்தில் இல்லை.

கொள்ள வேண்டும்,'' என்று சொல்லி, தாங்கள் கொடுத்த பணத்துக்குமேல் சிறிது தொகையை இலாபமாகப் பெற்றுத் திரும்புவர். இதே மாதிரியாக அச் சிறுவர் மற்றைய பண்டங்களிலும் பொருள்களிலும் வாணிகம் செய்து பொருள் திரட்டுவார்கள். மற்றும், அந்த இளைஞர்கள் வாணிகத்தில் நல்ல அனுபவம் பெற்று விரைவில் திறம் பெற்ற வணிகர்களாக விளங்குவார்கள். அன்றாட வாணிகம் முடிந்தவுடன், தாங்கள் பெற்ற இலாபத்தில் உணவுக்கு வேண்டிய பலவகைப் பண்டங்களை வாங்கி, அவற்றைத் தங்கள் தாய்மார்களிடம் எடுத்துச் சென்று, உண்டி சமைத்துப் போடச் செய்து உண்பர். ஆனால், அவர்கள் தங்கள் தகப்பனாரின் செலவில் ஒரு போதும் உண்பது கிடையாது.

## பல்வகைப் பறவைகள்

இந் நாட்டில் மட்டுமல்ல-பொதுவாகப் பரந்த இந்தியா முழுவதிலுமே-நம் நாட்டில் இருக்கும் பறவைகள், மிருகங்கள் போல் இருப்பதில்லை. ஆனால், குயில் மட்டும் தான் அதற்கு விதிவிலக்கு. அதுமட்டும் நம் நாட்டில் உள்ளது போன்றே தோற்றம் அளிக்கிறது. கழுகினை யொத்த அளவு உள்ள வௌவால்கள் நிறையக் காணப் படுகின்றன. கழுகுகளும் காக்கையைப் போல் கருநிற முடையனவாகத் தோற்றமளிக்கின்றன. அவை மிகப் பெரியனவாகவும், மிக வேகமாகப் பறக்கக் கூடியனவா கவும், தங்கள் உணவுக்காகப் பாய்ந்து விழும் சிறு பறவை வகைகளைப் பிடிப்பதில் சற்றும் தவறாமலும் இருக்கின்றன.

## ஆண்டவர்க்கு அருளப்படும் பெண்கள்

இந் நாட்டுக் கோயில்களில், ஆண் வடிவமும், பெண் வடிவமும் கொண்ட விக்கிரகங்கள் பல இருக்கின்றன.

மக்களில் சிலர். தாங்கள் பெற்றெடுத்த பெண்களை இவ் விக்கிரகங்களுக்கு என விட்டு விடுவதும் உண்டு.[1] அவ்வாறு கடவுள் பணிக்கென அர்ப்பணித்த பின், அக் கோயிலின் பூசாரி, கடவுளின் கட்டளைகளை முற்றுவிக்கக் கூப்பிடும்போதெல்லாம், அப் பெண்கள் முறையாக நடந்து பணியாற்ற வேண்டும். அத்தகைய கடவுள் பணி நிறை வேற்றுஞ் சமயங்களில் இசைக் கருவிகளை முழக்கிக் கொண்டும், துதிகளைப் பாடிக் கொண்டும் அவர்கள் அங்கு நடக்கும் திருவிழாவில் கலந்து கொண்டு, அதைச் சிறப் பிக்கச் செய்வர். அத்தகைய இள நங்கையர்கள் பற்பலர் சிறு சிறு குழுக்களாக அமைகின்றனர்.

## கோயில் பூஜை

அவர்கள் வாரத்தில் பலமுறைகள் விக்கிரகத்துக்கென வழங்கப்படும் வளமான உணவுப் பலிகளைத் தாங்கள் வழிபடும் விக்கிரகத்தினிடம் எடுத்துச் செல்கின்றனர். அவர்கள் இவ்வாறு அளிக்கும் உணவை அவ்விக்கிரகங்கள் உண்மையில் உண்பதாக ஐதிகம் உண்டு. அவ்வுணவைப் பரப்பி வைக்க மேசை யொன்றும் விக்கிரகத்துக்கு எதிராக வைக்கப்பட்டிருக்கும். இப் பூசை வேளையில் அப் பெண்கள் இடைவிடாது ஆடிக் கொண்டும், பாடிக்கொண்டும், வேண்டிய பல முத்திரைகளால் அபிநயங்காட்டி அணி செய்து நிற்பர்.[2] நல்ல வயதும், வசதியும் உள்ள ஒரு கனவான் தன் முன்னிலையில் வைக்கப்பட்டிருக்கும்

---

[1] இவர் நாட்டின் ஒருசிறுபான்மைக் கூட்டத்தினரின் வழக்கத்தைத் தெரிவிக்கிறார். இவ்வழக்கமே, பிற்காலத்தில் ''கோயிற்குப் பொட்டுக் கட்டுதல்'' என்ற சடங்காக மாறி விட்டது. அவர்களே பிற்காலத்தில் 'தேவதாசிகள்' என வழங்கப்பட்டனர்.

[2] மார்க்கோ போலோ தாம் நேரில் கண்ட பரதநாட்டியத்தின் வரலாறு போலும்.

பல்வகை உணவை உண்ண எவ்வளவு நேரமாகுமோ, அவ்வளவு நேரம்வரை மேற்கூறிய நடன விருந்து நடந்து கொண்டேயிருக்கும். நடத்தப்பட்ட உபசாரத்தில் விக்கிரகங்களின் ஆவி ஆறுதல் அடைந்ததாக அவர்கள் முடிவில் பறை சாற்றுவார்கள். பிறகு அதைச் சுற்றி வளையமாக நின்று ஒவ்வொருவரும் அவரவருடைய முறை வந்ததும் உண்பார்கள். உண்ட பிறகு, ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் வீட்டுக்குக் கொண்டாட்டமாகவும், குதூகலமாகவும் செல்வார்கள்.

## வழிபாட்டின் காரணம்

இவ்வாறு இளநங்கையர்கள் குழுக்களாகச் சேர்ந்து நடத்தப்படும் வழிபாட்டிற்கு அவர்கள் கூறும் காரணம் இதுவே: அர்ச்சகரோ அல்லது பூசாரியோ கூறுகிறார்: "ஆண் தெய்வம் பெண் தெய்வத்தோடு மன வேறுபாடடைந்து, அதனோடு பேச மறுக்கிற படியால், அத்தெய்வங்களிடையே மன ஒற்றுமையையும், அமைதியையும் நிலைநாட்ட ஏற்பாடுகள் எவையேனும் செய்யாமற் போனால், அத் தேவதைகளின் ஆசியும் அருளும் கிடைக்காமலேயே போய்விடும். தெய்வ அருள் நின்றவிடத்து, மடங்களின் மகத்துவம் குறையும்; கடைசியாக அவை பாழடைந்துவிடும். எனவே, தெய்வ அருளைப் பெறுவதற்கு இத்தகைய வழிபாடு இன்றியமையாதது," என்பதே.

## உறங்கும் முறை

இந் நாட்டு மக்கள் இலேசான பிரம்பு வேலைப்பாடுகளால் ஆன பாய்களை அல்லது கட்டிலைத் தங்கள் படுக்கையாகப் பயன் படுத்துகின்றனர். அப் படுக்கையைச் சுற்றிலும் ஒரு திரை போடப்பட்டிருக்கும். அது விசித்திரமான

சூத்திரமொன்றால் இயையுந் தன்மையுடையது. கட்டிலில் படுத்துத் தூக்கம் வரும் சமயத்தில் அச் சூத்திரத்தில் கட்டப்பட்டிருக்கும் கயிற்றைப் பிடித்து இழுத்தால், கட்டப்பட்டிருக்கும் திரையானது அக் கட்டிலைச் சுற்றி மூடிக்கொள்ளும். கொசு, ஈ முதலிய சீவன்களின் தொந்தரவுகளினின்றும் பாதுகாத்துக் கொள்ளவும், நீர் மண்டலி முதலிய கொடிய சந்துக்கள் படுக்கையுள் நுழைந்து தீங்கு விளையாதவாறு தடுக்கவும் இவ்வாறு திரையமைக்கின்றனர் போலும்.[1] அத் திரை அதே சமயத்தில் உடல் வெப்பத்தைத் தணிப்பதற்கு அவசியமான காற்றையும் தடைப்படுத்துவதில்லை.[2] இவ்வாறான உயர்ந்த சுகபோகங்களில் திளைப்பது மேல் நிலையிலுள்ள செல்வந்தரேயன்றிக் கீழ் நிலையிலுள்ள மக்கள் வீதிகளிலே, திறந்த வெளிகளிலே, நடைபாதைகளின் ஓரங்களிலேயே பெரும்பாலும் படுத்துறங்குகின்றனர்.[3]

### கருமையின் அழகு

இம் மாபர் நாட்டின் குடிமக்கள், பார்ப்பதற்குக் கறுப்பாக யிருந்தாலும், அவர்கள் பிறக்கும்போது அத்தகைய "காக்காய்க் கறுப்பாய்"ப் பிறப்பதில்லை. "கறுப்பின் கண் உள்ளது அழகு," என்று பாராட்டிச் செயற்கை முறையில் இன்னும் உடலைக் கறுப்பாக்கிக்

---

[1] கொசுவலையைக் குறிப்பிடுகிறார்.

[2] பிரம்பினால் செய்யப்பட்ட கட்டிலையும், கயிற்றுக் கட்டிலையும் குறிப்பிடுகிறார். ஊஞ்சலையும் சில செல்வந்தர் வீட்டில் படுக்கையாக உபயோகிப்பதைக் காணலாம். 'அம்ச தூளிகா மஞ்சம்' போன்ற வேலைப்பாடு மிக்க மெத்தைக் கட்டில்களும் இதன்பால் அடங்கும்.

[3] இருப்பதற்கே இடம் இல்லாது தவிக்கும் ஏழை மக்கள் இவற்றை யெல்லாம் எங்கே வைத்துக் கொண்டிருக்கப் போகிறார்கள்?

கொள்வர். இதற்காக அவர்கள் தங்கள் குழந்தைகளுக்குத் தினம் மூன்று வேளை எண்ணெய் தடவிவிடுகிறார்கள். அவர்கள் தங்கள் விக்கிரகங்களின் உருவத்தைக் கருநிறமாகக் காண்பிக்கிறார்கள். ஆனால், பிசாசு போன்ற மற்ற தேவதைகளின் உருவங்களை வெண்மை நிறத்தாலேயே பூசுகின்றனர். மற்றும், பிசாசுகள் யாவும் வெண்மை நிறத்தனவே என்றும் சாதிக்கின்றனர்.[1]

## எருது வழிபாடு

எருதினை வழிபடும் அன்பர்கள் தாங்கள் போருக்குப் புறப்படும்போது, காட்டு எருமையின் மயிராலாகிய சவரியைத் தங்களுடன் எடுத்துச் செல்வர். அச் சவரியைத் தங்கள் குதிரையின் பிடரி மயிரோடு கட்டித் தொங்கவிடுவார்கள். அவ்வாறு அதைத் தன்னுடன் எடுத்துச் செல்பவன் யாவனாயினுஞ் சரி, அவன் எத்தகைய அபாயங்களினின்றும், பெருந்தடைகளினின்றும் காப்பாற்றப்படுவான் என்ற திட நம்பிக்கை இந் நாட்டில் அதிகம் உண்டு. இதன் காரணமாக, இந் நாட்டில், காட்டு எருமைகளின் மயிராலாகிய சவரிகள் அதிக விலைக்கு விற்கப்படுகின்றன.”

[1] வாகனங்களுக்கு வெள்ளை வர்ணம் கொடுப்பதை இங்குக் குறிப்பிடுகிறார். பிசாசுகள் என்பது ஆண்டவர் அல்லாத மற்றைய கீழ்த்தரத் தேவதைகள். தேவதைகள் என்று கோயில்களில் உபயோகிக்கப்படும் அசுர வாகனங்களைக் குறிக்கிறார் போலும். மற்றும், பிசாசுகள் ஆவி உருவமாய் வருவதாக நம்பப்படுகிறது. ஆவியின் உருவம் வெண்மை அல்லவா? இதன் காரணமாக, வெண்மைநிறத்தன எனக் கூறினார் போலும்.

# 4. மயிலையில் மறைந்த முனிவர்

## தாமஸ் முனிவர் வரலாறு

"**மா**பர்[1] என்று வழங்கப்படும் இந்த நாட்டிலேதான் தமது இன்னுயிரைத் தியாகம் செய்த அரும்பெரும் தியாகி யான அப்போஸ்தலர் தாமஸ் முனிவருடைய[2] திருமேனி அடக்கம் செய்யப்பட்டிருக்கிறது.[3] இவ்விடத்திலேதான் அவர் கொல்லப்பட்டு உயிர் நீத்தார். இவ்வாறு அடக்கம் செய்யப்பட்ட இடம் ஒரு சிறு நகரத்தின்[4] ஒரு பகுதியில்

---

[1] Maabar-தமிழ் கூறும் நல்லுலகம் [2] **Saint Thomas, the Apostle.**

[3] தமிழ் நாட்டில் மயிலாப்பூரின் ஒரு பகுதியாகிய சான்-தோம் (Santhome) என்பதைக் குறிப்பிடுகிருர். செயின்ட்-தாமஸ் என்பதன் குறுக்கமே சான்-தோம் ஆகும்.

[4] மயிலாப்பூரைக் குறிப்பிடுகிருர். அக் காலத்தில் மயிலாப்பூர் பன்னூருண்டுகளுக்கு முன் திருவள்ளுவப் பெருந் தகையார் வாழ்ந்து வந்த இடமாயிருந்ததனல், அவ்விடம் சிறந்த புகழ் பெற்றிருந்தது. அதைத்தான் சிறுநகர் எனக் குறிப்பிடுகிருர்.

மயிலாப்பூர் என்ற ஊர்ப்பகுதியைத் **தாலமி** (கி.பி. 119-161) தம் குறிப்புகளில் கொடுத்துள்ளார் :

"மலியார்பா எம்போரியம் ஒரு வாணிகச் சந்தை கூடும் நகரம்." —(**தாலமி :** அதிகாரம் 14, குறிப்பு-6, பக்கம் 88)

மலியார்பா என்ற சொல் மயிலாப்பூர் என்ற ஊரைக் **குறிப்பிடும்.**

மயிலாப்பூரில் அக் காலத்தில் வாணிகச் சந்தை கூடிற்று. பிற்காலத்தில் ஆழ்வார்களாலும், நாயன்மார்களாலும் பாடப்பட்டது.

**"தேனமர் சோலை மாட மாமயிலை**
**திருவல்லிக்கேணி கண்டேன்."**

— (**திருமங்கையாழ்வார், பெரிய திருமொழி 2-3-9.**)

இருக்கிறது. இவ்விடம் வணிகர்களுக்கு வாணிகம் செய்வதற்கு உதவாத இடமாதலால், இங்கு அவர்கள் அதிகமாகப் புழங்குவதில்லை. ஆயினும், பக்தி மேலீட்டால் கிறித்தவர்களும், சாரசன் சாதியினரும் கூட்டமாக அவ்விடத்தில் குழுமுகின்றனர். பின்னவராகிய சாரசன் மக்கள் அம் முனிவரைப் பெரும் தீர்க்கதரிசியாகக்[1] கருதி, அவரை "அனுனியர்"[2] என்ற பெயரால் வழங்குகின்றனர். அனுனியர் என்பதன் பொருள் ஆண்டவர் அருள் பெற்ற தூதர்—அதாவது தேவ மனிதர்—என்பதாகும். யாத்திரை நிமித்தமாக இங்கு வரும் கிறிஸ்தவர்கள் முனிவர் கொல்லப்பட்ட இடத்திலிருந்து சிவப்பு நிறம் கொண்ட மண்ணைப் பயபக்தியோடு தங்களுடன் எடுத்துச் செல்கின்றனர். அவ்வாறு எடுத்துச் செல்லப்பட்ட திருமண்ணைப் பற்பல அற்புதங்கள் செய்துகாட்ட அவர்கள் பயன்படுத்துகின்றனர். அதைத் தண்ணீரில் கரைத்து நோயாளிகளுக்குக் கொடுக்க, அவர்கள் நோய்கள் அனைத்தும் அடியோடு நீங்கப்பெற்று, உற்சாகமும் உடற் சுகமும் பெறுகின்றனர்.[3]

---

"செயின்ட் தாமஸ் வாழ்ந்து வந்த இடம் — உடல் புதையுண்ட இடம் — மயிலாப்பூர் அருகில் உள்ள சாந்தோம் (**Santhome**) எனும் இடம் ஆகும்."

(**தாலமி** : அதிகாரம் 14, குறிப்பு 6, பக்கம் 88)

[1] Prophet

[2] Ananiar - அ - மானிடர் என்ற சொல்லின் அடிப்படையாகப் பிறந்திருக்க வேண்டும். அ-மானுஷம் அதாவது அ-மானிடம் என்ருல் மனிதரல்லாத தேவகணம் என்று பொருள் படுகிறதல்லவா? மனித சக்திக்கும் அப்பாற்பட்ட தெய்விகச் சக்தி வாய்க்கப் பெற்றவர் என்றும் பொருள் கொள்ளலாம்.

[3] உலகின் பல பாகங்களிலும் இவ்வித நம்பிக்கை பரந்து காணப்படும்.

## நடைபெற்ற அதிசயம்

கி. பி. 1288 ஆம் ஆண்டில், அரசிளங்குமாரன் ஒருவன் இருந்தான். அறுவடைக் காலத்தில் போர் போராகக் கிடைத்த நெற் குவியல்களைச் சேமித்து வைக்கத் தகுந்த களஞ்சியம் அவனிடத்தில் இல்லாமல் போயிற்று. அதன் காரணமாக அவ்வரசகுமாரன், தாமஸ் முனிவருக்கு எழுப்பப்பட்ட கோயிலின் இல்லத்தைப் பயன்படுத்திக் கொள்ள முடிவு செய்தான். ஆனால் இச் செய்தி அத் தலத்தின் ஆதீன கர்த்தருக்குப் பிடிக்கவில்லை. ஆகவே, தாமஸ் முனிவரைத் தரிசித்து அவரது அருள் பெற வரும் யாத்திரிகர்களுக்கு என விடப்பட்டிருக்கும் அக் கட்டடத்தை வேண்டாமென அவர் அவ்வரசகுமாரனை மிகவும் மன்றாடிக் கேட்டுக்கொண்டார். ஆனால், அவ்வரச குமாரனோ, தான் எண்ணியதை நிறைவேற்ற உறுதி கொண்டு, மிகவும் நெஞ்சழுத்தத்தோடு இருந்தான். அடுத்த நாள் இரவில் அப் புண்ணிய புருஷரான அப்போஸ்தலர், அவ்வரச குமாரனுடைய கனவில், வேல் ஒன்றினை அவனுடைய நெஞ்சுக்கு நேராகப் பிடித்த வண்ணம் காட்சியளித்துப் பயமுறுத்தி நின்றார். அவனை நோக்கி அம் முனிவர், “இப்பொழுதே நீ ஆக்ரமித்துக் கொண்டிருக்கும் என் இடத்தைக் காலி செய்யாமற் போனால், உன் உயிரைக் குடித்து, உனது உடலைத் துண்டு துண்டாக ஆக்குவேன்,” என்று வீராவேசத்தோடு கூறினார். இத்தகைய பயங்கரக் கனவினின்றும் திடுக்கிட்டுப் பதை பதைத்துக் கண்விழித்துப் பார்த்துத் தான் கண்ட கனவினை யாவருக்கும் எடுத்துரைத்தான். தான் அப்போஸ்தலரைக் கனவில் கண்கூடாகக் கண்டதாகவும் தெரிவித்துத் தனக்கு முனிவர் பெருமான் கட்டளை யிட்டதை உடனே நிறைவேற்றி வைக்குமாறு தன் பணி யாள்களுக்குக் கட்டளையிட்டான். தாமஸ் முனிவரது

இல்லத்தில் இருந்த தானிய மூட்டைகள் அரசன் பணியாள்களால் உடனே வெளியேற்றப்பட்டன.

தாமஸ் முனிவரது பேரருளின் திறத்தால் பற்பல அற்புத நிகழ்ச்சிகள் இவ்விடத்தில் அடிக்கடி நிகழ்ந்து வருகின்றன. இந்தத் தேவாலயத்தைக் கண்காணித்து வருகின்ற கிறித்தவ மக்களுக்கு அங்கு விளையும் பாக்கு மரத்தோப்புகள் பல உண்டு. அவர்கள் அப் பாக்கு மரம் ஒவ்வொன்றிற்கும் ஒரு குரோட்ஸ் இத்தாலி நாட்டுச் செலவாணியை அவ்வரசச் சகோதரர்கள் ஒருவரிடம் வரியாகக் கொடுத்துத் தங்கள் வாழ்க்கைக்கு வேண்டிய ஏனைய வசதிகளையும் அடைகிறார்கள்.

புனித அப்போஸ்தலரான தாமஸ் முனிவரது மரணம் பின் வருமாறு நடந்ததெனக் கூறப்படுகிறது.

## முனிவர் மறைந்த வரலாறு

ஓர் ஆசிரமத்தில் ஓய்வுபெற முனிவர் பெருமான் செல்லுங்கால், அங்கு அவர் பிரார்த்தனை செய்ய உட்கார நேர்ந்தது. அப்பொழுது அந் நாட்டில்[1] அமோகமாகத் திரிந்துழலும் மயில்கள், பிரார்த்தனையில் ஈடுபட்ட முனிவரைச் சூழ்ந்து நின்றன. 'காவுஇ'[2] என்ற வகுப்பினைச் சார்ந்த ஒரு விக்கிரக ஆராதனைக்காரன் அவ்வழியே சென்று கொண்டிருந்தான். அவன் அச் சமயம் குழுமிய மயில் கூட்டத்தைக் கண்டானே தவிர, அவற்றின் நடுவிலே பிரார்த்தனையில் ஈடுபட்டு அமர்ந்திருந்த முனிவர் பெருமானைக் கண்டானல்லன். மயில் ஒன்றினை மாய்க்கும் எண்ணத்தோடு தன் வில்லில் அம்பு தொடுத்து, அவ்வம்பை அம் மயில் கூட்டத்தின்மீது விடுத்தான். அந்தோ! மயில்

---

[1] மயிலாப்பூர்.

[2] மாடு தின்னும் புலையர் வகுப்பினர்.

மீது எய்த அம்பு மறைந்து கிடந்த முனிவரின் விலாப் புறத்தில் சுருக்கெனப் பாய்ந்தது.[1] உயிர் போகுமளவிற்குக் காயம் பட்டிருந்ததை நன்கு அறிந்துகொண்ட முனிவருக்கு, ஆண்டவர் தமக்கு அதுகாறும் காட்டிய கருணைப் பிரவாகத்துக்கு நன்றி செலுத்த மட்டுமே போதிய காலம் இருந்தது. உடனே ஆண்டவர் கையில் தம் இன்னுயிரை ஒப்படைத்தார்.''[2]

---

[1] மயிலாப்பூர் என்ற பெயர் வந்ததற்குக் கற்பித்த காரணம் போலும். மயில் + ஆப்பு + ஊர்: மயில் அம்பினால் ஆப்புண்ட ஊர் என்று பொருள் படுகிறதல்லவா? சோலைகளிலிருந்தமையால் மயில்கள் அங்கு வாழ்ந்தன. மயில் பெருகி வாழ்ந்ததால், அந்நாடு வளம் கொழித்திருந்தது என்பது இதனால் அறியப்படும்.

[2] புனிதர் தாமஸ் முனிவரைப் பற்றி வரலாற்று விளக்கம் பின்வருமாறு:

“செயின்ட் தாமஸ் மலையாளக் கடற்கரையில் கி.பி. 52 ஆம் ஆண்டு வந்திறங்கினார். வடநாட்டிற்குச் சென்று, கொண்டாபோரஸ் என்ற அரசருடன் சில ஆண்டுகள் தங்கிவிட்டு, அவரைக் கிறித்தவராக மாற்றி, மீண்டும் தமிழ்நாடு அடைந்து, மயிலாப்பூர் அருகிலுள்ள சாந்தோமிலும் (Santhome), செயின்ட் தாமஸ் மௌண்ட் எனப்படும் சின்ன மலையிலும் தங்கியிருந்தார். அவர் மயிலாப்பூரில் சில வேடர்களால் கொல்லப்பட்டார். அந்நிகழ்ச்சி நடந்த ஆண்டு கி.பி. 68 என்று நம்பப்படுகிறது.

—(In the Steps of Saint Thomas By Rt Rev. Herman D'Souza pp 25 & 50)

புனிதர் தாமஸ் இந்தியாவில் தங்கியிருந்த மொத்த ஆண்டுகள் 17 ஆகும். அவர் உடல் மயிலாப்பூர் அருகில் உள்ள சாந்தோமில் (Santhome) அடக்கம் செய்யப்பட்டது.

செயின்ட் தாமஸ் புதையுண்ட இடம் எனக்கொண்டு, அவ்விடம் சாந்தோம் (Santhome) எனப் பெயரிடப்பட்டது.

— (**தாலமி** : அதிகாரம் 14, குறிப்பு - 4 பக்கம் 87)

செயின்ட் தாமஸ் முனிவர் சின்னமலையில் தம் இருப்பிடத்தைக் கொண்டார். இறுதியில் அவருடைய எலும்புச்

சின்னங்களின் ஒரு பகுதி மீது ஒரு வேதக் கோயில் எழுப்பப் பட்டது. அங்குள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது.

**" முன் ஹாமிச் மெஷிகாய் அவக்ஷாயி மதாம்**
**அப்ரா-ஹிக் கார் பக்தோ சுர்ஜேமுன் பன்தாரோ தீனு."**

இக் கல்வெட்டு சிசேனியன் எழுத்துகளில் பஹ்லவியில் செதுக்கப்பட்டுள்ளது. பஹ்லவி என்பது பல்லவர்கள் மொழி.

மேற்கூறப்பட்ட கல்வெட்டின் பொருள்: " எவர்கள் மெசையாவையும், புனித ஆவியாக விளங்கும் ஆண்டவரையும் நேசிக்கிறார்களோ, அவர்களுக்குத் துன்பந்தந்த சிலுவையை ஏந்திச் சென்ற இரட்சகரின் அருள் முழுவதும் கிடைக்கும்."

செயின்ட் தாமஸ் முனிவர் இந்தியாவின் மேலைக் கடற் கரையிலிருந்த கொடுங்களூர் (Cranganore) துறைமுகத்தில் இறங்கி, பின்னர் சென்னை மயிலாப்பூரிலும், சின்ன மலையிலும் தங்கினார். அவ்வாறு அவர் இருந்த ஆண்டுகள் 17.

— (St. Thomas By F. A. Decruz, p. 116.)

# 5. காயலும் குமரியும்

## காயல் பட்டினம்

"காயல்,[1] என்பது மிகப் பெரிய ஒரு நகரம். அதை மாபர் நாட்டு மன்னர்களாக விளங்கிய நால்வர்களின் சகோதரனுகிய ஒருவன் ஆண்டு வருகிருன். அவன் பெயர் அஸ்தியர்[2] என்பதாம். அவனிடத்தில் பொன்னும் மணியும் மல்கியிருக்கின்றன. தன்னுடைய நாட்டைப்

1. KAEL - காயல் என்பதைக் குறிக்கிறது. காயல் என்பது பாண்டி நாட்டைச் சேர்ந்த திருச்செந்தூர்க் கருகில் உள்ள குலசேகர பட்டினத்தைக் குறிப்பதாகும் என அறிஞர் சிலர் கருதுகின்றனர். அதற்கருகில் காயல் பட்டினம் என்ற உப்பளங்கொண்ட சிற்றூர் ஒன்று உண்டு. முதன் முதல் சிற்றூராயிருந்த பொழுது அதற்குக் காயல் என்ற பெயர் மட்டும் வழங்கியதாதல் வேண்டும். உப்பளங்களில் கடல் நீரைப் பாய்ச்சி, அதைச் சூரிய வெப்பத்தால் காயும்படி விட்டுவிடுவதால், அவ்வூர் காயல் என்ற பெயர் பெற்றது போலும். காயல் என்பதற்கு உப்பளம் என்ற பொருளும் உண்டு. அச் சிற்றூரே நகரமானபோது, பட்டினம் என்ற அடைமொழி பெற்றுக் காயல் பட்டினமாக ஆயிற்று. கடற் கரையில் உள்ளது பட்டினமல்லவா?

2. Astiar - மாறவர்மன் குலசேகரபாண்டியன் என்று பேராசிரியர் சிலர் கருதுகின்றனர். திரையர் என்ற சொல் கடல் வழி வந்த மக்களைக் குறிக்கும் சொல்லாகும். பிறகு அதுவே பட்டப் பெயராகி, கடல் துறைமுகப் பட்டினங் களின் அரசனைக் குறிக்கவும் பயன்பட்டது. எடுத்துக் காட் டாக இளந்திரையன் என்ற அரசன் பெயரைக் குறிப் பிடலாம். ஆகவே திரையன் என்னும் பெயர் பூண்ட அத்திரையன் என்ற பெயரே மார்க்கோ போலோளினல் இவ்வாறு திரித்துக் கூறப்பட்டிருக்கலாம் எனத் தோன்று கிறது.

மற்றும் அதிகாரம் 2, பக்கம் 2, குறிப்பு-4 பார்க்கவும்.

பூரண அமைதியுடன் பாதுகாத்து வருகிறான். இதன் காரணமாக, அயல்நாட்டு வணிகர்களுக்கு இந் நகர் தங்கு வதற்குரிய இடமாக அவர்கள் விருப்பம்போல் அமைந்து விடுகிறது. அவ்வணிகர்களுக்கு அரசனால் நல்ல வரவேற்பு அளிக்கப்படுகிறது. அவர்களுக்கு வேண்டிய தேவைகளும் உடனுக்குடனேயே செய்து கொடுக்கப்படுகின்றன. ஆகையால் மேலைத் திசையிலிருந்து ஆர்மஸ்[1] கிஸ்தி,[2] ஆதென்[3] மற்றும் அரேபியாவின் பல பகுதிகளிலிருந்து வரும் கப்பல்கள் இதையே துறைமுகமாகக் கொள் கின்றன. மற்றும், தங்கள் கப்பலில் குதிரை முதலிய வாணிகப் பொருள்களைக் கொணர்ந்து இறக்குமதி செய் கின்றனர் நாட்டு வாணிகத்துக்கு இத் துறைமுகம் உகந்ததாகக் காணப்படுகிறது. இந் நாட்டின் அரசன் செல்வாக்குள்ள நிலையில் முந்நூறுக்கு மேற்பட்ட மங்கையர்களை மாண்புடன் பாதுகாத்து வருகிறான்.[4]

## தாம்பூலத்தின் வரலாறு

இந் நகர மக்கள் யாவரும்—ஏன், பொதுவாக இந்திய

---

[1] Ormus [2] Chist [3] Aden

[4] The greatest of the Pandyam kings was Sundara pandya, who defeated the Hoysalas and made himself the master over the whole peninsula. Their capital was at Madura, which was adorned with a noble temple. Marco Polo, the celebrated Venetian traveller, twice visited the Port of Kayal at the mouth of the Tamaraparani river in 1288 and 1293. He says it was a "great and noble city." He tells us that the reigning Pandya King had rich stores of pearls and precious stones. He ruled justly and encouraged foreigners to come and trade in his dominions.

—(vide A Concise History of the Indian People, Part I, by H. G. Rawlinson, p. 116).

நாட்டுக் குடிமக்கள் யாவருமே—தங்கள் வாயில் தாம்பூலம்[1] என்னும் பெயர் கொண்ட இலைச்சுருளை எப்பொழுதும் சுவைக்கும் பழக்கத்தை யுடையவர்களாகக் காணப் படுகிறார்கள். அதை அவர்கள் பழக்கத்தின் காரணமாகவும், அதன் சுவையில் ஏற்படும் மகிழ்ச்சி காரணமாகவும், இம் மக்கள் அவ்வாறு பயன்படுத்துகின்றனர். அதை நன்றாக மென்றதும் அதனால் உற்பத்தி செய்யப்படும் உமிழ் நீரை வெளியே துப்புவார்கள். உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் தாம்பூலத்தோடு பச்சைக் கர்ப்பூரம், சாதிக்காய் முதலிய வாசனை தரும் பண்டங்களைச் சேர்த்துச் சுவைப்பர். அத்துடன் தாளிக்காத சுண்ணும்பையும்[2] பயன்படுத்துவர். இத்தகைய இன்பந்தரும் இனிய தாம்பூலம் உடலுக்கு மிக்க நன்மை பயக்கிறதென்று எனக்குப் பலர் சொல்லியிருக்கின் றனர்.

## இகழ்தற்குப் பயன்படல்

ஒருவனை மற்றொருவன் வெளிப்படையாக அவமானப் படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடனும் இகழ வேண்டும் என்ற எண்ணத்துடனும் இருந்தால், அவன் முகத்தில் மற்றவன் இத் தாம்பூலம் மெல்லுவதால் ஏற்படும் உமிழ் நீரைத் துப்பி விடுவான்.[3] இவ்வாறு இகழப்பட்ட அவன் நேராக அரசன் முன்பு விரைந்து சென்று தனக்கு இகழ்ச்சி செய்த வரலாற்றினை ஏற்ற

---

[1] Tambul-பாரசீக மொழியினின்றும் தமிழ் நாட்டுக்கு வந்த திரி சொல். தாம்பூலம் என மருவி வழங்குகிறது. வெற்றிலைச் சுருள் என்று பொருள்படும்.

[2] Quick - lime.

[3] இவ்வாறு துப்புதல் அருவருப்பை உண்டு பண்ணும் செயலாக இன்றும் கருதப்படுகிறது. கோபத்தில் சொல்லும் 'முகத்தில் காறித்துப்புவேன்' என்னும் சொற்களை ஒப்பிடுக.

வண்ணம் எடுத்துக் கூறி, அந்த வன்மத்தைப் போர் முனையில் தீர்த்துக்கொள்வதாகக் கூறுவான். அதைக் கேட்ட அரசன் அவனுக்குக் கேடயமும், வாளும் கொண்ட படைக் கலத்தைக் கொடுத்து அவர்களைப் போர் புரியுமாறு ஏவுவான். இந்த அதிசயப் போர், அவர்களில் ஒருவன் களத்தில் இறந்து போகுமளவும் நடைபெறும். இப் போரைக் காணப் பெருங் கூட்டங் கூடும். ஆனால், வாளின் கூர் நுனியால் மட்டும் ஒருவரை ஒருவர் காயப் படுத்தக்கூடாது என்ற கடுமையான விதிமட்டும் உண்டு.

## குமரி முனை

'குமரி'[1] என்பது ஒரு நாடாகும். ஜாவாத் தீவினின்றும் பார்க்க முடியாத வடக்கிலுள்ள நட்சத்திரத்

---

[1] Komari-இந்தியாவின் தெற்குக் கோடியின் தொடக் கப் பகுதியான குமரிமுனையைக் குறிக்கிறது. இதைத் தாலமி என்பவர் பல நூற்றுண்டுகளுக்கு முன்னரே Promontarium Kumarie என்று வழங்கினர். குமரிமுனை என்பதே Cape Kumarin என்று வழங்கப்பட்டு, கடைசியாக Cape Camorin என்ருயிற்று. பண்டைய சங்க இலக்கியங்களிலும் "குமரி" பல இடங்களில் வந்துள்ளது.

— (**தாலமி** : அதிகாரம் 9, குறிப்பு-6, பக்கம் 59)

இக் குமரியை இவர் நாடாகக் கருதுவது சிந்திக்கற் பாலது. இதனல் குமரியும் அதைச் சார்ந்த நாடும் மிகவும் புகழ் பெற்றிருந்தன என்பது தெரியவருகிறது. இதையே,

**"வேங்கடம் குமரித் தீம்புனல் பௌவமென்று,**
**இந்நான் கெல்லை தமிழது வழக்கே"**

என்ற பழம் பாட்டால், குமரி முனையின் இருப்பிடத்தை யறியலாம்.

குமரிக்கோடு என்ற மலையொன்று இருந்ததாகவும், அதன் காரணமாகக் குமரியாறு (குமரித் தீம்புனல்) உண் டானதாகவும், பிறகு மலையையும் ஆற்றையும் சுற்றி நாடு உண்டாயிற்று எனவும், மலையும் ஆறும் சேர்ந்துள்ளதால் அந் நாடு வளமிக்க நாடாக விளங்கிற்று எனவும் வரலாறுகள்

தொகுதியின் ஒரு பகுதியை இவ்விடத்திலிருந்து ஏறக் குறைய முப்பது மைலுக்குள்ளாக நாம் பார்க்க முடியும். அது தொடுவானத்திலிருந்து ஒரு முழம் அளவு உள்ளது போல் தோற்றமளிக்கும். இந்நாட்டில் விவசாயம் பெரும் பான்மையாக நடைபெறுவதில்லை. இங்குக் காடுகளும், அடர்ந்து பெருகின மரத்தொகுதிகளும் அதிகமாக இருக் கின்றன. இதன் காரணமாக, விலங்குகளுக்கும் - சிறப் பாக வானரங்களுக்கும்[1] - இது குடியிருப்பாகப் பயன்படு கின்றன. அவ் வானரங்கள் வடிவத்தில் பெரும்பாலும் மனிதனை யொத்தே இருக்கின்றன. உயரமும், முகச்சாய லும் அவ்வாறே அமைந்திருக்கின்றன. அவ் வானரங் களில் நீண்ட வாலுள்ள வானரச் சாதிகளும்[2] உண்டு. இவை முற்கூறிய வானர வர்க்கத்தினின்றும் உடற் கூறுபாட்டில் வேறுபட்டனவே. இங்கே புலி, சிறுத்தை, வேங்கை முதலிய கொடிய காட்டு விலங்குகள் கணக்கின்றி வாழ்கின்றன.''

---

கூறுகின்றன. ஆனால் அவை யாவும் அழிந்துவிட்டன என்பது,

> ''பஃறுளி யாற்றுடன் பன்மலையடுக்கத்துக்
> குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள''
>
> — (சிலப்பதிகாரம் : காடுகாண்காதை 19-20)

என்ற **சிலப்பதிகாரச்** செய்யுளடிகளால் நன்கு அறியலாம்.

ஆகையால், குமரி நாட்டைச் சார்ந்த பெரும்பாலான பகுதிகள் மறைந்தொழிய, அம் முனை மட்டும் இன்றும் குமரி முனை என்ற பெயரால் விளங்குகிறது என்பது போதரும்.

குமரிமுனை பிளினி, பெரிப்ளூஸ் முதலிய நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

— (பெரிப்ளூஸ் : அதிகாரம் 58, குறிப்பு-6, பக்கம் 256)

[1] Apes

[2] Long tailed monkey species—இராமாயணத்தில் கூறப்படும் வானர சேனையின் தோற்றத்தையும், அவை தோன்றும் இடங்களையும் இச் செய்திகளுடன் ஒப்பிடுக.

# 6. இலங்கை நாடும் ஆதாம் சிகரமும்

## தீவின் அமைப்பு

"அங்கமான்[1] தீவிலிருந்து புறப்பட்டுத் தென் மேற்குத் திசையில் ஆயிரம் மைல்கள் கடற்பயணம் செய்தால், 'செய்லான்' என்ற தீவு கண்களில் தென்படும். இத் தீவு, உலகில் காணப்படும் மற்றெல்லாத் தீவுகளைக் காட்டிலும் அளவிலும் இடப் பொருத்தத்திலும் சிறந்து விளங்குகிறதென்றே கூறவேண்டும். ஆனால், இதற்குப் பன்னூருண்டுகளுக்கு முன் இதன் சுற்றளவு மிகப் பெரிய தாக இருந்திருக்க வேண்டும். அப்பொழுது இதன் சுற்றளவு 3600 மைல்கள் என்று மப்பா-மண்டி[3] கூறு கிறது.

---

[1] Angaman - (Andaman) : அந்தமான் என்ற தீவின் தொகுதியாகும். சில பிரதிகளில் இத் தீவு, நங்கமான் என்றும், அங்கானியா என்றும் பலவிதமாக உச்சரிக்கப்பட்டு எழுதப்பட்டிருக்கிறது. இப்பெயர் யாவும் அந்தமானையே உணர்த்துகிறது என்பதில் சிறிதேனும் ஐயப்பாடு கிடை யாது.

[2] Ceylon

[3] Mappa - Mandi - (Mappa Monde or The Map of the World) : அக் காலத்தில் நிலவி வந்த உலகப் படத்துக்கு மப்பா - மண்டி என்ற பெயர் இடப்பட்டிருந்தது. இலங்கை நாட்டிலும் பல கடல்கோள்கள் நிகழ்ந்திருக்கின்றன என்று இலங்கை வரலாறு கூறுகிறது. அதனால் மார்க்கோ போலோவின் காலத்தில் அவர் கண்ட இலங்கைத் தீவு முன்னர் பலரால் குறிக்கப்பட்டிருந்த அளவைவிடச் சிறிய தாகக் காணப்பட்ட தன் காரணம் அக் கடல் கோள்களுள் ஒன்றின் செயலே என்பது தெரிய வருகிறது.

இப்பொழுது இத்தீவின் சுற்றளவு 2400 மைல்களாகக் குறுகியுள்ளது.

கடலினின்று அடிக்கும் பெருஞ் சூருவளிகள் இத்தீவில் உள்ள உயர்ந்த மலைகளை ஊடுருவிப் பாய்ந்து, அவற்றை உருத்தெரியாமலாக்கி, அம் மலைப் பாறைகளை ஒவ்வொன்ருகக் கடலில் தள்ளியிருக்கின்றன; அதன் காரணமாக மலைகளின் உயரம் குறைந்து, இயற்கை வளப்பமும் குறைவுபட்டுக் காணப்படுகிறது. முன்னர் இருந்த பெரிய உருவம் மாறி அம் மலைகள் இப்பொழுது சிறியனவாகக் காட்சியளிக்கின்றன. சுந்தர நாசு[1] என்ற அரசனல் இத்தீவு இப்பொழுது ஆளப்பட்டு வருகிறது.[2]

## தீவின் மக்கள்

இத்தீவின் மக்கள் விக்கிரகங்களைத் தொழுகின்றனர். மற்றைய நாட்டினர்க்கும் தமக்கும் யாதொரு தொடர்பும் வைத்துக்கொள்ளாமல் சுதந்தரமாக வாழ்ந்து வருகின்றனர். ஆண்களும் சரி பெண்களும் சரி, இடுப்பில்

---

[1] Sander Naz: சந்திர நாசு அல்லது சுந்தர நாசு. சந்திர வமிசத்தைச் சேர்ந்த அரசன் ஒருவன் அப்போது இலங்கையை ஆண்டுவந்தான் எனச் சொல்லப்படுகிறது. சுந்தர நாகன் என்பதை அவர் சந்திர நாசு என்று கூறுகிருர் போலும். சௌந்திர பாண்டியன் வமிசத்தில் பிறந்தவனும், நாகர் குலத்தில் பெண் கொண்டவனுமாக இருந்ததால், சுந்தர பாண்டியநாகன் என்ற பெயரைப் பெற்ருன் போலும். மார்க்கோ போலோ. வேறு ஓர் இடத்தில் சுந்தர பாண்டியனைச் "செந்தர் பண்டி" என்று அழைப்பது இங்கே குறிப்பிடத் தக்கது. இலங்கையை ஆண்ட மன்னர்களும் பாண்டிய வமிசத்தைச் சேர்ந்தவர்களே என்பது இதனல் அறியப்படும். அதுவும் அவர்கள் தமிழ் வேந்தர்களே என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

[2] இப்பொழுது - மார்க்கோ போலோவின் இலங்கைப் பயணத்தின் போது.

ஒரு முழத் துண்டுடன் மட்டும் அரை நிர்வாண நிலையில் திரிந்துழல்கின்றனர். அவர்களுக்கு அரிசியும், எள்ளுமே முக்கிய விவசாயப் பண்டங்களாகும். எள்ளி லிருந்து எண்ணெயைப் பிழிந்தெடுத்து, அதை அதிகமாகப் பயன்படுத்துகின்றனர். அவர்களுக்குப் பால், அரிசி, மாமிசம் ஆகிய இவையே முக்கிய உணவுகளாகும். தென்னையிலிருந்தும் பனையிலிருந்தும் இறக்கப்பட்ட பதனீ யென்னும் நீரை உணவாகவும், பானமாகவும் உட்கொள் கின்றனர் இந்தக் கருங்காலி மரங்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன. இத்தீவு உலகில் மற்ற எல்லா இடங்களை விட, அழகானதும், விலை உயர்ந்ததுமான வைரம், வைடூரியம் போன்ற நவரத்தினங்களை உற்பத்தி செய் கிறது. பச்சை, வைரம், கெம்பு, கோமேதகம், புஷ்பராகம், வைடூரியம் போன்ற பற்பல உயர்ந்த கற்கள் இயற்கையாக வும் கிடைக்கின்றன.

## அரசனிடம் உள்ள அதிசய வைடூரியம்

இத் தீவின் அரசனிடம், அதுவரையில் யாவரும் பார்த் திராத மிகச் சிறந்த வைடூரியக்கல் ஒன்று இருக்கிறதாகக் கூறப்படுகிறது. அது ஒரு சாண் நீளமும், மனிதனின் கை அளவு கனமும் உள்ளதுமாக விளங்குகிறதாம். அதன் ஒளி கண்களால் பார்க்கமுடியாத அவ்வளவு பிரகாசமாக இருப்பதாயும், அவ்வொளியின் அளவினை விவரித்துக்கூற முடியாதென்றும், அக் கல் அணுவளவுக் குற்றமும் இல்லாதவாறு விளங்குகிறதென்றும் கூறப்படுகிறது. அவ்வதிசயக் கல் ஒளி விடும்போது, நெருப்பு "தகதக" வென எரிவது போன்று தோற்றமளிக்கிறதென்றும், அதன் மதிப்பு இவ்வளவுதான் என்று எவராலும் இறுதி யாகக் கணக்கிட்டுக் கூறமுடியாது என்றும் சொல்லப்படு கிறது. சீனப் பேரரசர் குப்ளாய்கான் இத் தீவின் மன்ன

னுக்கு, அவனிடத்தில் உள்ள அவ்வதிசய வைடூரியத்தை விலைக்குத் தரவேண்டுமென்று தூது ஒன்று அனுப்பினார். அதன் விலை ஒரு பெரிய நகர மதிப்பின் அளவாக இருந்தாலும், அதைத் தாம் விலை கொடுத்துப் பெற்றுக் கொள்வதாக அத் தூதுவர்களிடம் சொல்லி, அவ்வைடூரியத்தை எவ்வாறாயினும் பெற்றுவருமாறு அவர்களைத் தூண்டினார். அத் தூதுவர்கள் அவ்வரசனை அடைந்து, சீனப் பேரரசர் கேட்டதைச் சொன்னபோது, அவ்வரசன் கூறியதாவது: "இப்பூமி முழுவதும் உள்ள நிதியங்களைத் திரட்டிக் கொடுத்தாலும் இவ்வைடூரியத்துக்கு ஈடாகாது; அவ்வளவு பொருள் கிடைப்பதாயிருந்தாலும், தான் ஒருக்காலும் இவ்வைடூரியத்தை விற்கப் போவதில்லை; மற்றும் எந்த நிபந்தனையின் பேரிலும் இவ்வரிய மணியைத் தன் நாட்டினின்று வெளியே போக விடுவதில்லை; இது தன் முன்னோர்கள் மூலமாக அரசாங்கத்தினரால் பாதுகாக்கப் பட்ட பொருளாதலால், இதை எக்காரணத்தாலும் தான் இழக்கச் சம்மதிக்க முடியாது," என்னும் பொருள்படப் பதிலுரைத்தான். இதனால் பேரரசர் குப்ளாய்கானுக்கு, அவ்வரிய வைடூரியத்தைத் தமதாக்கிக் கொள்ள முடியாமலும், விலைக்குப் பெற முடியாமலும் போயிற்று.

இத் தீவில் உள்ளவர்கள் போர்செய்யும் திறமை கொண்டவர்களாகக் காணப்படவில்லை. மந்த புத்தியுள்ளவர்களாகவே காணப்படுகின்றனர். அதனால் அவர்கள் எப்பொழுதும் சாந்த முகத்துடனே காட்சியளிக்கின்றனர்; போர் செய்வதற்கு ஆள்கள் தேவையாயின், பக்கத்து நாடுகளிலிருந்து பணத்தைக் கொடுத்துத் தேவைக்குத் தகுந்தவாறு மகமதியர்கள் வரவழைக்கப்படுகின்றனர்; சிறப்பான வேறு இயல்பை இங்குக் காணக்கூடாமையால், நாம் மாபர் நாட்டைப் பற்றிக் கவனிப்போம்.

(மாபர் நாட்டைப்பற்றி விவரமாகக் கூறிவிட்டு, மறுபடியும் இலங்கைத் தீவைப்பற்றி முன்பு தாம் சொல்ல மறந்துவிட்ட கருத்துகள் சிலவற்றை மார்க்கோ போலோ எடுத்துரைக்கிறார்.)

**தீவின் சிறந்த சிகரம்**

முன்னர் நான் இலங்கையைப் பற்றி விவரித்தவிடத்துச் சில செய்திகளைக் கூற மறந்து விட்டேன். அவற்றைக் கூறாமல் மேலே செல்ல என் மனம் இடந்தரவில்லையாதலால், அவற்றை இங்குக் கூறுகின்றேன். மற்றும், இச் செய்திகள் யாவும், என்னுடைய சொந்த நாடாகிய வெனிசு நகரத்துக்குத் திரும்பிச் செல்கையில் இங்குப் பார்த்துத் தெரிந்துகொண்ட அரிய செய்திகளாகும்.

இத் தீவில் செங்குத்தாயும், பெரும் பாறைகளால் உண்டானதுமான மிகப் பெரிய மலை[1] ஒன்று இருக்கிறது. இதன் உச்சியை அடையவே முடியாது.[2] அப்படி அடைய முயல்வதாக இருந்தால், இரும்புச் சங்கிலிகொண்டு, பிணைத்து, அதன் உதவியால்தான் உச்சியையடைய வேண்டும். இச் சங்கிலியின் உதவியைக் கொண்டும் சிலர், இம் மலையின் உச்சியை யடைகின்றனர். அவ்வுச்சியில், நம் வமிசத்தின் ஆதித்தந்தை எனப்படும் ஆதாம்[3]

---

[1] Adam's Peak - அதாவது ஆதாம் சிகரத்தைக் குறிப்பிடுகிறார். இப்பொழுது அதன் உயரம் 7352 அடி என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

[2] உயர்வு நவிற்சியாக அதன் உயரத்தை அறிய இவ்வாறு கூறுகிறார்.

[3] Adam-"பைபிள்" என்ற விவிலிய நூலில் விளிக்கப்படும் ஆதித் தந்தையான ஆதாம் என்பவரை மார்க்கோ போலோ இங்குக் குறிப்பிடுகிறார்.

புதையுண்ட இடம் இருப்பதாகக் கூறப்படுகிறது. அவ்விடத்தில் சமாதி ஒன்றும் காணப்படுகிறது. இது சாரசன்[1] மக்கள் கூறும் வரலாருகும்.

## மலைமீது சென்ற புத்தர் பெருமான்

ஆனல் விக்கிரகத்தை ஆராதிக்கும் மக்கள் இம் மலை உச்சியில் சாகாமான் - பர்ச்சான்[2] என்ற மத குருவின் உடல் புதைக்கப்பட்டிருப்பதாகச் சாதிக்கின்றனர். இப்பெரியார் மிக்க புனிதத் தன்மை வாய்ந்தவராக இருந்தார் என்றும், இவர் ஏற்படுத்திய மதத்துக்கே இவர் ஆதி

---

[1] **Saracens**-சிரியா **(Syria)** நாட்டு மகமதிய மக்கள் இம் மலைக்கு அடிக்கடி யாத்திரையாக வந்து செல்வர். அவர்களுடைய வேதமாகிய குரானில் பின் வருமாறு குறிக்கப்பட்டுள்ளது :

சுவர்க்கத்திலிருந்து மக்கள் கீழே தள்ளப்பட்டபோது ஆதாம் என்ற ஆதித் தந்தை இலங்கை நாடாகிய செரன் தீபத்தில் **(Seren Deep)** விழுந்ததாகவும், ஏவாள் **(Eve)** என்ற ஆதாமின் மனையாள் அரேபியா நாட்டில் உள்ள ஜோடா **(Joda)** என்னும் இடத்தில் விழுந்ததாகவும் இதனல் தெரிவிக்கப்படுகிறது.

ஆகையால், **Adam's Peak** என்ற இம்மலைச் சிகரத்தின் பெயர் மகமதியர்களாலும், போர்ச்சுகீசியர்களாலும் இடப்பட்டிருக்க வேண்டும் என ஆராய்ச்சி வல்லுநர் கூறுகின்றனர். வரலாறு எவ்வாருயினும், ஆதாம் சிகரம் இன்றும் ஒரு முக்கிய யாத்திரைத் தலமாக அமைந்துள்ளது சிந்தனைக்குரியது. இவ் விடத்தில் மகமதியர்கள், கிறிஸ்தவர்கள், இந்துக்கள் மூவரும் ஒருங்கு சேர்ந்து வழிபாடு செய்வது போற்றற்குரியதாகும்.

[2] **Sogomon - Berchan**—சாக்கிய முனி என்று கொண்டாடப்படும் புத்தமதத்தை உண்டாக்கிய புத்த பெருமானைக் குறிக்கும் ஒரு சொல்லாகும். பர்ச்சான் என்ருல் டார்டாரியரின் மங்கோலிய மொழியில் "தேவன்" என்று பொருள்படும். ஆகவே, சாகாமான் பர்ச்சான் என்ருல் சாக்கிய முனி தேவன் என்ற சொற்ருெடரின் சிதைந்த வடிவேயாகும்.

குருவாக விளங்கினர் என்றும் கூறப்படுகிறது. இவர் அத் தீவின் அரசனின் மகனுகப் பிறந்து, இளம் வயதி லேயே சுகபோகங்களையெல்லாம் துறந்து துறவறத்தை மேற்கொண்டார். இதையறிந்த இவருடைய தந்தை விலை யுயர்ந்த பொருளையும், பொன்னையும் ஈந்து, நல்ல அழகு வாய்ந்த பல மங்கையரை மணந்து இன்ப வாழ்வு நடத்து மாறு போதனை செய்தும், இவர் அவையாவும் நித்திய மில்லாத - நிலையற்ற - நீர்க் குமிழி யொத்த வாழ்வு என உதறித்தள்ளி, தமது உயர்ந்த கொள்கையினின்று சிறிதும் விலகவேயில்லை.[1] தூய துறவறப்பாதையிலேயே ஒழுகி வந்தார்.

## புத்த பெருமானின் சின்னங்கள்

அத் துறவறப் பாதையினின்றும் அவரை விலக்க எத்தனையோ முயற்சிகள் செய்தும், எதுவும் சிறிதும் பலனளித்ததாகத் தெரியவில்லை. சிறுவராயிருந்த அவ்வர சிளங்குமரன், ஒருவருக்கும் சொல்லிக் கொள்ளாமலே, தன்னந் தனியாக இம் மலைமீது ஏறி, அங்குக் கடுந்தவம் இயற்றி, விரதம் காத்து, எவர் கண்ணிலும் படாமல், தன்னுடைய ஊன் உடலை விட்டுவிட்டு உயர்வுமிக்க புகழுடம்பு எய்தினர். விக்கிரக ஆராதனைக்காரர்களால்

---

சாக்கியமுனி என்ற சொல்லையே சாகாமான் என்று வழங்கு கிறுர் மார்க்கோ போலோ.

ஆதாம் சிகரத்தில் கல்லால் செதுக்கப்பட்ட பாதம் உள்ளது. இதைப் புத்த தேவனுடைய திருப்பாதம் எனப் பௌத்தர்கள் கூறுகின்றனர். இதை அவர் ஸ்ரீபாதம் (Sree Pud) என்ற பெயரால் வழங்குகின்றனர். மகமதியர்கள் இதை ஆதாமின் பாதம் (Adam's Foot) என்ற பெயரால் வழங்குகின்றனர்.

[1] இவ்வரலாறு புத்த பெருமானின் வரலாற்றேடு எவ்வளவு ஒத்திருக்கிறது என்பதைக் கண்டுகொள்க. புத்த பெருமான் இலங்கைக்கு வந்தது இதனுல் தெளியப்படும்.

இவர் ஒருஞானியராகவும்[1] தவசியாகவும் கருதப்படுகின்றார். இவ்வாறு தன் அருமை மைந்தன் துறவறம் பூண்ட செய்தியினை யறிந்த தந்தையான அரசன், மிகவும் மனம் நொந்து, பொன்னாலும், நவரத்தினங்களாலும் ஆனதுமான தன் மகன் உருவம் போன்ற பெரிய சிலை யொன்றினைச் செய்து, அதை மக்கள் தக்கபடி ஆராதிக்குமாறு கட்டளையிட்டான். விக்கிரக வழிபாட்டின் காரணம் இம் மாதிரியாகத்தான் தொடங்கிற்று. ஆனால், சாகாமான் பர்ச்சான் என்ற தெய்வம் மற்ற எல்லாத் தெய்வங்களையும்விடச் சிறந்ததாகக் கருதப்பட்டு வருகிறது. இந் நம்பிக்கைக் காரணமாக, பற்பல பாகங்களிலிருந்தும் மக்கள் பெருவாரியாகத் திரண்டு, புனித யாத்திரையாக, இம் மலையுச்சியில், இவர் புதையுண்ட புனித இடத்துக்குப் பயபக்தியோடு காணிக்கைச் செலுத்தக் குழுமுகின்றனர். அவ்விடத்தில், இத் துறவியார் பயன்படுத்திய பாத்திரங்களும், இவரது கேசமும்[2], பற்கள் சிலவும் பத்திரப்படுத்தி வைக்கப்பட்டு, சிறந்த பூசாவிதிகளுடன், அவை இங்கு வரும் யாத்திரிகர்களுக்குக் காட்டப்பட்டு வருகின்றன. இதற்கு மாறாக, சாரசன் மக்கள், அச் சின்னங்கள் தங்கள் மத குருவான தீர்க்கதரிசி ஆதாமுக்குச் சேர்ந்தனவென்றும், அதனால்தான் தாங்கள் பெருவாரியாக அம் மலையுச்சிமீது குழுமுவதாகவும் கூறுகின்றனர். எது எவ்வாறாயினும், அம் மலைச்

---

[1] போதி விருட்சத்தின் கீழ்க் கடுந்தவம் இயற்றிப் புத்தர் எனப் பெயர் பெற்ற வரலாறு ஈண்டு நோக்கற்பாலது. புத்தர் என்றாலே ஞானியார் என்றல்லவா பொருள்படும். பௌத்த மதம் இலங்கையில் அதிவேகமாகப் பரவினதற்குரிய சிறந்த ஒரு காரணத்தை இதனால் அறியலாமன்றோ? போதி, போதம் எனும் சொற்கள் ஞானம் எனும் பொருளை உணர்த்தும். ஆக, போதிமரம் என்பது ஞானத் தரு என்று வழங்கப்படலாயிற்று.

[2] மயிர் முடி

சிகரம் சிறந்த புனிதத் தன்மை பெற்ற இடம் என்பது யாவரும் ஒப்ப முடிந்ததொன்றும்.

## சீனப் பேரரசர் பெற்ற பௌத்த சின்னங்கள்

சீனப் பேரரசராகிய குப்ளாய்கான், அம்மலைக்கு யாத்திரைக்குச் சென்று திரும்பிய சில சாரசன் மக்களிட மிருந்து, நமது ஆதித் தந்தையின் புராதனச் சின்னங்களைப் பற்றிய மகிமையைப் பலவாறாகக் கேள்விப்பட்டு, அவற்றில் சிலவற்றைத் தாம் பெறவேண்டும் என்ற பேராவல் கொண்டு, செய்லான் நாட்டு அரசனிடம் இச் சின்னங்களைப் பெறும் உயர்ந்த நோக்கத்துடன், தூது கோஷ்டி ஒன்றினை அனுப்பி வைத்தார். அவர்களும் அரசர் ஆணையைச் சிரமேற்றாங்கி, சங்கடமான இன்னல் கள் பலவற்றைக் கடந்து, கடுமையாக யாத்திரை செய்து, கடைசியாகத் தாங்கள் நாடிவந்த இடத்தை யடைந்தனர். அந் நாட்டு அரசனை அணுகி, தாங்கள் வந்த வரலாற்றினை யுரைத்து, குப்ளாய்கான் விரும்பின பௌத்த சின்னங்கள் சிலவற்றைத் தருமாறு வேண்டினர். வேண்டியதை வேண்டியவாறு அளிக்கும் பண்பாடு வேந்தர்க்கு உண்டல்லவா? இலங்கை வேந்தனிடமிருந்து புத்தரின் இரண்டு பெரிய கடைவாய்ப் பற்களும், சில கேசங்களும், மற்றும் நிவேதனங்கள் அடங்கிய, அழகும் வேலைப்பாடும் அமைந்த, பாத்திரம் ஒன்றும் பெற்றுத் தூதுவர் தம் நாடு திரும்பிச் சென்றனர்.

## பௌத்த சின்னங்களுக்கு அளித்த மகத்தான வரவேற்பு

இவ்வாறு தம்முடைய தூதுவர்கள், கிடைக்க முடியாத அரிய புனிதப் பொருள்களுடன் யாத்திரையி லிருந்து திரும்பி வந்ததை யறிந்த அச் சீனப் பேரரசர்

குப்ளாய்கான், தம் நாட்டு மக்கள் யாவரையும் ஒருங்கு திரண்டு நாட்டின் எல்லைக்குச் சென்று, அங்கிருந்தே அவர்களுக்குப் பெருவாரியான வரவேற்பளித்து, அப் பெரும் பௌத்த சின்னங்களைத் தமது அரண்மனைக்கு ஆரவாரத்தோடும் தக்க மரியாதைகளுடனும் எடுத்து வரக் கட்டளையிட்டார். அவ்வாறே அந்நாட்டு மக்கள் யாவரும் ஒருங்கு கூடி, நாட்டின் எல்லைக்குச் சென்று, புனித யாத்திரையினின்று அரிய பொருள்களோடு வெற்றிகரமாகத் திரும்பி வரும் யாத்திரிக மக்களை உற்சாகமாக வரவேற்று, அவர்களுக்குத் தக்க மரியாதைகள் செய்து, அவர்கள் கொணர்ந்த அரும்பெரும் சின்னங்களைத் தலைமேற்றாங்கி, ஆரவாரத்துடனும், கோலாகலத்துடனும், வாத்திய முழக்கத்துடனும், அரசர் வாழும் அரண்மனைக்கு எடுத்து வந்தனர். பேரரசர் முன்னிலையில் அவற்றைப் புனிதத் தன்மையோடு இறக்கி வைத்தனர்.

செய்லானில் உள்ள மலையைப் பற்றிய வரலாற்றை இதுகாறும் கூறினேன். இனி மாபர் நாட்டுக்குத் திரும்பிச் சென்று, அங்கு உள்ள காயல் என்ற நகரத்தைப் பற்றிப் பேசுவோம்.''

(இதன் தொடர்ச்சி முந்தின அத்தியாயமாகிய ''காயலும், குமரியும்'' என்ற தலைப்பில் விவரித்துரைக்கப்பட்டுள்ளது.)

# 7. மசூலி நகரமும் லார் நாடும்

"மர்பிலி' எனும் அரசாங்கம் முதலில் ஓர் அரசனின் ஆளுகையின் கீழ் இருந்தது. அவன் இறந்த பிறகு, அவன் மனைவி அப் பட்டம் பெற்றாள். தன் கணவனிடம் கொண்ட பேரன்பு காரணமாக, தான் வேறெவரையும் மணப்பதில்லை என உறுதி பூண்டாள். அவள் அந் நாட்டை, அவள் கணவன் ஆண்டதைவிட நன்றாகவே ஆண்டாள். அவள் நியாயம், நேர்மை, கட்டுப்பாடு, அமைதி ஆகியவற்றை விரும்பியதால், அந் நாட்டு மக்கள் அவ்வரசியைப் பெரிதும் போற்றி வந்தனர் அந்நாடு எவருக்கும் கப்பம் கட்டுவதில்லை. அந்த நாட்டில்தான் வைரங்கள் எடுக்கப்படுகின்றன.[2]"

## வைரம் கொடுக்கும் நாடு

"மாபர் நாட்டைக் கடந்து, ஐந்நூறு மைல் நேர் வடக்காகச் செல்லுமிடத்து, மர்பிலி[1] அரசாங்கத்தை

---

[1] Murphili or Monsul - மசூலிப்பட்டினம் என்றதன் பலபடியாகத் திரிந்த பெயர். மச்சூலி (Machuli) என்பது மசூலி என்றாயிற்று. இதை Mansul அதாவது மன்சூல் என்ற பெயராலும் அழைத்தனர். எவ்வாறாயினும் இது மசூலிப் பட்டினத்தையே குறிக்கிறது. அக்காலத்தில் இந் நகரம் தெலிங்கானு (Telingana) நாட்டைச் சேர்ந்ததாயும், கோல் கொண்டா (Golconda) என்ற பிரதேசத்தையுடையதாயும் இருந்தது. கோல்கொண்டா என்ற இடம் வைர உற்பத்திக்குப் பெயர் பெற்ற இடமாக விளங்கியது.

[2] மார்பிலி என்பதை மோடுபல்லி (Motupalli) என்று சிலர் கருதுகின்றனர். மோடுபல்லி குண்டூர் மாவட்டத்தில் இருந்தது. இந் நாட்டை **ருத்ரம்பா** என்ற பெண்ணரசி

அடைவோம். அந் நாட்டு மக்கள் விக்கிரக ஆராதனை செய்பவர்கள். சுதந்தரமாக வாழ்க்கை நடத்தி வாழ்கின்றனர். அவர்களுடைய முக்கிய உணவுகள்: அரிசி, மாமிசம், மீன், பழங்கள் முதலியன. இப் பிரதேசத்து மலைக்குகைகளில்தான் வைரங்கள் பெருவாரியாக உற்பத்தியாகின்றன. மழைக் காலங்களில் மலைச் சாரல்களில் மழை பெய்தவிடத்து, அம் மழைநீர் மலைக் குகைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் பெரும் விசையுடன் இறங்குகிறது. பிறகு அந்நீர்ப்பெருக்கு ஆறுகப் பெருகிக் கடலில் கலக்கிறது. மலையிலிருந்து விழுந்த நீர் ஆற்றில் கலக்கும் இடத்தில் மக்கள் கூட்டமாகக் காத்திருந்து மலை மீதிருந்து மழையால் அடித்து வரப்பட்ட வைரக் கற்களைப் பொறுக்குவார்கள். வண்டல் மண்ணோடு வைரங்களும் சேர்ந்து அடித்து வரப்படுவதால், மண்வளத்தைக் காணவும், வைரக்கல் தனத்தைப் பெறவும் பெருவாரியாக மக்கள் அச் சந்திப்பில் கூடி நிற்கின்றனர்.

வைரம் எடுப்பதற்குப் பின்வரும் முறை மேற்கொள்ளப்படுகிறது:

### வைரம் எடுக்கும் முறை

கோடைக் காலத்தில் வெயிலின் கொடுமை அதிகமாக இருக்கும்பொழுதும், மழை இல்லாத காலத்தும் வைரத்தைப் பொறுக்கும் தொழிலில் ஈடுபட்ட வணிகர்கள் அம் மலைமீது மிக்க ஆயாசத்துடன் கடினமாக முயன்று ஏறுவார்கள். அம்மலையில் ஊர்ந்து வாழும் ஆயிரக்கணக்கான

(கி. பி. 1257-1295) ஆண்டு வந்தாள் என்று கூறப்படுகிறது. அவள் தன் மகன் பிரதாபருத்ரன் II தக்க வயது வந்தவுடன், அவனுக்குப் பட்டம் சூட்டித் தான் விலகிக் கொண்டாள். ருத்ரம்பா, விதவையாயிருந்தும், நாட்டினை நன்கு பாதுகாத்தாள் என்று வரலாற்றுசிரியர்கள் கூறுவர். மற்றும் பக்கம் 62, குறிப்பு-1 பார்க்கவும்.

பாம்புகளினின்றும் தங்கள் உயிரைப் பாதுகாத்துச் செல்ல வேண்டும். அம் மலேயுச்சிக் கருகில் ஆழமான பள்ளத் தாக்குகளும், அவற்றில் பற்பல குகைகளும், அக் குகை களுக்கு மேலாகச் செங்குத்தான கற்பாறைகளும் இருக் கின்றன என்று சொல்லப்படுகிறது. அக் குகைகள் போன்ற பெரும்பாழிகளில்தான் வைரங்கள் பெருவாரி யாகக் குவியல் குவியல்களாகக் குவிக்கப்பட்டிருக்கின்றன என்று அவ் வணிக மக்கள் கூறுகின்றனர். வாழையும், வைரமும் உள்ள இடங்களில் பாம்பின் நடமாட்டம் அதிகம் இருப்பது இயல்பன்றே! ஆகவே, இவ்விடத்தில் பாம்புகளின் நடமாட்டம் அதிகமாக இருத்தலால், அவை களைத் தங்களுக்கு இரையாக்கும் நோக்கத்துடன் கருடப் பறவைகளும், சிலவகைப் பருந்துகளும் அப்பாழிகளில் தங்கள் கூடுகளைக் கட்டி, அவைகளில் வாழ்கின்றன. வைரக் கற்களைச் சேகரிக்க மலே ஏறிச் செல்லும் வணிகர், கொடுமை மிக்க அக் குகை வாயில்களில் நின்று, இதற் காகக் கொண்டு வந்திருக்கும் மாமிசத் துண்டுகளைச் சிறுசிறு துணுக்குக்களாக நறுக்கி அவற்றை அக் குகைகளில் வீசி எறிவார்கள். அம் மாமிசத் துணுக்குகளைப் பொறுக்கப் பறவைகளும், கழுகுகளும் அங்குப் பறந்து அத் துணுக்கு களைத் தங்கள் மூக்கினுல் கொத்திக்கொண்டு, சரேலென அக் குகைக்கு மேலாகப் பறந்து சென்று, மலேமீது காணப் படும் மரங்களிலோ, கற்பாறைமீதோ உண்ண உட்காரு கின்றன. அங்கு வந்து காத்துக் கொண்டிருக்கும் வணிகப் பெருமக்கள் அப் பறவைகளைப் பலவித ஓசைகள் எழுப்பித் துரத்திவிட, அவை இவ்வோசையைக் கேட்ட வுடன், தங்கள் அலகில் சிக்க வைத்திருக்கிற மாமிசத் துண்டைக் கீழே போட்டுவிட்டுப் பறந்து சென்று விடுகின்றன. எண்ணெயும் கொழுப்பும் தடவிய அம் மாமிசத் துண்டுகளில், மலேக்குகையினுள் இருக்கும் வைரக்

கற்கள் மிகுதியாக ஒட்டிக் கொண்டிருக்குமாதலால், அவற்றை அவ் வணிகர்கள் உடனே பிரித்தெடுத்துப் பொறுக்கிவைத்துக் கொள்வார்கள்.[1]

ஆனால், அவர்கள் அப் பறவைகளை ஓட்டுவதற்குள் அவை அம் மாமிசத் துணுக்குகளைத் தின்று விழுங்கி விட்டிருந்தால், அப் பறவைகளைக் குறிப்பாக அடையாளங் கண்டுகொண்டு, அவை இரவில் எங்குச் செல்கின்றன என்று கண் கொட்டாமல் பார்த்து நின்று, அவற்றைப் பின்தொடர்ந்துசென்று, எம்மரத்தில் அன்று இரவு தங்குகிறதோ அம்மரத்தின் அடியில் அடுத்த நாள் காலை வரையில் காத்திருந்து, அவை போடும் எச்சங்களைக் களைந்து, அவற்றிலிருந்து வெளிப்படும் வைரக் கற்களைப் பொறுக்கி எடுத்துக்கொள்வர்.

இவ்வாறு இன்னல்கள் பலவற்றைக் கடந்து சென்று, மதிப்பிற்குரிய வைரக் கற்களைப் பொறுக்கி எடுத்து, அவற்றில் மிகச் சிறந்தவற்றைச் சீனப் பேரரசர் குப்ளாய் கானுக்கு விற்பதற்காக எடுத்துச் செல்கின்றனர். மற்றும் சில கற்கள், அந்நாட்டுப் பிற அரசர்களுக்கும் செல்வந்தர்களுக்கும் மிகுந்த விலைக்கு விற்கப்படுகின்றன. இதன்

---

[1] இம்மாதிரியாக வைரம் பொறுக்கப்படும் வரலாறு ஒன்று **"சிந்து பாத்"** என்ற நூலில் காணப்படுவது ஈண்டு நோக்கற்பாலது. "சிந்து பாத்" அராபிய நாட்டுக் கதைகளில் ஒரு பகுதியாகும். அப்பகுதி ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரையில் அரபு மக்கள் வழக்கில் காணப்பட்ட கதைகளைக் கோவைப்படுத்தப்பட்ட ஒரு தொகுதியாகும். பாரசீக மன்னன் ஒருவனுக்கு ஆயிரம் இரவுகளாக மங்கையொருத்தியால் அக் கதைத் தொகுதி கூறப்பட்டதாகச் செய்திகள் தெரிவிக்கின்றன. அதனால் தான் அவற்றிற்கு Arabian Night's Stories என்று பெயரிடப் பட்டன. இதன் விரிவை எனது **"சிந்து பாத்"** என்ற நூலில் காண்க. சிந்துபாத் இயற்றப்பட்ட ஆண்டு கி. பி. 850 என்று ஆசிரியர்கள் ஒரு முகமாகக் கூறுவர்.

—(சிந்துபாது; பக்கம் 27, 34)

காரணமாக, கிறித்தவர்களுக்குக் கிடைக்கும் வைரக் கற்கள் முதல் தரமான வைரங்களாக இருப்பதில்லை. நல்ல வைரங்களை அதிக விலை கொடுத்து வாங்கும் சக்தி அரசர்க்கே உண்டல்லவா?[1]

## மசூலி நாட்டின் நல்வளம்

இந் நாட்டில், மற்ற இந்திய நகரங்களில் தயாரிக்கப் படும் துணிகளைவிடச் சிறந்த முறையில் துணிகள் தயாரிக்கப் படுகின்றன[2] இவர்களிடம் ஆடு மாடுகளின் மந்தைகள் ஏராளமாக இருக்கின்றன. உலகத்திலேயே பெரியதாக மதிக்கத் தகுந்த இச் செம்மறியாட்டு மந்தை களின் கூட்டங்களும், எல்லாவித உணவுப் பண்டங்களும்,

---

[1] "Marco Polo says on the east coast a widowed Queen was ruling who administered her realm "as well as her husband did or better" and as she was a lover of justice, equity and peace, she was more beloved by those of her kingdom than ever was lady or lord of theirs before" This was Queen Rudramma (1257-95) of the Ganapathi Dynasty of Warrangal.

— (Vide A Concise History of the the Indian People, Part I, by H. G. Rawlinson, p: 116).

[2] இந்தியாவின் மேற்குக் கடற்கரையோரமாக மலை யாளக் கடற்கரையில் உள்ள கோழிக்கோடு என்னுமிடத்தில் Calico என்று உற்பத்தி செய்யப்படும் துணி மார்க்கோ போலோ காலத்திலிருந்தே பெரும் புகழ் பெற்றிருந்தது. மசூலிப்பட்டினத்தில் தயாரிக்கப்பட்ட துணி வகைகளுக்குச் சின்செஸ் (Chintzes) என்ற பெயர் வழங்கி வந்தது. இவ் விடமும் துணிகள் உற்பத்தி செய்வதற்குப் பெயர் பெற்ற இடமாகும். இங்கு மிக மெல்லிய மஸ்லின் ஆடைகள் போன்ற வகைகளையும் தயாரித்தனர். Calico துணிகள் அவற்றை விடச் சிறிது முரட்டு வகையினைச் சேர்ந்தன வென்று கருதப்பட்டு வந்தது.

விவசாயப் பொருள்களும் அளவின்றிக் குவிந்து கிடக்கின்றன.

### லார் நாட்டு மக்களின் பண்பாடு

கீர்த்திபெற்ற அப்போஸ்தலர் தாமஸ் முனிவரின்[1] பூத உடல் புதைக்கப்பட்ட இடத்தை[2] விட்டு, மேற்கு முகமாகச் சில மைல்கள் சென்றவிடத்து, நீங்கள் லார்[3] என்று வழங்கப்படும் நாட்டின் எல்லைக்குள் நுழைவீர்கள். இவ்விடம்தான், இந்தியாவின் பல பாகங்களில் வாழும் அந்தணர்களின் ஆதிநாடாக விளங்கி வந்தது. இவ்வந்தணர்

---

[1] Saint Thomas, the Apostle.

[2] San Thome.

[3] **Lar** - லார் எனப்படும் நாடு என்னவென்பது இன்றும் மயக்கமறத் தெளிவாக விளங்கவில்லை. இச்சொல் காஞ்சீபுரம் என்னும் புண்ணியத் தலத்தைச் சுற்றியுள்ள பிரதேசத்தைக் குறிப்பதாகக் கொள்ளவேண்டும். இதைத் தொண்டை மண்டலம் என்ற பெயரால் அழைத்தனர்: கலிங்கத்துப் பரணி ஆசிரியரும், பிறரும்,

> **"தொண்டை யர்க்கரசு முன்வ ருஞ் சுரவி**
> **துங்க வெள்விடை உயர்த்த கோன்**
> **வண்டை யர்க்கரசு பல்ல வர்க்கரசு**
> **மால்க விற்றின் மிசை கொள்ளவே."**

(கலிங்கத்துப்பரணி - 364.)

என்ற அடிகளில் தொண்டை நாடு குறிக்கப்படுகிறது. இப்பரணி பதினோராம் நூற்றாண்டில் சயங்கொண்டாரால் முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் (கி. பி. 1078—1118) இயற்றப்பட்டதென்று வரலாற்றுப் பேராசிரியர்கள் கூறுவர்.

இந்த லார் நாட்டில் தான் அந்தணர் குழுக்கள் அதிகமாகக் காணப்பட்டன. அக் காலத்தில் காஞ்சீபுரம் மிக்க புகழ் படைத்த நகரமாக விளங்கிற்று. அவ்விடத்தில் சிறந்த கோயில்களும், சைன மடாலயங்களும் பெருகி இருந்தன. பல்கலைக்கழகம் ஒன்று மிகச் சிறந்த முறையில் நடத்திவரப் பட்டதென வரலாற்று நூல்கள் தெரிவிக்கின்றன.

களின் பெரும்பாலோர் வாணிபஞ் செய்யும் தொழிலை மேற்கொண்டிருக்கின்றனர்.[1]

இவ்வணிகப் பெருமக்கள் நாணயமும் நேர்மையும் வாய்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். இவர்கள் தம் இன்னுயிர் போவதாக இருப்பினும், பொய் என்ற சொல்லே இவர்கள் நாவினின்று வெளிவராது. எவ்வித இலாபத்தை அடைய நேர்ந்தாலும், அதற்காக ஒரு பொய் யேனும் கூறச் சம்மதிக்கமாட்டார்கள். மற்றவர்களின் பொருள்களைத் தீய வழிகளில் தமதாக்கிக்கொள்ளும் முறைகளால் ஏற்படும் தீமைகளைக் கண்டு அஞ்சும் நெஞ்சம் படைத்தவர். மற்றும், இவர்கள் ஒரே மனைவி யுடன் வாழ்ந்து, இல்லறத்தை நல்லறமாக நடத்தி மன

---

மயூர சன்மன் என்ற பேரறிஞர் முதலில் காஞ்சிப் பல்கலைக்கழகத்தில் படித்துக் கலைகளில் பாண்டித்தியம் அடைந்து பிறகு நாலாந்தா பல்கலைக்கழகத்துக்குப் போதக ராகப் போனதாகச் சரித்திர வரலாறு சான்று பகர் கின்றது. இதனுல் காஞ்சியிலிருந்த பல்கலைக்கழகத்தின் மகிமை ஒருவாறு உய்த்துணரப்படும்.

லார் (Lar) எனப்படும் நாடு பாலாறு (Palar) வழிந் தோடும் நாட்டைக் குறித்து நின்றது. மொழிபெயர்ப்புத் தவறுதலாலும், காலமிகுதியினுலும், பாலாற்றில் உள்ள பா என்னும் சொல் கெட்டு, லார் என்ற சொல் மட்டும் எஞ்சி நின்றது. ஆகையால் பாலாறு வழிந்தோடி வளம் கொழிக் கும் நாட்டையே இங்கு லார் எனக்குறிப்பிடுகிருர் எனக் கொள்வது இயைபுடையதே.

[1] இது வாணிபஞ் செய்யும் வைசியர்களையும், தன வணி கப் பெருமக்களையும் குறிக்கும் Brahmins (அந்தணர்) என்ற சொல்லையும், Banians (பனியாக்கள் - அதாவது வியாபாரிகள்) என்ற சொல்லையும் வித்தியாசம் தெரியாது உபயோகித்திருப்பதால், அந்தணரைப் பற்றிய ஒருவித மயக்கம் இவ்வதிகாரத்தில் ஏற்பட்டுள்ளது. Brahmins என்ற ஆங்கிலச் சொல்லை Banians என்ற வியாபாரியின் சொல்லாக மாற்றிவிட்டது மொழி பெயர்ப்பாளரின் கைத்திறனுகும்.

நிறைவுடன் வாழ்ந்து வருகின்றனர். இந் நாட்டுக்குப் புதியனவாக வந்த வணிகன் ஒருவன் இவர்களிடத்தில் தன்னுடைய வாணிகப் பொருள்களை விட்டுச் சென்ற விடத்தும், இம் மக்கள் அப் பொருள்களை ஏற்றுக் கொண்டு பத்திரமாகப் பாதுகாத்து, அவற்றை அவனுடைய சம்மதத்தின் பேரில் நன்முறையில் விற்று, அதனால் வரும் பொருள் முழுவதையும் அவனிடம் ஒப்படைப்பர். இவர்கள் செய்யும் இவ்வுதவிக்கு யாதும் கைம்மாறு கருதி நிற்பார் எவரும் இலர் அவர்களே கொடுத்தால் வாங்கிக் கொள்வார்களேயன்றித் தாங்களே கைநீட்டிக் கேட்கும் பழக்கம் இவர்களிடத்தில் கிடையாது. இவர்களுள் பெரும்பாலோர் ஊன் தின்பர். நாட்டுச் சாராயமும் குடிப்பதுண்டு. ஆனல், எவ்வுயிரையும் தங்கள் கைகளினுல் கொல்வதில்லை. உண்ணும் ஊனை மகமதியர் களிடமிருந்து பெறுகின்றனர். அல்லது கசாப்புத் தொழிலுக்கு அவர்களைப் பணியாளர்களாக அமர்த்திக் கொள்கின்றனர்.

அந்தணர் என்பவர்கள் மற்றவர்களினின்றும் அவர்கள் அணிந்துகொள்ளும் பூணூலால் அறியப்படுகின்றனர். அப் பூணூல் கனமான கயிற்று வடத்தால் திரிக்கப்பட்டு, தோளில் மாட்டிக் கை வழியாகக் கொண்டுவரப்பட்டு, மார்பிலும், முதுகிலும் தெரியும்படியாக அணியப்படுகின்றது.[1]

**லார் நாட்டு அரசன்**

இந் நாட்டு அரசன் மிக்க அதிகாரம் படைத்தவனுக

---

[1] வெளி வேடத்தால் அறியப்படும் அந்தணர்களைக் குறிப்பிடுகிறுர் போலும். ஒழுக்கத்தில் சிறந்த அந்தணர் களைப் பற்றி யாதும் கூருது விட்டிருப்பது, அத்தகையவர் களுடன் பழகும் வாய்ப்பு கிடைக்காமையாலேயே என்பது தெளியப்படும்.

விளங்குகிறான். உயர்ந்த நவரத்தினங்களையும் முத்துகளை யும் தான் அணிவதில் மிக்க பெருமை கொள்கின்றான். மாபர் நாட்டு வணிகப் பெருமக்கள் இவ்விடத்தில் உயர்ந்த நவரத்தினங்களைக் கொடுத்து, அதற்கொரு குறைந்த விலையைக் கூறி நிற்பது வழக்கம். உயர்ந்த நவரத்தினங் களுக்கு அவர்கள் கூறும் விலை மிக்க நியாயமான விலையாக அந் நாட்டு அரசனுக்குத் தோன்றும். ஆகையால், அவன் அவர்களுடைய நேர்மையை வியந்து, அவர்கள் கூறும் விலைக்கு அநேகமாக இரட்டிப்பான விலையைக் கொடுத்து அந் நவரத்தினக் கற்களைப் பெற்றுக் கொள்வான். அவ் வுயர்ந்த விலையை அவ்வரசனே மகிழ்ந்து கொடுப்பான். அவர்களுடைய சொற்களின் உண்மையில் அவ்வளவு நம்பிக்கை அவ்வரசர் பெருமானுக்கு உண்டு. இவ்வாறாகக் கூடுதலான விலை கொடுத்து நவரத்தினங்களைப் பெறுவ தால், பலப்பல வணிகப் பெருமக்கள், அவ்வரசனிடம் போட்டி போட்டு நவரத்தினங்களை விற்க முன் வருவார் கள். இதன் காரணமாக, இந் நாட்டு அரசனிடம் மிக்க விலையுயர்ந்த மணிகள் பலவற்றைக் காணலாம். அவற்றை அணிந்து கொள்வதிலும் இந்நாட்டு அரசன் பெருமிதம் அடைகின்றான்.

**மக்களின் நம்பிக்கை**

லார் நாட்டு மக்கள் விக்கிரக ஆராதனை செய்பவர்கள். மற்றும் இவர்களுக்குப் பில்லி, சூனியம், ஏவல் முதலிய வற்றிலும் தேவதைகளின் கோப, தாபங்களிலும் பலத்த நம்பிக்கை உண்டு. இவர்கள் யாராவது ஒரு பண்டத்தை விலைக்கு வாங்க வேண்டுமென்றால், உடனே வெயிலில் நின்று, சூரிய ஒளியினால் பூமியில் விழும் தங்களுடைய நிழலின் நீளத்தைக் கவனிப்பார்கள். அந் நிழலின் நீளம் வேண்டிய அளவினதாக இருந்துவிட்டால், அன்று அப்

பண்டத்தை உடனே வாங்கிவிடுவார்கள். இன்னும்' இவர்கள் பண்டங்களை விலைக்கு வாங்கும் பொழுது, அவ் வங்காடியின் சுவர்களின்மீது ஓடும் பல்லியை நோக்கு வார்கள். அப் பல்லி போகிற திசையைக் கூர்ந்து கவனித்து, எத் திசையினின்று சத்தமிடுகிறது என்று காது கொடுத் துக் கேட்பார்கள். பல்லி சொல்லும் பலனை ஆராய்ந்து, அவ்வணிகர்கள் தங்கள் அன்றைய வாணிகத்தை அதற் கேற்றவாறு முடித்துக் கொள்வார்கள்.[1]

இன்னும் வீட்டிலிருந்து இவர்கள் வெளிக் கிளம்பும் பொழுது, யாராவது தும்மும் ஒலியைக் கேட்டால், உடனே இவர்கள் திரும்பத் தம் வீட்டுக்குள் சென்று உட்கார்ந்து விடுவர்.[2] இவர்கள் உண்ணும் விஷயத்தில் மிகக் கணக் காகவே இருப்பர். அதன் காரணமாக இவர்களில் பெரும் பாலோர் மிக்க முதிர்ந்த வயது அடையுமளவும் வாழ்ந்து வருகின்றனர். இவர்களுடைய பற்கள் உறுதியாகவும்,

---

[1] இந் நாட்டில் இன்றும் "பல்லி விழும் பலன்", "பல்லி சொல்லுக்குப் பலன்", "கௌளி வாக்கு" என்று பற்பல விதமாகப் பல்லிக்கு ஒரு முக்கிய இடம் அளிக்கப்பட்டிருக் கிறதல்லவா? மார்க்கோ போலோ காலத்திலும் இத்தகைய நம்பிக்கை வலுத்திருந்தது. அவர் பல்லி போன்ற பிராணி ஒன்றைக் குறிப்பிட்டு, அதை டாரன்டுலா (Tarantula) என்றழைக்கிறார். (Tarantula) என்றால் சிலந்தி போன்ற ஒரு பூச்சி என்று இலத்தீன் மொழியில் பொருள்படும். ஆனால் இந்தியாவில், அதுவும் தமிழ் நாட்டில், சிலந்தி போன்று சுவரில் ஓடக்கூடியது பல்லி ஒன்றே யல்லவா? ஆதலால் Tarantula என்பதற்குப் பல்லி என்றே பொருள் கொள்வது பொருத்தமானது.

[2] இச் சகுனம் இன்றும் நடைமுறையில் பலரால் மேற் கொள்ளப்பட்டு வருவது கண்கூடு. நல்ல காரியம் நடக்கும் போது, தும்முதலை அபசகுனமாகக் கருதுவது நம் நாட்டு மரபு. திருமண விழாவில் "தாலி மேளம்" அல்லது "கெட்டி மேளம்" என்று மேளத்தில் பேரோசை எழுப்புவது, தாலி கட்டும்போது தும்முதல் முதலிய அபசகுனங்கள் காதில் விழாமல் இருப்பதற்காகத்தான் அல்லவா?

வெண்மையாகவும் காணப்படுகின்றன. இன்னும், இவர்களுக்கு இத்தகைய உறுதிவாய்ந்த பற்கள் இருப்பதற்குக் காரணம் இவர்கள் பச்சிலை போன்ற சுருள்களை மென்று தின்கிறுர்கள்.[1] அப் பச்சிலை, சீரணத்தை விருத்தி செய்து, உடல் ஆரோக்கியத்தை நல்ல முறையில் வைத்திருக்கவும் உதவுகிறது.

### திகம்பரர்

இந் நாட்டு ஆதிவாசிகளிடையே, ஆசாரமும் அனுட்டானமும் மிக்க திங்குவி[2] என்ற ஒரு சாரார் தங்கள் தெய்வத்தின்மீது அதி தீவிர பக்திகொண்டு சட்ட திட்டங்களுக்கு உட்பட்ட வாழ்க்கையை நடத்துகின்றனர். இவர்கள் தங்கள் உடலில் உள்ள யாதோர் உறுப்புகளையும் மூடாமல் நிர்வாண நிலையிலேயே ஊரெங்கும் திரிவார்கள். அதற்கு இவர்கள் கூறும் காரணம், "நாம் பிறக்கும்போது நிர்வாண நிலையிலே தானே பிறந்தோம். அதற்கு ஏன் அவமானப்பட வேண்டும்?" என்பதே.

### நீறு அணிதல்

இந் நாட்டு மக்கள் எருதினுக்கு மரியாதையும், வணக்கமும் செலுத்துவர். தங்கள் நெற்றியில் அத்தகைய எருதின் வடிவமான பித்தளையால் செய்த உருவம் ஒன்றைத் திலகமாக அணிந்து செல்லும் வழக்கம் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். எருதுகளின் எலும்புகளைப் பொசுக்கிப் பொடியாக்கி, அதனுல் கிடைக்கும் சாம்பலினுல் தங்கள் உடலில் பல்வேறு பாகங்களில் பூசிப் பிரகாச

---

[1] தாம்பூலம் என்ற வெற்றிலைச் சுருளை இங்குக் குறிப்பிடுகிறுர். முன்பு மற்றோர் இடத்திலும் அவர் இதையே குறிப்பிட்டது நோக்கத்தக்கது.

[2] Tingui- திகம்பரர் என்ற சொல்லின் சிதைவு. உடம்பில் ஆடையில்லாது நிர்வாண நிலையில் இருப்பவரைத் திகம்பரர் என்ற சொல்லால் வழங்குகின்றோம்.

மடையச் செய்கின்றனர். தங்கள் நண்பர்களைச் சந்திக்க நேர்ந்தால், அவர்களுடைய நெற்றியிலும் இவ்வாறு தயாரித்த நீற்றை இட்டு மகிழ்வர்.

**சீவகாருண்யம்**

இந் நாட்டு மக்கள் எவ்விதப் பிராணிகளையும் கொல்லுவதில்லை; அவற்றின் உயிரை வாங்கப் பிரியப்பட மாட்டார்கள். ஈ, கொசு, எறும்பு, பேன் முதலிய புல்லிய பிராணிகளிடமும் கருணை நிறைந்த மனத்தோடு நடந்து கொள்வர். அச் சிறு பிராணிகளிடத்தும் ஆன்மா ஒன்று இருக்கிறது என்ற கொள்கை இவர்களிடம் வலுத்துக் காணப்படுகிறது. காய்கறி, கிழங்குகளையும், பச்சையாகச் சாப்பிடாமல், நன்ருக உலர்ந்த பிறகே அவற்றைப் பயன் படுத்துவார்கள்.[1] ஏனெனில் மரம், செடி, கொடி முதலிய தாவரங்களுக்கு உயிர் உண்டு என்ற கொள்கையால் அவ் வாறு செய்வர். இவர்கள் கரண்டியையோ[2] தட்டுக் களையோ[3] உபயோகப்படுத்தாமல், வாழைச் சருகுகளின் மேல் உணவைப் பரப்பிவைத்து உண்டு வாழ்வர்.[4]

---

ஜைனர்களில் ஸ்வேதாம்பரர், திகம்பரர் என இருவகை யினர் உண்டு, ஸ்வேதாபரர் வெண்மை ஆடை உடுப்போர் (ஸ்வேதம்-வெண்மை). திகம்பரர் நிர்வாண நிலையில் திரிவோர் (திகம்பரம் - ஆடையின்றி பிறந்த மேனியுடன் இருத்தல்). இங்கு மார்க்கோ போலோ திகம்பரைக் குறிப் பிடுகிருர்.

சீனப்பயணி யுவான் சுவாங் (கி. பி. 624-645) பின்வரு மாறு குறிப்பிடுகிருர்;

"காஞ்சிபுரத்தில் திகம்பரர் மிகுதியாகக் காணப் பட்டனர். திகம்பரர் நிர்வாண நிலையிலேயே திரிபவர்."
—(**யுவான் சுவாங்**: பக்கம் 178)

[1] இப் பகுதியில் வாழ்ந்துவந்த ஜைனர்களாகிய சமணர் களைக் குறிப்பிடுகிருர் போலும். [2] Spoons [3] Platters

[4] இத்தகைய பழக்கம் இன்னும் நம் நாட்டில் பலரிடம் காணப்படுகிறது. Leaves of Adam's Apple-இதைச் சிலர்

இந் நாட்டு மக்கள் தங்கள் இயற்கை வசதிகளை நிவர்த்திக்க-மலங்கழிக்கக்-கடற்கரைக்குச் சென்று அங்குள்ள மணலில் தாங்கள் வெளியிட்ட கழிவுப் பொருளை, நாலா பக்கங்களிலும் பரப்பி விடுவார்கள். அம் மலத்தில் உற்பத்தியாகும் கிருமிகளைத் தடுப்பதாகவும் அதற்குத் தகுந்த காரணங் கற்பிப்பர்.[1]

## முறையோடு வாழ்தல்

இவர்கள் நீண்ட நாள்கள் வாழ்ந்து வருகின்றனர். வெறும் கட்டாந்தரையில் படுத்துறங்கினாலும், இவர்களில் சிலர் நூற்றைம்பது வருடங்கள் வரை உடல் நலத்தோடும், உற்சாகத்தோடும் வாழ்ந்து வந்ததாகவும் அறிகின்றேன். இதற்குக் காரணம் இவர்களுடைய நியமமும், கட்டுப் பாட்டுக்குட்பட்ட பழக்க வழக்கங்களும், மிதமான ஆகாரத்தைப் புசித்தலும், முறை தவறாது நடத்தலுமாம். இவர்கள் இறந்தால், இவர்களுடைய உடல் புழுக்களுக்கு உறைவிடமாக ஆக்கப்படாமல், உடனே கொளுத்தப்பட்டு விடுகின்றன.

ஒவ்வொரு நாட்டு மக்களின் வாழ்க்கையும் எவ்வளவு விசித்திரமாக உள்ளது? இவ் வாழ்க்கை வரலாறுகளே கற்பாரது உள்ளத்தைப் பண்படுத்தி நிற்கும் ஒப்பற்ற மந்திரக் குளிகைகளல்லவா?

---

மந்தார இலை என்றும், வாதுமை இலை என்றும் பலவாறு கூறுவர். நீர் வளமும் நிலவளமும் மிக்குள்ள தென்னாட்டில் வாழைச் சருகை உபயோகப்படுத்தாத வீடே இருக்க முடியாது.

[1] இச் செய்திகள் எவ்வளவு தூரம் உண்மை என்று நிச்சயமாகக் கூறமுடியாது. இவை யாவும் அவர் கேட்ட செய்திகளாக இருத்தல் வேண்டும். கேட்கப்படும் செய்திகளில் மயக்கம் காணப்படுவது இயற்கையே.

# 8. கௌளமும் மலையாளமும்

## கௌள நாட்டின் வளம்

"மாபர் என்னும் நாட்டை விட்டகன்று, ஐந்நூறு மைல்கள் தென் மேற்காகப் பயணம் செய்தால், நீங்கள் கௌளம்[1] என்னும் பிரதேசத்தை யடைவீர்கள். அநேக கிறிஸ்தவர்களும், யூதர்களும் இதைத் தங்களது உறைவிடமாக வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இவ்வூர் அரசன் மற்ற எந்த அரசனுக்கும் அடங்கி நடந்து கப்பம் கட்டுபவன் அல்லன். இங்கே சப்பான் மரங்கள்[2] நிறைய வளர்கின்றன. இங்கே காட்டுப் பிரதேசத்திலும், நாட்டி

---

[1] Koulam .or Coulam-போர்ச்சுகீசியர் இந்தியாவின் மேற்குக் கரையில் வந்திறங்கியபொழுது இவ்வூர் மிக்க பிரசித்தியடைந்திருந்தது. இப்பொழுது இது, தன்னுடைய சிறப்பினை அருகில் கிளம்பிய அஞ்செங்கோ (Anjengo) என்ற ஊருக்கு அளித்துத் தனித்து நிற்கின்றது. இந் நாடு தற்காலக் கோழிக் கோட்டிற் கருகில் உள்ளது. இவ்விடத்தில் பெருங் குளம் ஒன்று இருந்ததால், இதற்குக் குளம் என்ற பெயர் ஏற்பட்டு, இறுதியில் அப் பெயரே அவ்வூருக்கும் நிலைத்து விட்டது. (பெருங்குளம், ஸ்ரீகாகுளம், கருங்குளம், குளத்தூர் முதலிய ஊர்களின் பெயர்களை இத்துடன் ஒப்பிட்டுப் பார்க்க.)

[2] Sappan-wood-சந்தன மரத்தை இவ்வாறு கூறுகிறார். நம் நாட்டிலிருந்து அச் சொல் ஜெர்மனிக்குச் சென்றபொழுது Sap-an-wood என்று மாறிற்று. பிறகு இலத்தீன் மொழியிலும் அதுவே நிலைத்துவிட்டது. அதாவது Sap என்றால் சாரம் என்று பொருள்படும். சாரத்தை அப்படியே நீராக வெளிவிடும் தன்மை வாய்ந்தது என விரித்தும் பொருள் உரைக்கலாம். அரைக்க அரைக்கச் சந்தனப் நறுமணம் கமழ்கிறதல்லவா?

னுள்ளும் மிளகும் பெருவாரியாகப் பயிரிடப்படுகிறது. அம் மிளகை மே, ஜூன், ஜூலை ஆகிய இம் மாதங்களில் சேகரிப்பர். திராட்சைப் பழமும் அதிகமாகப் பயிராக்கப் படுகிறது. மிகவும் உயர்ந்த வகையைச் சேர்ந்த அவுரி என்னும் நீலச்செடியும்[1] பெருவாரியான அளவில் பயிராக்கப்படுகிறது. இச் செடிகளைப் பாத்திகளில் மூலிகைகள் போலப் பயிரிட்டு, அவற்றை வேர்களோடு பிடுங்கி, தண்ணீர் நிரம்பிய தொட்டிகளில் இட்டு, அது நன்ருக ஊறித் தானே அழுகிப் போகுமளவும் விட்டு விடுவிடுகின்றனர். அதன் பிறகு அச் செடிகளைக் கசக்கிப் பிழிந்து அவற்றினின்று வரும் சாற்றைக் கிண்ணங்களில் கொட்டிக் காயவைக்க, அச் சாறு சில தினங்களில் இறுகிக் கட்டிகளாக மாறிவிடும். அக் கட்டிகளைச் சிறு சிறு துண்டுகளாகச் செய்து இப்பொழுது[2] நமக்குக் கொடுக்கப்படும் அளவில் விற்பனைக்கு அனுப்புகிருர்கள்.

### விலங்கினங்களும் பறவைகளும்

இந் நாட்டில் பொறுக்க முடியாத சூரிய வெப்பம் சில மாதங்களில் காணப்படும். இருப்பினும், உலகத்தின் பல்வேறு பாகங்களிலிருந்தும் - முக்கியமாக மஞ்சி,[3] அரேபியா முதலிய நாடுகளிலிருந்தும்-வணிகப் பெரு மக்கள் வாணிகம் நடக்கும் சிரிய முறையினுல்-பெருவாரியாகக் குழுமுகின்றனர். இங்குக் காணப்படும் விலங்கினங்கள் மற்றப் பகுதிகளில் காணப்படுபவற்றினும் சிறிது வேறுபாடு உடையனவாகக் காணப்படுகின்றன. புலியில் மிகவும்

[1] Indigo- A sort of dye stuff—நீலச் செடி அல்லது அவுரியைக் குறிக்கும் ஒரு சொல்லாகும்.

[2] மார்க்கோ போலா தம்முடைய காலத்தைக் குறிப்பிடுகிருர். இப்பொழுதும் நீலச் சோப்புக் கட்டிகள் அவ்வாறே சிறு துண்டுகளாக விற்கப்படுகின்றன.

[3] Manji-சீனுவின் தென்பகுதி [4] Arabia

கறுத்த நிறமுடைய இனம் ஒன்று உண்டு. கிளிகளிலும் பல நிறங்கள் கொண்ட வகைகள் காணப்படுகின்றன.[1] அவற்றில் சில பனிக்கட்டியைப் போன்ற வெண்மை நிறத்தோடும், மூக்கு மட்டும் கொவ்வைக் கனிபோன்ற சிவந்த நிறத்தோடும் காணப்படுகின்றன. வீட்டில் வளர்க்கப்படும் கோழிகள் கூட மாறுபாடான பல வண்ணங்களோடு தோற்றமளிக்கின்றன. மயில்கள் நம் நாட்டில் இருப்பனவற்றைவிட மிகப் பெரியனவாக வளர்ந்து, நீண்ட மயிற் பீலிகளைக் கொண்டு, அழகாக ஆடுகின்றன.[2]

### விளையும் பயிர்கள்

இதே மாறுபாடுகள் பழங்களிடத்தும் நாம் காண்கிறோம். இதற்குக் காரணம் இங்கு நிலவும் வெப்ப மிகுதியே எனக் கூறப்படுகிறது. இங்கு விளையும் ஈச்சம் பழங்களிலிருந்து ஒருவகைப் பானத்தைத் தயாரிக்கின்றனர். இது திராட்சையினால் செய்யப்படும் பானத்தை விட அதி சீக்கிரத்தில் போதையைத் தருகிறது. நவதானியங்களை நிறைய வைத்துக்கொள்வதில்லை. அதற்குப் பதிலாக வேறு உணவுகளைப் பத்திரப்படுத்திச் சேகரித்து வைத்துக் கொள்கின்றனர். ஆயினும், தானிய வகைகளில் அரிசி மட்டுமே மிகுதியாகச் சேகரித்து வைக்கப்படுகிறது. அதுவே இந் நாட்டு மக்களின் பெரும்பாலான உணவு ஆகும்.

---

1 பஞ்சவர்ணக் கிளிகளைக் குறிப்பிடுகிறார்.

2 மயில்கள் நிறைந்து வாழ்ந்த ஊர்கள் மயிலாடுதுறை, மாயூரம், மயிலாப்பூர் முதலியன. இவ்வூர்கள் தங்கள் பெயரிலே மயில் என்ற சொல்லைக் கொண்டிருப்பதைக் கண்டு, அங்கு அதிகமாக வாழ்ந்த மயில்களின் தொகுதியை அறியலாம். மயில் விளங்கிய நாடென்பதால், மற்ற வளங்களெல்லாம் அமோகமாகப் பெருகியிருந்தன என்பது போதரும். பல்வளமும் பெருகி நின்ற இடங்களிலேதான் மயில் கூட்டங்கள் பெருவாரியாகக் காணப்படும்.

### மக்களின் மரபு

இந் நாட்டு மக்களில் பலர் சோதிடத்திலும் மருத்துவத்திலும் வல்லுராகக் காணப்படுகின்றனர். ஆண்களும் பெண்களும் கருமை நிறமுடையராய்க் காணப்படுவதோடு, ஒரு முழஅளவு கொண்ட சிறு துண்டு ஒன்றைமட்டும் உடுத்தி உலாவி வருகின்றனர். அத்தகைய நிலையை அரை நிர்வாண நிலை என்றே கூறலாம். அவர்களிடம் காணப்படும் சிற்சில பழக்க வழக்கங்களை ஊன்றி நோக்குமிடத்து அவர்கள் சிற்றின்பப் பிரியர்கள்[1] என்ற எண்ணமே முதற்கண் ஏற்படுவது இயல்பு. தங்கள் உறவினர்களிடமிருந்துதான் தாங்கள் மணக்க விருக்கும் பெண்களைப் பெறுவர். வேற்றுக் குலத்தினரிடமோ, பிரிவினரிடமோ திருமணக் கலப்பு செய்துகொள்ளச் சிறிதும் சம்மதியார். சிற்சில குழுவினர், தங்கள் சகோதரன் இறந்தவிடத்து, அவனுடைய மனைவியைத் திருமணம் செய்துகொண்டு, இல்வாழ்க்கை நடத்துகின்றனர். இப்படி வாழ்வது நாட்டின் மரபு என்று எனக்குச் சிலரால் தெரிய வந்தது.[2]

### மலையாள நாட்டின் மகிமை

விரிந்து பரந்துள்ள நமது இந்தியாவில் மலபார் நாடு[3] என்ற பெரிய அரசாங்கம் ஒன்று திகழ்ந்து வருகின்றது.

---

[1] Sensuous People.

[2] சிற்சில மகமதியர்களிடம் காணப்பட்ட இம் மரபினைக் குறிப்பிடுகிறார் போலும். இன்றைக்கும் இவ்வழக்கம் முஸ்லிம்களிடம் காணப்படுகிறது.

[3] Malabar-இங்கு "மலபார்" என்றே திட்டமாகக் கூறுவது காண்க. ஆகையால் மாபர் நாடு வேறு என்பது உறுதிப்படுகிறதல்லவா? "மலபார்" என்பதுதான் மலையாள நாடு. இது இந்தியாவின் மேற்குக் கடற்கரைப் பிரதேசம் அடங்கிய மலைப் பிரதேசம் ஆகும். மலைகள் நிறைந்த நாடாக இருத்தலால் இதற்கு மலையாளம் எனப் பெயர் வந்தது.

இதைப் பற்றிச் சில வரலாறுகளைச் சொல்லாது விடுதல் கூடாது. இந் நாட்டு மக்கள், தங்கள் அரசனால் பாது காக்கப்படுகின்றனர். அவர்கள் சுதந்தரப் பிரியர்களாக வும், தங்களுக்கெனத் தனியொரு மொழியையுடையவ ராகவும் காணப்படுகின்றனர் இந் நாட்டிலிருந்து துருவ நட்சத்திரத்தை நோக்கினால், அது பூமியின் தொடுவானத் தின் மேல் சுமார் பன்னிரண்டு அடி அளவில் இருப்பது போல் தோற்றமளிக்கும். இந்த நாட்டுக் கடற்கரையிலும், இதற்குச் சற்றுத் தொலைவிலிருக்கும் குஜராத்துப் பிரதேசத்துக் கடற்கரையிலும் ஏராளமான கப்பற் கொள்ளைக்காரர்கள் கப்பல் யாதாயினும் எங்கேயாகிலும் வருகின்றனவா என்று வேவு பார்த்த வண்ணம் அலைந்து திரிந்து கொண்டிருப்பார். அவ்வழியாக யாதாயினும் கப்பல் ஒன்று தன்னந்தனியாகப் பொருள்களை ஏற்றிச் செல்வது தெரிந்து விட்டால், அக் கப்பலைச் சிறு கூட்ட மாக இக் கப்பற் கொள்ளைக்காரர் தாக்கி, அதில் காணப் படும் பண்டங்கள் யாவற்றையும் சூறையாடுவர். அவ் வாறு கொள்ளையடிப்பவரின் குடும்பம் முழுவதும் கடலி லேயே கப்பலில் தங்கள் நேரத்தைச் செலவிடுவர். சில பொழுது கோடைக் காலம் முழுவதுமே அவர்கள் கப்பலில் காலத்தைக் கழித்து விடுகின்றனர்.[1]

### கப்பற் கொள்ளை

எத்தகைய கப்பலும் தங்களுடைய பார்வையினின்று தப்பிச் சென்று விடாதபடி ஐந்து மைல் தொலைவுக்கு ஒரு வேவுகாரராக, சுமார் நூறு மைல் தூரத்தில் இருபது வேவு காரர் நின்று காவல் காத்து நிற்பர். அவ்வாறு கண்கொட்

[1] இத்தகைய கடற்கொள்ளைக் கூட்டங்கள் பெரிப்ளூஸ் நூலாசிரியராலும் (கி.பி. 50-80) குறிப்பிடப்படுகிறது.

—(**பெரிப்ளூஸ்** : அதிகாரம் 53, குறிப்பு-13, பக்கம் 213)

டாது காவல் புரிந்து கப்பல் வருகையை எதிர்நோக்கி யிருப்பர். அவ்வாறு காவல் தொழில் புரியும்போது ஏதாவது அன்னியக் கப்பல் தங்கள் கண்களில் தென்பட்டதும், அதை முதலில் பார்ப்பவன் ஒருவிதக் குறிப்பால் மற்றவனுக்குத் தெரிவிப்பான். அக் குறிப்பை இன்னதெனத் தெற்றெனத் தெளிந்து அதை மற்றவன் தனக்கு அருகில் உள்ள வேறு காவல் காக்கும் கப்பலோட்டிகளுக்குத் தெரிவிப்பான்.[1] இவ்வாருக யாவரும் சிறிது நேரத்தில் ஒன்று சேர்ந்து அவ்வழியாகச் செல்லும் அக் கப்பலேத் தப்பிச் சென்றுவிடாதவாறு அதைத் தங்கள் வசமாக்கிக் கொள்ள முயல்வர். கப்பலில் உள்ள மக்களுக்கு யாதொரு தீங்கையும் இழைக்கமாட்டார்கள். ஆனல், அதில் காணப்படும் பொருள்களே மட்டும் சூறையாடிப் பிறகு அக் கப்பலே கடல் ஓரமாகப் போகுமாறு செய்துவிடுவர். மீண்டும் அக் கப்பலில் உள்ளோர் அதே வழியாகச் சென்ருல் அவர்கள் முன்னர் நேர்ந்த கதிக்கே மறுபடியும் ஆளாக நேரிடும்.

மிளகும்,[2] இஞ்சியும்,[3] பாக்கும்,[4] உலகத்திலே எங்கும் கிடைத்தற்கரிய அவ்வளவு விலேயுயர்ந்த துணிமணிகளும் இவ்விடத்தில் பெருவாரியாக உற்பத்தி செய்யப்படுகின்றன.[5] மஞ்சி நாட்டிலிருந்து[6] வரும் கப்பல்கள் பித்தளேக் கட்டிகளேப் பெரிய அளவில் சுமந்து வருகின்றன. இதைத் தவிர்த்து, சரிகை வேலேப் பாடுகளும், பட்டும், பொன்னும், வெள்ளியும் மலேயாள நாட்டில் கிடைத்தற்கு அரிய மூலிகைகளும், மருந்தும் கொண்டு வரப்படுகின்றன.

---

[1] இக் குறிப்பு நெருப்பு எரியவிடும் புகையாலும், துப்பாக்கி வெடியாலும், கொடிகளே அசைப்பதாலும் தெரிவிக்கப்படும்.

[2] Pepper [3] Ginger [4] Areca nuts and Indian nuts [5] Calico cloth என்பதைக் குறிப்பிடுகின்ருர்.

[6] Manji-சீனுவின் தென்பகுதி

இவற்றை இந் நாட்டில் இறக்கி, இப் பண்டங்களை விற்று, இவற்றிற்குப் பதிலாக வேறு பண்டங்களையோ பொருள்களையோ வாங்கிச் செல்கின்றனர். இந் நாட்டில் விளையும் பண்டங்களை ஆதென்[1] முதலிய நகரங்களுக்கு ஏற்றுமதி செய்யத் தகுந்த வணிகர்கள் இந் நாட்டின் துறைமுகங்களில் எப்பொழுதும் காத்திருப்பர். ஆதெனிலிருந்து இப் பொருள்கள் ஆப்பிரிக்காவின் வட பகுதியில் உள்ள அலெக்ஸாந்திரியா[2] என்னும் நகரத்துக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

இதுகாறும் மலையாள நாட்டின் மகிமையைக் கூறினோம். இனி இதை அடுத்துள்ள குஜராத்து[3] என்னும் நாட்டினை விவரிக்க முயல்வோம். இந்தியாவில் உள்ள எல்லா நாடுகளின் நகரங்களையும் விவரிக்க முற்பட்டால் அவ்வரலாறு மிக மிக விரிந்து விடுமாதலின், சிறப்பாகவும், செய்திகள் அதிகமாகவும் உள்ள நாடுகளின் நகரங்களைப் பற்றி மட்டும் இங்கே சிந்திப்போமாக.

---

[1] Aden [2] Alexandria [3] Guzzerat

# 9. குஜராத்தும் தாணுவும்

குஜராத்தைப் பற்றிய குறிப்புகள்

மேற்குப் பகுதியில் கடல் எல்லையாக உள்ள குஜராத்[1] என்னும் நாடு சுதேச அரசனுல் ஆளப்பட்டு வருகின்றது. இங்கிருந்து வடக்கில் இருக்கும் நட்சத்திரத் தொகுதியை நோக்கினுல், அது தொடுவானத்திலிருந்து ஆறு ஆள்களின் உயரத்தில் இருப்பதுபோல் தெரியும். இந் நாட்டின் துறைமுகம் மிகவும் கை தேர்ந்த கப்பற் கொள்ளைக்காரர்களுக்குப் பாதுகாப்பும் அடைக்கலமும் அளித்து நிற்கிறது. இக் கொடிய கப்பற் கொள்ளையடிப் போர், தங்களால் பிடிக்கப்படும் வணிகரை ஒரு கோப்பைக் கடல் தண்ணீரைக் குடிக்குமாறு பணிப்பர்[2]. இதனுல் அவ்வணிகர், முத்து பவளம் போன்ற உயரிய பொருள்களைத் தங்கள் எதிரிகளிடமிருந்து காப்பதற்காக

---

[1] **Guzzerat**-அதாவது தற்காலத்தில் வழங்கும் குஜராத் என்னும் இடத்தையே குறிப்பிடுகிருர். அன்றைக்கும் இன்றைக்கும் மிகக் குறைவான மாற்றத்தை அடைந்த சொற்கள் சிலவற்றில் இதுவும் ஒன்ருகும். பெரும்பாலான சொற்கள் உருத் தெரியாமலேயே இக்காலத்தில் மருவி வழங்குகின்றன. அதற்கு இச் சொல் ஒரு விதிவிலக்கு என்றே கூறலாம்.

[2] சென்ற அதிகாரத்தில் குஜராத்துக் கடற்கரைக் கப்பற் கொள்ளைக்காரர்களைப் பற்றிச் சொல்லும் போது, அவர்கள் கப்பலில் உள்ள மக்களைத் துன்புறுத்த மாட்டார்கள் என்று சொல்லிவிட்டு, இவ்வத்தியாயத்தில் அதற்கு மாருக, துன்புறுத்துவதாகக் கூறுகிருர். இதனுல் சில பகுதிகள் அவரால் பார்க்கப்படாமலேயே கேட்டதைக் கொண்டு எழுதப்பட்டன என்பது போதரும்.

விழுங்கியிருந்தாலும், இக் கடல் நீரால் அவர்களுக்கு ஏற்படும் குமட்டலால், அவை வெளியே கொணர்ந்து தள்ளப்படும் அல்லவா?

இங்கு இஞ்சி, மிளகு, அவுரி முதலியன ஏராளமாகப் பயிராகின்றன ஆறு கெசம் உயரம் அளவு வளரும் ஒருவித மரத்தை வளர்த்து, அதிலிருந்து பருத்தியை இருபது ஆண்டுகள் கழித்து எடுக்கின்றனர். அவ்வாறு எடுக்கப்படும் பஞ்சு, துணி நெய்ய உதவுகிறதில்லை.[1] ஆனால் குயில்ட்[2] போன்ற சிறு மெத்தைகளும் தலையணைகளும் தைக்கவே பயன்படுத்தப் படுகின்றன. அதற்கு மாறாக, பன்னிரண்டு வருடங்கள் வளர்ந்த பருத்தி மரங்களிலிருந்து கிடைக்கும் பஞ்சு, மெல்லிய மஸ்லின் துணி நெய்யவும், மற்றும் பல நுல்லிய நுண்ணிய வேலைப்பாடுகள் அமைந்த துணிகள் நெய்யவும் பயன்படுத்தப்படுகின்றது.

மெத்தைக்கு உறையாகத் தைக்கப்படும் துணியின் நிறம் சிவப்பும், நீலமும் உள்ளதாக இருக்கும். மற்றும் அவை வழவழப்பாகவும், மிருதுவாயும், பொன் வெள்ளி முதலிய சரிகைகளினால் செய்யப்பட்ட வேலைப்பாட்டோடும் விளங்கி நிற்கும். ஆக, இவ்வழகிய அபூர்வ வேலைப்பாடுகள் கொண்ட மெத்தைகள்மீதே மகமதியர்கள் கண்ணுறங்குவர் என்பது தெரியவருகிறது. பொன் கம்பிகளால் பற்பல வேலைப்பாடுகள் கொண்ட தலையணைகள் பலவித வகைகளாகத் தயாரிக்கப்படுகின்றன. இவ்விதமான தலையணையொன்று சிலபொழுது ஆறு ரூபாய் வரையிலும் விற்கப்படுகிறது. இங்கே சரிகை வேலைப்பாடும், தையல் வேலைப்பாடும், உலகில் மற்றெல்லாப் பாகங்களைக் காட்டிலும் மிகச் சிறந்த முறையில் நடத்தப் படுகின்றன.

---

[1] இலவம் பஞ்சைக் குறிப்பிடுகிறார்போலும்.

[2] Quilt-சிறு மெத்தை போன்ற விரிப்பு.

இங்கு ஆடு, எருமை, காண்டாமிருகம், காட்டெருது ஆகிய பற்பல மிருகங்களின் தோல்கள் பதனிடப்படு கின்றன. பதனிடப்பட்ட இத்தோல்கள் பெருவாரியாகக் கப்பல்களில் வெளி நாடுகளுக்கும், அரபு நாட்டின் பல நகரங்களுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. பதனிடப் பட்டுள்ள தோல்கள் கைக்கு மிருதுவாயும், அதிக நாள் உழைக்கக் கூடியனவாயும் காணப்படுகின்றன. அவற் றினுல் குல்லாய் முதல் கால் செருப்பு வரையில் பற்பல வகைகளைத் தயாரிக்கிறார்கள்.

இனி, இதனை விட்டுக் கானுன்[1] என்னும் தாணு நாட்டைப் பற்றிப் பேசுவோமாக.

### கானுன் நாடு

கானுன் நாடு மிகப் பெரியதும், சிறந்த பண் பாடடைந்ததாகவும் உள்ள உன்னத நாடாகக் காணப் படுகிறது. இந் நாடு எவருக்கும் ஏதும் கப்பம் கட்டாத ஓர் அரசகுமாரனல் ஆளப்பட்டு வருகிறது. இங்குள்ள மக்கள் விக்கிரக ஆராதனை செய்பவர்களாகக் காணப்படு கின்றனர். தங்களுக்கென உரித்தான தனிப்பெரும் மொழி யினைக் கொண்டுள்ளனர். இங்கு மிளகாவது, இஞ்சி யாவது விளைவதில்லை. ஆனல், அவற்றிற்குப் பதிலாக வெளுப்பான நிறமுள்ளதாக இல்லாத - சிறிது கறுத்த நிறமுடைய - சாம்பிராணியை உற்பத்தி செய்கின்றனர்.[2]

---

[1] Kanan - Thana என்ற நாடே இங்குக் குறிக்கப்படு கிறது.

[2] சாம்பிராணி (frankincense) என்று சில பிரதிகளும், பெருங்காயம் (asafoetida) போன்ற பொருள் என்று சில பிரதிகளும் தெரிவிக்கின்றனவாயினும், அடுத்துச் சொல்லப் படும் வரிகளிலிருந்து, அது சாம்பிராணி என்றே கொள்ள வேண்டியதாகிறது. சந்தனக்கட்டைகளும் பெருவாரியாக ஏற்றுமதி செய்யப்பட்டன எனவும் தெரிகிறது.

இந் நாட்டின் துறைமுகத்தில் வாசனைப் பண்டங்களை ஏற்றிச் செல்லப் பற்பல கப்பல்கள் காத்து நிற்கின்றன. மற்றும் வெளிநாடான அரபு நாட்டிலிருந்து குதிரைகள் பலவற்றை இறக்குமதி செய்து, அவற்றை இந் நாட்டிலிருந்து இந்தியாவின் பற்பல பகுதிகளுக்கும் விற்பனைக்காக அனுப்புகின்றனர். இந் நாட்டு மக்களுக்கு விவசாயமும் வாணிகமுமே வாழ்க்கைக்கு உதவும் உயரிய தொழில்களாம்.

# 10. இந்தியாவில் செய்த இறுதிப் பயணம்

## செர்வனுத்

மேற்கே உள்ள நாடுகளில் செர்வனுத்[1] என்பது ஒரு நாடாகும். இங்குள்ள மக்களும் விக்கிரக ஆதாரனை செய்பவர்களே. அவர்களுடைய அரசன் கப்பங்கட்டா தவன்; எவருக்கும் அடங்கி நடக்காத பெருமை வாய்ந் தவன். இவர்களும் தங்களுக்கெனத் தனியாக ஏற்பட் டுள்ள மொழியினைப் பேசுபவர் ஆவர். இங்கே வாணிகம் பெருவாரியான அளவில் நடைபெறுகிறது. பற்பல வணிகர்கள் இவ்விடம் வந்து தாங்கள் கொணர்ந்த சரக்குகளை விற்று, அவற்றிற்குப் பதிலாக இந் நாட்டில் கிடைக்கும் பொருள்களையும் பண்டங்களையும் வாங்கித் திரும்புவர். ஆனல், கோயிலில் பூசை செய்யும் குருக்கள்

---

[1] **Servanath** - சோமனுதபுரம் என்பதன் திரிபு. இதன் ஆங்கில உச்சரிப்பு சோமனுத் (**Somanath**) என்பதாகும். ஆக **Somanath** என்ற சொல்லே **Servanath** என்று திரிந்து வழங்கப்பட்டது. இவ்விடத்தில் ஓர் ஆலயம் மிக்க பிரசித்தி பெற்றிருந்தது. அவ்வாலயத்தில் உள்ள விக்கிரகம் உயர்ந்த பொன்னுல் ஆக்கப்பட்டும், அதனுள் விலை மதிக்க வொண்ணுத எண்ணற்ற நவ இரத்தினங்கள் கொண்டும் காட்சியளித்தது. இவ்வாலயத்தைக் கஜினி முகம்மது என்னும் மொகலாயப் பேரரசர் கி.பி. 1025 ஆம் ஆண்டில் சின்ன பின்னமாக்கி, அதனுள் இருந்த விக்கிரகத்தில் காணப்பட்ட நவமணிகளையும் கொள்ளையடித்துச் சென்ற தாக வரலாறு கூறுகிறது.

மார்கள் மிக்க கொடுமை வாய்ந்தவர்கள் எனக் கேள்விப் படுகிறேன்.[1]

## டெல்லி

குமரி என்னும் நாட்டினை விட்டுச் சுமார் முந்நூறு மைல் மேற்காகச்[2] சென்றால் டெல்லி[3] என்னும் அரசாங்கத்தை அடைவீர்கள். இந் நாட்டுக்கும் சுதேச மன்னன் ஒருவன் உண்டு. தமக்கெனத் தனி மொழி ஒன்றையும் கொண்டு இந் நாட்டு மக்கள் விளங்குகின்றனர். மற்ற எந்தப் பேரரசுக்கும் இரண்டு மன்னன் கப்பம் கட்டுவதில்லை. இந் நாட்டு மக்களும் விக்கிரக ஆராதனை செய்பவர்களே. இதற்குத் துறைமுகம் என்று ஒன்றும் கிடையாது. ஆயினும், பெரிய அகன்ற ஆற்றின் கழிமுகத்தைக் கொண்டுள்ளது. அவ்வாற்றின் கழிமுகத்தின் வழியாகப் பெரும் கப்பல்கள் வாணிகத் துறைக்காக

---

[1] மேற்கூறிய சம்பவத்துக்குப் பிறகு, அக் கோயிலின் குருக்கள் எவரையும் அதனுள் நுழைய விடாது பாதுகாத்து வந்தனர். மக்களிடமும் மூர்க்கத்தனமாக நடந்து வந்தனர். இதன் காரணமாக அவர்களைக் கொடுமை வாய்ந்தவர்களென்று வர்ணிக்கின்றார் போலும்.

[2] "வடக்காக" என்றிருக்கவேண்டும். கவனக்குறைவினால் மேற்கு என வரைகிறார்.

[3] Dely-இதை டெல்லி என்று உச்சரித்தார். இந்த ஊரும், வடநாட்டில் தலைநகராக விளங்கிய Delhi-யும் வேறு வேறான நகரங்களாகும். இங்குக் குறிப்பிடப்பட்ட பிரதேசம் இப்பொழுது Mt. Della என்றழைக்கப்படுகிறது. இஃது ஒரு சிறிய தீவுபோல் காணப்பட்டு, மேற்குக் கரையில் மங்களூர்க்கருகில் உள்ளது. 12 டிகிரி வடக்கு அட்சாம்சத்தில் உள்ளது. இதன் பழைய பெயர் ஏழிற்குன்றம். இவ்விடம் நன்னன் எனும் கொள்ளைக் கூட்டத் தலைவனின் இருப்பிடமாக விளங்கிற்று. மௌண்ட் ஏலி (Mount Ely) என்றும் வழங்கப்படுகிறது. பழந்தமிழிலக்கியங்களில், இதுவே வேலிமேடு என்றும் வழங்கப்பட்டது.

—(**பெரிப்ளூஸ்** : அதிகாரம் 53, குறிப்பு—13, பக்கம் 215)

உட்செல்லும் தன்மையுடையன. மற்றபடி, இந் நாட்டில் உட்செல்வது சற்றுக் கடினமான காரியமே. இத்தகைய இயற்கை அரண்களையுடைய இந் நாட்டின்மீது மற்றவர் படையெடுத்து வருவது என்பது எளிதில் நடக்கக்கூடிய காரியமல்ல. மக்களும் போர்வீரம் படைத்தவர்கள் அல்லர். நாட்டின் கரடுமுரடான தன்மையே மக்களைப் பிற நாட்டினரின் படையெடுப்பினின்றும் காப்பாற்று கிறது. இந் நாட்டிலும் மிளகு, இஞ்சி, மற்றும் வாசனைப் பண்டங்கள் பலவும் உற்பத்தி செய்யப்படுகின்றன. இந் நாட்டிற்கென நியமிக்கப்படாத கப்பல் ஏதாகிலும் இவ்வாற்றின்[1] வழியாக வந்துவிட்டால், இங்குள்ள மக்கள் அக் கப்பலைப் பிடித்துக்கொண்டு அதில் உள்ள வாணிகப் பொருள் யாவற்றையும் பறிமுதல் செய்துவிடுவார்கள். அதற்கு இவர்கள் கூறும் காரணம் பின்வருமாறு: "வேறு எங்கேயோ செல்ல வேண்டிய நீங்கள் தற்செயலாக இங்குத் திருப்பப்பட்டது தெய்வச் செயலேயாகும். இது எதற்காக என்றால், உங்கள் பண்டங்கள் யாவற்றையும் நாங்கள் பெற்று வாழ்வதற்காகவே," என்பதே. மற்றும் மஞ்சி நாட்டிலிருந்து[2] கப்பல்கள் பண்டங்களை ஏற்றிக் கொண்டு இந் நாட்டிற்கெனவே வந்து சேர்கின்றன. இங்கு மணற்பாங்கான மேடுகள் காணப்படுவதால்

---

[1] இவ்வாற்றின் பெயர் சந்திரகிரி என்று கூறப்படு கிறது. இப் பிரதேசத்தில் உள்ள நதிகளில் இதுவே மிகப் பெரியதாகும். சில பிரதிகள் இம்மலைப் பிரதேசத்தை Yesay Malai (ஏழுமலை) என்று வரைந்திருக்கின்றன. அதாவது ஏழுமலை என்று சொல்லப்படும் திருப்பதி மலையைக் குறிக் கின்றன. அதற்குப் பக்கத்தில் சந்திரகிரி என்ற ஊர் இன்றுங் காணப்படுவது இதை உறுதிப்படுத்துகிறது. ஆகையால், மார்க்கோ போலோ திருப்பதி மலைமீதும் ஏறி ஏழு மலையானின் தரிசனம் பெற்றார் எனக் கொள்ளுதலும் சாலப் பொருத்தமானதே.

[2] Manji - சீனநாட்டின் தென்பகுதி.

கடற்கரைப் பிரதேச வழியாகக் கப்பல் செல்வது அவ்வளவு நல்லதல்ல எனக் கருதப்படுகிறது. காற்றும் மிகக் கடுமையாக அடிப்பதால், கப்பல்கள் அடித்துச் செல்லப்படாதவாறு மரங்களால் நாட்டப்பட்ட தூண்களில் அக் கப்பல்கள் பிணித்துக் கட்டப்படுகின்றன. இந் நாட்டில் புலியும் மற்றும் உக்கிரம் மிகுந்த விலங்குகள் பலவும் பெருவாரியாகத் திரிந்து, திடீரென மக்கள்மீது பாய்ந்து, சொல்லொணு நாசத்தை விளைவிக்கின்றன.

இனி நாம் கேம்பையா[1] என்னும் நாட்டைப் பற்றிக் கூறுவோம்.

## கேம்பையா

இந் நாட்டு எல்லையும் மேற்குப் பக்கமாகப் பரந்துள்ளது. இந் நாட்டு அரசனும் சுதேசி அரசனுவான். அவன் எவருக்கும் கப்பம் கட்டுபவன் அல்லன். மக்களும் விக்கிரக ஆராதனைப் பிரியர்களே. இங்கிருந்து வட நட்சத்திரத் தொகுதியை நோக்கினுல் அது இதுகாறும் பார்த்த மற்ற நாடுகளிலிருந்து தோன்றுவதைவிடச் சற்று உயரமாகவே தோன்றுகிறது. இங்கு அவுரிச்செடிகள் மிகுதியாகப் பயிரிடப் படுகின்றன. இந் நாட்டில் துணிகளும், கம்பளி நூலும் பெருவாரியாக உற்பத்தி செய்யப்பட்டு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. நன்ருகப் பதனிடப்பட்ட தோல் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு, அவற்றிற்குப் பதிலாக, பொன்னும், வெள்ளியும், பித்தளையும் வெண்கலமுமாக இந் நாட்டில் இறக்குமதி செய்யப்பட்டுக் குவிக்கப்படுகின்றன.

---

[1] Cambia or Kambil - இந் நாடு குஜராத்துக் கருகில் உள்ள காம்பே வளைகுடாவைக் (Gulf of Cambay) குறிப்பதாகும். இத் துறைமுகம் அயினி அக்பாரி (Aini Akbari) என்ற நூலில் காம்பாயட் (Kambayet) என்று வழங்கப்படுகிறது. இது மிக முக்கியமான துறைமுகமாக முன்னர் விளங்கிற்று.

இனி கெஸ்மகோரான்[1] என்ற நாட்டினைப் பற்றி விவரிப்போம்.

## கெஸ்ம கோரான்

இந் நாடு மிக்க பரந்ததாயும், சுதேச அரசனுல் ஆளப் பட்டதாயும், தனக்கென உரித்தாய தனிப் பெரு மொழி யினை உடையதாயும் விளங்குகிறது. இந் நாட்டு மக்களில் சிலர் விக்கிரக ஆராதனை புரிபவர்களாகக் காணப்படுகின் றனர். ஆனல், பெரும்பான்மையோர் சாரசன் சாதி மக்க ளாகவே விளங்குகின்றனர். அவர்களுள் பலர் வாணிகம் செய்தும், சிலர் விவசாயம் செய்தும் தங்கள் வாழ்க்கைப் படகைக் கடத்திச் செல்கின்றனர். அரிசியும், கோதுமை யும், மீனும், பாலும் இங்கு அதிகமாகக் கிடைப்பதால்,

[1] Kesmocoran - இப்பெயர் Kidg-makaran என்ற சொல்லினின்று ஏற்பட்ட திரிபுச் சொல்லாகும். அதாவது மகாரன் என்ற நாட்டிற்குக் கிட்ஜ் தலைநகரமாக விளங்கிய தாக வரலாற்றுப் பேராசிரியர்கள் கூறுவர். இந் நாடு சிந்துநதி பாயும் பிரதேசத்தில் உள்ளது. இதைச் சிந்துப் பிரதேசம் (Sind) என்றே வழங்குவர்.

மார்க்கோ போலோ வெனிசு நகரிலிருந்து புறப்பட்ட பொழுது, இப் பிரதேசத்துக்கு வந்து, இங்கிருந்து மங் கோலியாவின் பாலைவனத்தைக் கடந்து திபெத்து வழியாகச் சென்று சீன தேசத்தை யடைந்தார். பிறகு அவர் சீன தேசத்திலிருந்து புறப்பட்டுத் தமிழ் நாட்டுக்கு வந்து, அங்கிருந்து மலையாளக்கரையை யடைந்து, பிறகு இலங்கை நாட்டைச் சுற்றிவிட்டு, அங்கிருந்து டெல்லி, சோமனுத புரம், தானு முதலிய நாடுகளைக் கண்டு, இறுதியாக இங்கு விவரிக்கப்பட்டிருக்கும் சிந்து பிரதேசத்தில் உள்ள கெஸ்ம கோரான் என்ற இடத்தை அடைந்தார். இதுதான் அவர் இந்தியாவில் பார்த்த இறுதி நாடாகும். பிறகு இதை விட்டு மேற்காகச் சென்று பாரசீக நாட்டை யடைந்ததாகத் தம் வரலாற்றில் கூறுகிருர். ஆகையால் அவர் தமிழ் நாட் டில் ஆரம்பித்த பயணத்தைச் சிந்து நாட்டில் முடித்தார் எனத் தெரிகிறது.

அப் பொருள்களே இவர்களுக்குப் பெரும்பாலும் உணவாக அமைந்து விடுகின்றன. இவ்விடத்தில் வாணிகத்தை முன்னிட்டுக் கடல் வழியாகவும் பல வணிகர்கள் அவ்வப் பொழுது பெருங் கூட்டமாகக் கூடுகின்றனர்; இதுதான் இந்தியப் பெருநாட்டின் இறுதி நாடாகும்.[1]

இது மாபர்[2] நாட்டிலிருந்து தொடங்கி இந் நாட்டுடன் முடிவடைகிறது. ஆக, இந்த இரண்டு எல்லைக்குள்ளாக அடங்கிய அகன்ற நாட்டின் கடற்கரையில் உள்ள முக்கியத் துறைமுகப் பட்டினங்களையே[3] பெரும்பாலும் அணுகி, அவற்றின் வரலாற்றையும், அந்தந்த நாட்டு மக்களின் வாழ்க்கையையும், பண்பாட்டினையும் மட்டும் குறிப்பாகக் கொடுத்துள்ளேன். மற்றும் நாட்டின் உள்ளே சென்று மிகவும் விவரமாகக் கண்டு, அவற்றின் வரலாற்றைக் கொடுக்க வேண்டுமென்றால், அவ்வரலாறு படிப்போருக்குப் பெருமலைப்பை உண்டாக்கும்; நம்முடைய வேலையும் ஒரு குறிப்பிட்ட பாதையில் செல்லாது வழி தவறி நிற்கும். ஆக, இங்கு மேற்கூறியவையே நான் கண்டு, கேட்டு, உள்ளத்தில் உய்த்துணர்ந்த இந்தியப் பெருமக்களின் பண்பாடும், அவர்களின் வாழ்க்கை வரலாறும் ஆகும். ஆண்டவன் உங்கள் யாவருக்கும் நல் ஆசி அருள்வாராக!''

**''தாமின் புறுவது உலகுஇன்பு உறக்கண்டு**
**காமுறுவர் கற்றறிந் தார்.''** —திருக்குறள்

---

[1] இந்தியாவில் மார்க்கோ போலோ பார்த்த இறுதி நாடாக இருத்தலால் இவ்வாறு கூறுகிறார் போலும்.

[2] Maabar-தமிழ்கூறு நல்லுலகம். ஏற்கெனவே முன்னர் இதுபற்றி எழுதப்பட்டுள்ள குறிப்புகள் இங்கே நினைவு கூர்தற் குரியன.

[3] இதனால் இவர் பெரும்பாலும் கப்பலிலேயே சென்றார் என்ற செய்தி உறுதிப்பாடடைகிறது. மற்றும் இவர் தமிழ் நாட்டிற்குக் கப்பலிலேயே வந்து இறங்கினார் என்பதும் இதனால் அறியப்படுகிறதல்லவா?

## இரண்டாம் பகுதி

(வெளிநாடுகள் சிலவற்றைப் பற்றிய குறிப்புகள்)

# 1. பாரசீக நாட்டில் கண்ட புதுமைகள்

**பாரசீகம்**

"பெர்சியா[1] என்னும் இந் நாடு ஆதியில் ஓர் உன்னத நாடாக விளங்கியது. ஆனால், அந் நாட்டின் பெரும்பாகம் இப்பொழுது டார்டார்[2] என்னும் வமிசத்தாரால் அழிக்கப் பட்டு விட்டது. பாரசிகத்தில் உள்ள சபா[3] என்ற நகரத்திலிருந்துதான் இயேசுநாதரைத் தரிசிக்கப் பெத்லகேமுக்கு[4] மூன்று ஞானியர்கள்[5] வந்தனர். இந்த மூன்று ஞானியர்களும் சபா நகரிலே பெரிய சமாதிகளில் அடக்கம் செய்யப் பட்டிருக்கின்றனர். இவர்கள் யாவரும் தாடியும் மீசையும் வைத்துக் கொண்டிருந்தவாறே அடக்கம் செய்யப்பட்டனர் எனத் தெரிகிறது. இந்த ஞானியர்களில் முதல்வரின் பெயர் பல்தாஸார்,[6] காஸ்பார்[7] என்பவர் இரண்டாமவராவார். மூன்றாமவரின் பெயர் மெல்ஷியர்.[8] இம் முப்பெரும் ஞானியர்களைப் பற்றிய விவரங்கள் எவையேனும் இந் நகரத்தில் கிடைக்குமாவென நான் இங்குள்ள மக்களைத் துருவித் துருவிக் கேட்டும், அவர்களிடமிருந்து சரியான விவரம் எதுவும் கிடைத்தபாடில்லை. ஆனால், ஒன்று மட்டும் உறுதியாகத் தெரிகிறது. அந்த ஞானியர் மூவரும்

---

[1] Persia—பாரசீகம் என்னும் நாடு. [2] Tartar—மங்கோலிய நாட்டு மக்கள். [3] Saba [4] Bethlahem [5] Megi—Sages of the East என்று விவிலிய நூலில் கூறப்பட்டுள்ளது. [6] Baldasar [7] Gaspar [8] Melchior.

இந் நாட்டில்தான் ஆதிகாலத்தில் புதைக்கப்பட்டார்கள் என்ற செய்தி மட்டும் ஆதாரத்தோடு கூறப்படுகிறது.

இங்கிருந்து மூன்று நாள்கள் பயணத்திற்குப் பிறகு, பலாசதா[1] என்னும் பெயருள்ள ஊரை அடைவீர்கள், பலா சதா என்ருல் தீயை வணங்குபவரின் கோட்டைகள் என்று பொருள்படும். இதற்கு ஆதாரமாக இக் கோட்டைகளில் வாழும் மக்கள் கூறும் வரலாறு பின்வருமாறு .

### மூன்று ஞானியர்களைப் பற்றிய விவரங்கள்

நெடுநாள்களுக்கு முன்னர்[3] பாரசிக தேசத்தின் பகுதியைச் சார்ந்த மூன்று முடி மன்னர்கள் புதிதாய்ப் பிறந்த மன்னுதி மன்னரைக் காணத் தங்கள் கைகளில் சாம்பிராணியும், பொன்னும், போளமும் தனித்தனியே எடுத்துச் சென்றனர். பொன்னை[3] எடுத்துச் சென்றதால், அம் மன்னர் பூமியை யாளப்பிறந்த மன்னரா என்பதை யறியவும், சாம்பிராணியை[4] எடுத்துச் சென்றதால், அவர் தேவ கணத்தினரா என்பதை அறியவும், வெள்ளைப் போளம்[5] என்பதை எடுத்துச் சென்றதால், அவர் மனித வர்க்கத்தைச் சேர்ந்தவரா என்பதை அறியவும் வேண்டி அந்த முடிமன்னர் மூவரும் தங்களோடு இம் மூன்றுவிதப் பொருள்களையும் எடுத்துச் சென்றனர். இம் முப்பெரு வேந்தரும், ஞானியர் என்ற நிலையில் இயேசுநாதரிடம் அனுமதிக்சப்பட்டவுடன், இம் மூவரில் இளையவராக இருந்த ஞானியர் இயேசுநாதர்முன் முதல் முதலாக அனுப்பப்பட்டார். அந்த ஞானியர்க்கு என்ன வயது அப்பொழுது ஆகியிருந்ததோ, அதே வயதுள்ள இளைஞ

---

[1] Palasatha [2] இயேசுநாதர் அவதரித்த வருடத்தில் அதாவது கி. பி. 1-ல். [3] Gold [4] Fankincense [5] Myrrh.

ராக இயேசுவும் அவருக்குக் காட்சியளித்தார். இதே மாதிரியாக வெளியேகின்ற ஏனைய இரு ஞானியர்களும் தங்கள்வரிசைப்படி சென்றதும், முன் போலவே இயேசுநாதர் அவரவர் வயதளவிலே காட்சியளித்தார். இவர்கள் மூவரும் வெளியில் வந்து ஒன்றுகூடிப் பேசி, மீண்டும் உள்ளே ஒருங்கு சென்று பார்க்க, இயேசுநாதர் மிகச் சிறிய வடிவினராகவும், குழந்தை உருவினராகவும் காட்சியளித்ததைக் கண்கூடாகக் கண்டனர். இம் மூவரும் குழந்தையைத் தொழுது, வணக்கம் செலுத்திவிட்டுப் போகும்பொழுது, குழந்தையின் அன்புருவில் காட்சி கொடுத்த இயேசுநாதர் இவர்களிடம் ஒரு சிறு பெட்டியை அன்பளிப்பாக அளித்தார். அன்புடன் அளித்த அச் சிறு பேழையை இவர்கள் பயபக்தியோடு தலைமேல் தாங்கித் தாங்கள் வந்த வழியே மீண்டும் சென்றனர்.

## இயேசுநாதர் ஈந்த பேழை

இவ்வாறு வழி நடந்து செல்லும்பொழுது இயேசுநாதர் கொடுத்த அச் சிறு பேழையில் என்ன இருக்கிறது என்று அறிய அவாக் கொண்டு, அப் பேழையைத் திறந்து பார்த்தனர். அதில் சிறிய கல் ஒன்று வைக்கப்பட்டிருந்ததைக் கண்டனர். இவர்கள் ஞானியர்களாதலால், இவர்களுக்கு அதன் உட்கிடக்கை சட்டெனப் புலப்பட்டது. அதாவது இவர்கள் இயேசுநாதரிடமிருந்து தெரிந்து கொண்ட பொருள்களினின்றும் சிறிதும் வழுவாது திட நம்பிக்கையுடன் அக் கல்லைப் போன்று அசையா உறுதியுடன் அமைதியாயிருத்தல் வேண்டும் என்பதே.

## அதிசயம் விளைவித்த அருமைக் கல்

ஆனல், சிறிது நேரத்துக்குள் அவர்களுக்கு எவ்வாறோ ஐயம் ஒன்று எழுந்தது. ஒருகால் இயேசுநாதர் தங்களுக்

குக் கல்லைக் கொடுத்து ஏமாற்றி விட்டாரோ என்ற எண்ணம் மேலிட்டு, அக் கல்லைக் கைகளில் எடுத்துக் கீழே இருந்த குழியொன்றில் வீசியெறிந்தனர். இவர்கள் இவ்வாறு கல்லை வீசி எறிந்தார்களோ, இல்லையோ, குழியி லிருந்து தீயானது கொழுந்துவிட்டு எரியத் தொடங்கிற்று.

## அக்கினி வழிபாட்டினர்

இவ்வற்புதத்தைக் கண்டு, மெய்சிலிர்த்து, நெஞ்சு பதைத்துத் தங்களுடைய செயலுக்கு வருந்தி, அங்கு எரிந்து கொண்டிருந்த தீயில் ஒரு சிறுபாகத்தை அப்படியே பக்குவமாக எடுத்துக் கவனமாக அதைத் தங்கள் நாட் டிற்கு எடுத்துச் சென்றனர். அங்கே அதற்கு வேண்டிய பூசைகளும் பலிகளும் இட்டனர். அவ்வூரில் இத் தீயை வேதக் கோயில் ஒன்றில் வைத்துப் பாதுகாத்து, அது எப் பொழுதும் அணையா வண்ணம் காப்பாற்றி வந்தனர். இங் ஙனம் சிரத்தையுடன் காப்பாற்றப்பட்டு வந்த இத்தீ எக் காரணத்தாலேனும் குறைந்து அவிந்து விட்டால், இந் நாட்டு மக்கள் நேராக முன்கண்ட கல் வீசியெறிந்த குழிக் குச் சென்று, அங்கு இடைவிடாது எரிந்துகொண்டிருக்கும் தீயில் ஒரு சிறு பகுதியை எடுத்து வந்து, அணைந்த தீயை மீண்டும் பெருக்கி நெருப் பெழச்செய்து, திரும்பவும் எரியு மாறு செய்கின்றனர். இதில் காணும் அதிசயம் என்ன வென்றால், முன்பு கண்ட குழியில் எரியும் தீ எப்பொழு தும் இடைவிடாது எரிந்து கொண்டே இருக்கும். இக் குழியில் கிடைக்கும் தீயைத் தவிர வேறு தீயைப் பயன் படுத்துவதே இல்லை. தீயினால் தூண்டப்பட்டு, அதையே பூசித்தும் தொழுதும் வருவதால், இந் நாட்டு மக்கள் அக்கினி வழிபாட்டினராகக் கருதப்படுகின்றனர். இஃது இந் நாட்டு மக்களது வாய்மொழியால் எனக்குத் தெரிந்த வரலாறாகும். மூன்று ஞானியர்களாகிய அரசர்களில்

ஒருவர் சபா[1] என்னும் நாட்டின் வேந்தர். இரண்டாவது ஞானியர் தியாவா[2] என்னும் நாட்டு மன்னர். மூன்ருவது ஞானியர் மேற்கூறிய அரணின்[3] அதிகாரியாவார்.[4]

பாரசிகப் பெருநாட்டில் எண்வகை அரசாங்கப் பிரிவுகள் உண்டு. அவற்றின் பெயர்கள் பின்வருமாறு.

## பாரசீகத்தின் எண்வகை அரசாங்கம்

நாட்டின் எல்லேக்குள் முதல் முதலாகப் பார்ப்பது காசிபின்[5] என்ற அரசாங்கமாகும். இரண்டாவது தென் மேற்கில் உள்ள குர்திஸ்தான்;[6] மூன்ருவது லார்[7] என்ற பெயர் கொண்ட நாடு; நான்காவது சுவோலிஸ்தான்;[8]

---

[1] Saba [2] Dyava [3] Castle

[4] இக் கதை சத்திய வேதத்தில் விரிவாகச் சொல்லப்பட வில்லை. ஞானியர்கள் மூவர் மட்டும் குறிப்பிடப்பட்டிருக் கின்றனரேயன்றி (Matth II-1-12), மற்ற விவரங்கள் யாவும் நாட்டிற்கு நாடு வலிந்தும் நலிந்தும் கூறப்பட்டிருத்தல் வேண்டும். கர்ண பரம்பரை வரலாறுகளில் வேறுபாடு அதிகமாகக் காணப்படுவது இயற்கையே.

[5] Kasibin - அதாவது, காஸ்வின் (Kasvin) என்ற தலை நகரைக் கொண்ட நாட்டைக் கூறுகிருர். இந்நகரம் டாரிஸ் (Tauris) என்ற நதிவழியாக நுழையும்போது பெர்ஸியாவின் இராக் பகுதியில் (Persian-Iraq) இருக்கும் முதல் நாடாகும்.

[6] Kurdistan-அதாவது, குரிஸ்தான் (Kuristan) என் பதை தவறுதலாகக் கூறுகிருர்போலும். பெர்ஸியன் குடாவிற்கருகில் உள்ளது. ஆனல் Kurdistan என்பது ஆசியா நாட்டைச் சேர்ந்ததேயன்றி, பாரசீக நாட்டினைச் சேர்ந்திருந்ததாக வரலாறு உரைக்கவில்லை.

[7] Lor - இது குரிஸ்தானுக்கு வடக்கே உள்ளது.

[8] Suolistan - இது சியெஸ்தான் என்பதன் திரிபாகும். இது பெர்ஸியாவின் கீழ்ப்பகுதியில் இருக்கிறது.

ஐந்தாவது ஸ்பான்;[1] ஆறுவது சிராஸ்[2]; ஏழாவது சோன்கரா;[3] எட்டாவது திமோகயன்[4]; இது பாரசீகத்தின் இறுதிப் பாகத்தில் உள்ள நாடாகும்.

## குதிரை வளர்ப்பு

இறுதியாகக் கூறப்பட்ட திமோகயன் என்ற அரசாங்கத்தைத் தவிர, மற்ற நாடுகள் யாவும் தெற்குப் பக்கமாகவே பரவியுள்ளன. திமோகயன் மட்டும் அரபார் செக்கோ[5] என்ற இடத்துக்குப் பக்கத்தில் வடக்குப் புறமாக உள்ளது. இப் பாரசீக நாடு முழுவதும் குதிரை வளர்ப்புக்குப் பெரிதும் புகழ் பெற்றது. நன்கு வளர்க்கப் பட்ட குதிரைகள் இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு, ஒவ்வொன்றும் ஆயிரம் ரூபாய்களுக்குக் குறைவில்லாமல், இந்திய மக்களுக்கு விற்கப்பட்டு வருகின்றன.[6]

---

[1] Spaan-இதைத்தான் Isphan என்று அராபிய மக்கள் அழைக்கின்றனர். இது Persian Iraq-க்கிற்குத் தெற்கில் உள்ளது.

[2] Siras - Shiras என்ற இந் நகரம் பாரசீகத்தின் தலை நகரம். இஸ்பானுக்கு அடுத்தபடியாயுள்ளது.

[3] Soncara - காஸ்பியன் கடலுக்குத் தென்மேற்கில் உள்ள பிரதேசம். இது Socham என்றும், Sontara என்றும் பலவிதமாக உச்சரிக்கப்படுகின்றது.

[4] Timocain - இது Damaghan என்பதையே குறிப்பிடு கிறது. வடகிழக்குப் பாரசீகத்தில் உள்ள Kumis என்ற நாட்டின் தலைநகராகும்.

[5] Arbor Secco

[6] பாரசீகம், இராக் ஆகிய இரு நாடுகளிலிருந்து தருவிக் கப்படும் குதிரைகள் மிக்க வலிமையும் வனப்பும் வாய்ந் தவை. இந்தியாவில் இருக்கும் பெரும்பான்மையான குதிரைகள் இந்த அராபு வமிசத்தைச் சேர்ந்தனவேயாகும்.

## கழுதை வளர்ப்பு

இந் நாட்டில் குதிரைகளைப் போலவே கழுதைகளும் நன்றாகக் கொழு கொழு என்று வளர்க்கப்படுகின்றன. உலகத்திலேயே இங்குதான் கழுதைகளும் மிக அழகான முறையில் பேணப்பட்டு வருகின்றன என்பது மிகையல்ல; உண்மையேயாகும். இதன் காரணமாக, கழுதைகளுக்கு ஏற்படுத்தப் பட்டிருக்கும் விலையைக் குதிரையின் விலையை விட அதிகமாக்கி இருக்கிறார்கள். கழுதைகளுக்கு எளிதாக ஆகாரம் கிடைக்கிறது; இவை பொதி பொதியாக மூட்டைகள் சுமக்கும் தன்மை வாய்ந்தனவாகும். குதிரைகளும், ஒட்டகங்களும் போகும் தொலைவைவிடக் கழுதைகள் சிறிதும் களைப்பில்லாமலே அதிக தொலைவு செல்கின்றன. ஆகையால், வணிகர்கள் வனாந்தரங்களைக் கடக்கக் கழுதைகளையே மிகுதியான அளவில் பயன்படுத்துகின்றனர்.[1] ஆகாரமும் குறைவான அளவினதாக இருந்தால், வனாந்தரத்தைக் கடந்து விடலாம் என்ற வசதியே முக்கியமாகக் கருதப்பட்டு வருகிறது. இருப்பினும், ஒட்டகங்கள் கழுதைகளைப்போல் அவ்வளவு சுறுசுறுப்பாகவும், துரிதமாகவும் ஓடும் தன்மை வாய்ந்தன வல்ல என்ற காரணத்தால், கழுதைகளே வனாந்தரத்தைக் கடக்கப் பெரும்பாலும் பயன்படுத்தப்படுகின்றன. இந் நாட்டு வணிகப் பெருமக்கள் தாங்கள் வளர்த்த கழுதைகளைக் கிஸி,[2] ஆர்மஸ்,[3] மற்றும் இந்தியத் துறைமுகங்கள் பலவற்றுக்கும் கொண்டு செல்லுகின்றனர். ஆனால் அவை தட்பவெப்பநிலை காரணமாக நீண்ட நாள்கள் வாழ்வதில்லை.

---

[1] இயேசு கிறிஸ்து கழுதைமீது சவாரி செய்ததாகச் சத்திய வேதத்தில் (Holy Bible) குறிப்பிடப்படுவது ஈண்டு நோக்கற்பாலது. [2] Kisi [3] Ormus

## மக்கள் பண்பு

இப் பாரசீக நாட்டின் மக்களில் சிலர் காட்டு மிராண்டிகள் போன்றிருக்கின்றனர். இரத்த வெறி கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். கொலை செய்வதும், மற்றவர்களின் உடலில் காயம் ஏற்படுத்துவதும் இவர்களுக்குச் சாதாரண நிகழ்ச்சிகளாகும். வணிகப் பெருமக்களையும் அளவுக்கு மீறியே துன்பத்துக்குள்ளாக்குவர். ஆனால், கிழக்கிலிருந்து வரும் டார்டார்[1] வமிசத்தாருக்குப் பயந்து அவர்களை அவ்வளவாகத் துன்புறுத்த மாட்டார்கள். மற்றும் இந் நாட்டில் பயணம் செய்ய வேண்டி, பன்னிரண்டு குரோட்ஸ்[2] வரையில் பணம் கொடுத்து வழித்துணைவர்களை அமர்த்திக் கொள்ளலாம். அவ் வழித்துணைவர், மேற்கூறிய சுதேசி மக்களின் அபாயத்தினின்றும் வணிகப் பெருமக்களைக் காப்பாற்றுகின்றனர். பொருள்களும் பத்திரமாகக் காப்பாற்றப்பட்டு எடுத்துச் செல்லப் படுகின்றன. அவ் வழித்துணைவர்கள் யாவரும் மகமதிய மதத்தைப் பின்பற்றும் மகமதியர்களே.[3]

## நாட்டில் விளைச்சல்

உள் நாட்டில் பட்டு நூல் நூற்பதிலும், பொன் ஆபரணம் செய்வதிலும் வல்லுநர் பலர் இருக்கின்றனர். இங்குப் பஞ்சு அதிகமாக உற்பத்தியாவதுடன், கோதுமை, பார்லி முதலிய தானிய வகைகளும் பெருவாரியாகப் பயிராக்கப்படுகின்றன. கொடி முந்திரிப் பழமும், மற்றப் பழ வகைகளும் விளைவிக்கப்படுகின்றன. குடிக்கக் கூடாது என்னும் நிபந்தனை சாரசன் மக்களுக்கு

---

[1] Tartar [2] Groats [3] Mohamadans

உண்டு. ஆனால் அந் நிபந்தனையை மாற்ற வேண்டுமென்ற எண்ணம் தோன்றினால், திராட்சைப்பழரசத்தை அப்படியே அருந்தாமல் காய்ச்சிக் குடிப்பார்கள். அவ்வாறு காய்ச்சிக் குடிப்பதால், அதன் சுவை இனிப்பாக மாறிப் போதையை உண்டாக்காது தவிர்க்கிறது என்று காரணம் காட்டுகின்றனர். அவ்வாறு காய்ச்சின திராட்சை இரசத்தை மது பானம் என்று கூறாமல் அதைப் பழரசம் என்றே வழங்குகின்றனர். ஆயினும், பழரசத்தால் செய்யப்படும் பானம் மதுபானமாகுமே தவிர, வேறு எப் பெயரால் அதை வழங்கினால்தான் என்ன?''

# 2. ஆர்மஸ் துறைமுகம்

## துறைமுகத்தின் சிறப்பியல்பு

"முன்னர்க் கூறப்பட்ட இடத்திலிருந்து தெற்குப் பக்கமாக ஐந்து நாள்கள் பயணஞ் செய்தால், நாம், இருபது மைல் நீளமுள்ள வனுந்தர மொன்றை அடைவோம். இங்குக் காணப்படும் பாதை கொடுமை மிக்கிருக்கும். இங்கே திருடர்களும், வழிப்பறிக் கொள்ளைக் காரர்களும் மலிந்திருக்கின்றனர். அவர்கள் அவ்விடத்தின் ஊடே செல்லும் யாத்திரிகர்களையும், வணிகர்களையும் வழி மடக்கிக் கொள்ளையடித்துத் துன்புறுத்துகின்றனர். ஆகையால், மிகவும் விழிப்பாகவே இப்பாதையைக் கடந்து சென்ருல் இதற்கடுத்தாற்போல் மற்ருெரு வனுந்தரம் நம் கண்களுக்கெதிரே தென்படும். இவ்விரண்டாம் வனுந்தரத்தின் காட்சி மிக்க இன்பத்தை யளித்து நிற்கும். இயற்கை வனப்பு மிக்கு, எழில் சிறக்கப் பெற்று, மனத்துக்கு உற்சாகத்தை அளித்து நிற்கும் இப் பிரதேசம் ஆர்மஸ் வனுந்தரம் என்று பெயர் பெறும். இவ்வனுந்தரத்தைக் கடக்கும்பொழுது, பல சிற்ருேடைகளை நாம் காண்போம். மற்றும் இந் நாட்டில் பேரீச்சம் பழமும் ஏராளமாக விளைவிக்கப்படுகிறது. பற்பல பறவை இனங்களும்—நம் நாட்டில் பார்க்கமுடியாத பறவை வகைகளும்—இங்கு மிகுதியாகக் காணப்படுகின்றன. இப் பகுதியின் முடிவில், கடற்கரை காணப்படும். இக் கடற்கரையிலிருந்து சிறிது தூரத்திலேயே தீவு ஒன்று காணப்படும். இத் தீவில்தான்

ஆர்மஸ்[1] என்ற அரும்பெரும் நகரம் இருக்கிறது. இந் நகரம் கடலுக் கருகிலேயே ஒரு சிறப்பு வாய்ந்த துறைமுக மாக விளங்குவதால், இந்தியாவிலிருந்து கப்பலில் வரும் வணிகப் பெருமக்கள், இந் நகரில் கூட்டமாகத் தங்குகின் றனர்.

இவ் வணிகப் பெருமக்கள் வரும்பொழுது தங்களுடன் வாசனைப் பண்டங்கள், மூலிகைகள், முத்துகள், வைரங் கள், பொன், தந்தங்களாகிய யானைப் பற்கள், மற்றும் பற்பல உயர்ந்த வாணிகப் பண்டங்களையும் விற்பனைக்குக் கொண்டு வந்து குவிக்கின்றனர். இவ்வாறு கொணர்ந்த பொருள்களை இந்திய நாட்டிலிருந்து வரும் வணிகர்கள், இங்கு உலகத்தின் பல்வேறு பகுதிகளினின்று வரும் மற்ற அயல்நாட்டு வணிகர்களுக்கு விற்றுப் பணமாகவும் பண்ட மாகவும் மாற்றிக் கொள்கின்றனர். இதைப்போல் வாணிபம் நிறைந்துள்ள இடத்தை வேறெங்கும் காண்பது அரிதாகும். இங்கே தனியான கோட்டைகளும், நகரங் களும், பாதுகாப்பு அரண்களும் உள்ளன. இவை யாவும் இத் துறைமுகத்தின் வருமானத்தால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இப்பெரு நகரமே கீர்மான்[2] என்ற அரசாங்கத் தின் தலைநகரமாகும்.

## ஆர்மஸின் அரசன்

இத் தலைநகராகிய ஆர்மஸில்தான், இந் நாட்டு

---

[1] Ormus—இச் சொல் Hormuz என்று சில பிரதிகளில் காணப்படுகின்றன. கீர்மானின் பல்வேறு இடங்களிலிருந்து இந்தியா செல்லும் கப்பல்களுக்கும் இந்தியாவிலிருந்து கீர் மானுக்கும் மற்ற மேலை நாடுகளுக்குப் போகும் கப்பல்களுக் கும் இளைப்பாறும் இடமாக இத் துறைமுகம் விளங்கியது. சூயஸ் கால்வாய் (Suez Canal) வெட்டின பிறகு, இதன் முக்கியத்துவம் குறைந்து, நாளடைவில் மக்களால் மறக்கப் பட்டது.

[2] Kirman

அரசனுன ருக்மெதின் அகோமக்[1] தன்னுடைய ஏக சக்ராதிபத்தியத்தை நிலைநாட்டி ஆண்டு வருகிருன். ஆனல் தன்னைவிட ஆற்றல் மிக்க கீர்மானின் வேந்தனுக்குக் கப்பம் கட்டியே வாழ்கிருன். அவ்வேந்தனுக்கு அடங்கி நடக்கவும் முயல்கிருன். வேறு அயல் நாட்டினன் எவனுகிலும் தன் நாட்டின் எல்லைக்குள் புகுந்து விட்டால், இவ்வரசன் அவர்களுடைய பண்டங்கள் அனைத்தையும் நாட்டிற்காக வென்று எடுத்துக் கொண்டு, அப்பொருள்களால் கிடைக்கும் பணத்தைத் தன் உண்டியலில் சேர்த்துவிடுவான்.

## பருவ காலங்கள்

கோடைக் காலத்தில் குடிமக்கள் இந் நகரில் பெரும்பாலும் தங்குவதில்லை. இக் காலத்தில், சிறிது உள்ளடங்கிய நதிகளிலும், ஓடைகளிலும் சிறு சிறு குடில்களைக் கட்டிக்கொண்டு, பெரும்பாலும் நீர்ப் படகுகளிலேயே தங்கள் பொழுதைக் கழிப்பர். இவ்வாறு இவர்கள் குளுமைதரும் ஏற்பாடுகள் பல செய்து வாழ்வதற்குக் காரணம், கோடையில் இவ்விடத்தில் நிலவும் கடுமையான வெப்பமேயாகும். இக் கோடையில் தினமும் சில மணி நேரங்களாவது, கடுங்காற்று—வெப்பம் மிக்க கொடுங் காற்று—இக் கடற்கரைப் பிரதேசங்களிலே வீசும். இக் காற்று உள்ளடங்கிய பிரதேசங்களிலும் சிறிது வரும். காலையில் பெரும்பாலும் 9 மணியிலிருந்து பகல் 12 மணி வரையிலும் இக் காற்று மிக்க கடுமையாக வீசும்.

---

[1] Rukmedin Achomak - இது Ruk Eddin - Mohamud என்பதன் திரிபாகும். Mohamad, Ahmed ஆகிய சொற்கள் வழக்காற்றில் திரிந்து Achomak என்று ஆயிற்று. இத்தகைய வேறுபாடுகள் மொழி பெயர்ப்பாளரின் கைத்திறனுலும் ஏற்படுவது இயல்பே.

இவ்வாறு அடிக்கும் காற்ருனது, மக்களை மூச்சு விடாமல் திக்குமுக்காடச் செய்து, இங்கிருப்பவர்களில் பெரும் பாலோரைக் கொன்றுவிடும். மற்றும் கடுமையான வெப்பம் காரணமாக, உடம்பின் மீந்தோல் காய்ந்து, உடம்பில் பல கீற்றுகளும், பாளங்களும், வெடிப்புகளும் ஏற்பட்டு, இரத்தம் 'குபுகுபு'வென வெளியே கொட்டும். ஆகையால் இச் சமயங்களில், இப் பிரதேச மக்கள், கொடுமை மிக்க வெப்பத்துக்குப் பயந்து, முன்னர்க் கூறப்பட்ட புதிய் படகுகளில் உறைந்து வருவார்கள். மற்றும் இக் கொடுங் காற்று சிறிது வேகமாக அடித்தால் ஓர் அகன்ற பாத்திரத் தில் நீரை வைத்துக்கொண்டு, அந் நீரில் தங்கள் முகத்தைப் பதிய வைத்து, காற்றின் வேகம் குறைந்ததும், தங்கள் முகத்தை வெளியே எடுப்பார்கள். இவ்வாறு செய்வது அவர்களுடைய முகத்துக்கும், கண், காது முதலிய முக்கிய உறுப்புக்களுக்கும் சிறந்த பாதுகாப்பு அளிப்பதாகும்.

மேற்கூறிய வெப்பத்தின் கொடுமையை நான் இங்கு வந்திருந்த பொழுது அனுபவத்தால் கண்டறிந்தேன். பின் வரும் நிகழ்ச்சி இதன் விவரத்தை நன்கு தெளிவாக்கும் என எண்ணுகிறேன்.

## மார்க்கோ போலோ கண்ட காட்சிகள்

ஆர்மஸின் சிற்றரசர்கள் கீர்மானின் பெருவேந்த னுக்குத் தாங்கள் கட்ட வேண்டிய கப்பத்தைக் கட்டாது காலம் நீட்டித்ததற்காக, கப்பத்தைக் கட்டாயம் வசூலிக்கப் பெருவேந்தன் ஆயிரத்து நூறு குதிரைகளும், ஐயாயிரம் காலாட் படைகளும் கொண்ட படையொன் றினைத் திரட்டி அதை ரியோ பார்லி[1] என்ற இடத்துக்கு அனுப்பினுன். சிற்றரசர்களைத் துன்புறுத்திக் கப்பத்தைக்

[1] Reo Barle

கட்டாயம் பெற்று வருமாறு கட்டளையிட்டான். அவ்வாறு அப் படைகள் புறப்பட்ட காலம் கோடைக் காலம் ஆகும்; இக் காலத்தில் மக்கள் அனைவரும் காற்றின் கொடுமைக்குப் பயந்து, கடற்கரைப் பிரதேசத்தை விட்டு, உட்சென்று, நதிப் படகுகளில் உறைந்து வந்தனர். படையெடுத்து வந்த சேனைகள் வழித்துணைகளின் தவறுதலால், மாற்று வழிச் சென்று ஓர் இரவு ஆர்மஸ் அருகில் இருந்த தோப்பு ஒன்றில் இளைப்பாற ஏற்பாடு செய்தன. இரவு இளைப்பாறிவிட்டு, மறுநாள் காலை எழுந்து, தங்கள் பயணத்தைத் தொடங்கியதும், கோடைக் காற்று "கோ" வென அடிக்கத் தொடங்கிவிட்டது. அவ்வெப்பக் காற்றினின்றும் பிழைத்து வெளியேறுபவர் எவரேனும் உண்டோ? இல்லை. எனவே, அச் சேனைகளின் பரிதாப நிலையைத் திரும்பிச் சென்று தங்கள் அரசரிடம் தெரிவிக்க ஒருவர்கூட மிகுதியில்லாமல் யாவரும் அக் கொடுங் காற்ருல் திக்குமுக்காடப் பெற்று, உயிரிழந்து, கீழே வீழ்ந்தனர். இச் செய்தியை எவ்வாருே அறிந்து, அன்றிரவு சென்று பார்த்த ஆர்மஸ் மக்கள் ஆச்சரியத்தில் மூழ்கினர். அவ்வளவு பெயர்களும் வரிசையாக மடிந்திருந்ததைக் கண்டனர். சுற்றும் காற்றடித்த வேகத்தால் கீழே விழுந்திருந்தவர்களின் கைகால்களைத் தூக்கின மாத்திரத்தில், அவை உடனே உடலிலிருந்து பிரித்தெடுத்ததுபோல், சுழன்று வந்துவிட்டன. அதனுல் அப் பிணங்களுக் கருகிலேயே குழிகளைத் தோண்டி அவற்றை அக் குழிகளில் புதைத்துவிட்டனர். பிணங்களை அவ்வாறே வெளியில் போட்டு வைத்திருந்தால், காற்ருனது அசுத்தமடைந்து, அதன் காரணமாகப் பற்பல நோய்கள் பரவுமாதலால், அவை குழிகளில் நன்கு புதைக்கப்பட்டன. இவை யாவற்றையும் அன்றிரவே செய்து முடித்து மறுநாள் விடியுமுன் தங்கள் இருப்பிடமாகிய நதிப் படகுகளுக்குச்

சென்றுவிட்டனர். இல்லாவிடில் இந் நாட்டு மக்களை நாடிவந்த சேனைகளுக்கு நேர்ந்த கதியே இவர்களுக்கும் நேர்ந்துவிட்டால் என்ன செய்வது? இவர்களுக்கு உதவி செய்பவர் வேறு எவரேனும் உளரோ? ஆகவே இந் நிகழ்ச்சியை என் கண்களால் பார்த்த பிறகு அங்கு நிலவிய தட்பவெப்பநிலையை ஒருவாறு நான் உள்ளபடி அறிய முடிந்தது.

**கப்பல் கட்டும் விவரம்**

ஆர்மஸ் துறைமுகத்தில் கட்டப்படும் கப்பல்கள் மிகவும் அபாயகரமானவை. இவற்றால் மக்களுக்கும், ஏற்றப்படும் பண்டங்களுக்கும், திடீர் திடீர் எனச் சேதங்கள் ஏற்படுவதுண்டு. இதற்குக் காரணம் கப்பலில் ஆணிகள் பயன்படுத்தப்படுவதில்லை. ஆணிகள் அறையப் பட்டால், மரங்களின் கனமான தன்மையின் காரணமாய், அம் மரங்கள் மட்பாண்டங்கள் போல் விரிவடைந்து, முற்றிலும் உடைந்து விடுகின்றன. இப்படியிருக்க மேலும், ஆணியைச் செலுத்தினால், அவ்வாணிகள் உடை பட்டும், வெளியே தள்ளப்பட்டும் நிற்கின்றன. இதனால் ஒரு பலகையை மற்றப் பலகையில் கிராதி எடுத்து, ஒன்றுக்குள் ஒன்று பொருத்தி, அவற்றைத் தண்ணீரில் மிதக்க விடுகிறார்கள். நீரின் தன்மையால், பலகைகள் நன்றாக இறுகிக் கொள்கின்றன. இதற்குப் பிறகு, கப்பலை ஒருவகைக் கயிற்றால் சுற்றிக் கட்டுகிறார்கள். இக் கயிறு பனைமரத்திலிருந்து பெற்ற கயிறாகும். இது குதிரையின் உரோமம் போன்று மிக்க உறுதியாக இருக்கும். கப்பலின் அடிப்பாகத்துக்குப் பசை யாதும் உபயோகப்படுத்துவது கிடையாது. பசைக்குப் பதிலாக, ஒருவகை மீனினின்று எடுக்கப்படும் எண்ணெயைத் தடவி அதனால் நீரானது கப்பல் உட்புகாதவாறு பாதுகாக்

கின்றனர். கப்பலுக்கு ஒரு பாய்மரமும், ஒரு தளமுமே தான் உண்டு. அக் கப்பலில் சரக்குகள் ஏற்றப் பட்டதும், அவை உரோமமுடைய ஆட்டுத் தோலால் மூடப்படுகின்றன. அதன் பிறகு, ஏற்றுமதி செய்யப்பட வேண்டிய குதிரைகள் அம் மூட்டைகள்மீது ஏற்றப்பட்டு, அவை இந்தியாவுக்குக் கொண்டு வரப்படுகின்றன. அக் கப்பல்களுக்கு இரும்பினாலான நங்கூரம் கிடையாது. அதற்குப் பதிலாகப் பூமியில் தாங்கும் ஒரு கற்பாறை யையோ அல்லது கனமான மரக்கட்டையையோ பயன் படுத்துகின்றனர். ஆனால், அக் கப்பல்கள் பெருங்காற்று அடிக்கும்போது, ஏதாகிலும் ஒரு கரைக்கு அடித்துச் செல்லப்படுவதுண்டு. சிற்சில சமயம் அவை கண்காணுத் தீவுக்கு அடித்துச் செல்லப் படுவதுமுண்டு. மற்றும், சில கப்பல்கள் காற்றுலும் அலைகளாலும் மோதப்பட்டு உடைந்து, உருத் தெரியாமல் போவதுமுண்டு.

## ஆர்மஸின் ஆதிவாசிகள்

இப் பிரதேசத்தில் வசிக்கும் மக்கள் யாவரும் கருமை நிறம் கலந்த உடலோடு காணப்படுகின்றனர். இவர்கள் யாவரும் மகமதியர்கள். இவர்கள் கோதுமை, அரிசி முதலிய தானியங்களை நவம்பர் மாதத்தில் விதைத்து, மார்ச்சு மாதத்தில் அறுவடை செய்வார்கள். பேரீச்சம் பழம் தவிர மற்றெல்லாப் பழங்களும் இம் மாதங்களி லேயே பறிக்கப்படுகின்றன. இப் பேரீச்சம் பழத்தை மற்றச் சரக்குகளோடு சேர்த்து ஒருவகை உயர்ந்த பானத்தைத் தயார் செய்கிறுர்கள். முதன் முதல் அப் பானத்தை அருந்தும் எவரும் தீராத மயக்கத்தில் ஆழ்ந்து விடுவது இயல்பு. ஆனல் சிறிது பழக்கத்தில் வந்துவிட்ட

பிறகு அதுவே, அவர்கள் உடல் பெருக்கத்திற்குக் காரணமாகவும் ஆகின்றது. இந் நாட்டு ஆதிவாசிகளின் உணவு நம்முடைய உணவைப் போன்றதன்று. கோதுமை ரொட்டியையும், ஊனையும் தின்றால், இவர்களுடைய உடல் நலம் பாதிக்கப்படும் இக் குடி மக்களின் முக்கிய உணவு பேரீச்சம் பழமும், உப்பிட்ட மீனிறைச்சியுமாம்.

## பசுமை காணாத வனாந்தரம்

சூரிய வெப்பத்தின் கொடுமையாலும், சுழன்றடிக்கும் காற்றின் வேகத்தினாலும் புற்கள் சிறிது முளைத்தாலும், அவை தீய்ந்து காய்ந்து போகின்றன. நீர் சுரக்கும் இடங்கள் தவிர, மற்றப் பகுதிகளில் பசும்புல் காணப் படாது. ஆகவே, இங்குப் பசுமை காணாத வனாந்தரம் பல மைல்களுக்குக் காணப்படும்.

## கூலிக்கு ஒப்பாரி

இந் நாட்டின் பெரிய கனதனவான்கள் இறந்து விட்டால், அவர்கள் மனைவிமார்கள் தங்கள் கணவர்களை நினைத்துக்கொண்டு, நான்கு வாரங்கள் தொடர்ச்சியாக அழுது புலம்புவார்கள். இவ்வாறு அழுது புலம்புவதற்கு எனக் கூலி பெறும் ஆள்களும் நிறையக் கிடைக்கிறார்கள். அழத் தெரியாதவர்களுக்கும், தாம் அழுவதை நாகரிகமற்ற செயலாக நினைப்பவர்களுக்கும், இத்தகைய அழும் கூலிகள் தங்கள் சிறந்த ஒப்பாரியால் அப் பணியை நிறைவேற்றி வைப்பார்கள். இவர்கள் தங்களுக்கு எம் முறையிலும் சொந்தமில்லாதவரின் சடலத்தின் முன் உட்கார்ந்து அழுது புலம்புவது, அவ்விறந்தோரின் உறவினர்க்கும் உற்றார்க்கும் அடக்க முடியாத சோகத்தை வருவிக்கும் இயல்பு வாய்ந்ததாகும். இவ்வாறு கூலிக்கு ஒப்பாரி வைப்பவர்கள்

அவ்வளவு அழகாக ஒப்பாரி வைத்து அழுவார்கள். இவர்கள் அழுவதைப் பார்த்து, சுற்றி நிற்கும் மற்றவர்களும் அழுது புலம்புவார்களாம்[1]. இருப்பவர்கள் இறப்பவர்களுக்கு அழுவது அன்னாரின் ஆன்ம சாந்திக்காக என நம்பப்படுகிறது."

---

[1] இவ்வழக்கம் இன்றும் சிலருடைய குலத்தில் நடைமுறையில் உள்ளது. அழத்தெரியாதவரிடம், இவர்கள் தகுந்த கூலி பெற்று, அழுது புலம்பி ஊரையே ஒன்று கூட்டுவார்கள். இக் காரணத்தால்தான், "கூலிக்கு மாரடித்தல்" என்ற பழமொழியும் நம் நாட்டில் ஏற்பட்டுள்ளது போலும்!

# 3. சீனப் பேரரசர் குப்ளாய்கான்

## குப்ளாய்கானின் வரலாறு

"இப்பொழுது சீனப் பேரரசை ஆண்டு வரும் குப்ளாய்கான் என்பவரைப் பற்றிப் பேசுவோம். குப்ளாய்கான்[1] என்ருல் அரசர்க்கு அரசர், அதாவது பேரரசர் என்னும் பொருள் தந்து நிற்கும். இவ்வரசர் குப்ளாய்கான், ஜெங்கிஸ்கான்[2] என்ற பெருவேந்தரின் வமிசத்தில் முறையாக வந்தவர். இவர் ஆருவது பேரரசர் ஆவார். தம்முடைய ஆட்சியைக் கி.பி. 1256ஆம் ஆண்டு ஆரம்பித்தார்[3]. இவ்வாட்சியைத் தம்முடைய பேராற்ற லால், நியாயமான முறையில், யாவரும் போற்ற உடன் பட்டு ஏற்றுக்கொண்டார். தம்முடைய போர் வீரத்தால், நாட்டைத் தமது தமையன்மார்களிடமிருந்து பற்றித் தாம் பேரரசராய்ப் பட்டமெய்திஞர். இவருக்குத் தம் உறவின ரின் ஒத்துழைப்பு என்றைக்கும் உண்டு. அதுவே இவருக்குப் போதிய பக்கபலமாகத் துணை நின்று

---

[1] Kublai Khan - தம் சந்ததியாரும், தம் மகனும் அணிந்துகொள்ளுமாறு, ஜெங்கிஸ் என்னும் அரசரால் ஏற் படுத்தப்பட்ட ஒரு பட்டமாகும். இதற்கு நேரான ஆங்கிலப் பதம் Lord of Lords என்பதுதான்.

[2] Jenghis Khan - (கி.பி. 1206-1226) காலத்தில் அரசாட்சி செய்ததாக வரலாற்று நூல்கள் தெரிவிக் கின்றன. ஆனல், மார்க்கோ போலோ, இவர் பதவி ஏற்ற காலம் கி.பி. 1162 என்று கூறுகிருர்.

[3] இவர் அரசாட்சி தொடங்கியது கி.பி. 1280 என்று வரலாறு சான்று பகர்கின்றது.

உதவிற்று. இப்பொழுது—அதாவது கி.பி. 1288-ல் இவர் அரசாட்சி செய்யத் தொடங்கி நாற்பத்திரண்டு ஆண்டுகள்[1] ஆகி, இவருக்கு எண்பத்தைந்து வயது நிரம்பப் பெறுகின்றது. தாம் பேரரசர் ஆவதற்குமுன், நாட்டுச் சேனையின் தலைமைப் பதவியை இவர் வகித்து வந்ததாகத் தெரிகிறது. நாட்டில் நிகழ்ந்த போர் ஒவ்வொன்றிலும் இவர் கலந்துகொண்டு வெற்றி முழங்கும் பெருவீரராய் விளங்கினார். போர்க் காலத்தில் காட்டிய வீரக்குணத் தோடன்றி, மற்றக் காலங்களிலும், ஒருவித சுறுசுறுப்பான தன்மையையும், காரியத்தை நிறைவேற்றும் ஆற்றலையும், அவாவையும் உடையவராகக் காணப்பட்டார். இதன் காரணமாகச் சேனைகளை நடத்திச் செல்வதில் நிகரற்றவர் என்றும், போர் முனையில் தோல்வி காணாப் பெருவீரர் என்றும், பெரும் புகழ் படைத்தார். டார்டார்ப் பெரு மக்களின் யுத்தங்கள் யாவற்றிலும் வெற்றிகாணச் செய்ததில் இவருக்கு இணை வேறொருவர் அதுவரையில் இருந்ததாகத் தெரியவில்லை.

## நாயன்மீது தொடுத்த போர்

நாயன் என்ற சிற்றரசன் ஒருவன் தனது முப்பதாம் வயதிலே, தன் ஆதிக்கத்தில் பல சிறு அரசாங்கங்களை வசதிப்படுத்தி அவற்றைத் தன் ஆட்சியின் கீழ்க்கொண்டு வந்தான். அவன் நான்கு இலட்சம் சேனை கொண்ட குதிரைப்படை ஒன்று வைத்திருந்தான். இச் சிற்றரசன் குப்ளாய்கான் என்ற பேரரசருக்கு உறவினன் ஆவான். இளவயதிலேயே இவ்வளவு பெரிய சேனைக்குத் தலைவனாக இருக்கும் செருக்கினால், கி.பி. 1286 ஆம்

[1] தவறுதலாகக் கூறுகிறார் போலும். 32 என்பதற்குப் பதிலாக 42 என்கிறார்.

ஆண்டு, தன்னுடைய கப்பம் கட்டும் நிலைமையைக் கைவிட்டுப் பேரரசைக் கைப்பற்ற முனைந்து, அதற்குத் தகுந்த முயற்சிகள் பலவற்றைச் செய்தான். இத்தகைய காரியத்தில் ஈடுபட துருக்கிப் பிரதேசத்தைச் சார்ந்த காய்டு[1] என்ற நாட்டின் அரசனுக்கு இரகசியமாகத் தூதர்களை யனுப்பி, அவனைத் தனக்கு உதவி புரியுமாறு வேண்டினன். அக் காய்டு நாட்டரசன், குப்ளாய்கானுக்கு நெருங்கிய உறவினனுயிருந்தும், அவரிடத்தில் பல சமயங்களில் தோல்வியும், தண்டனைகளும் பெற்றிருந்ததால் அவற்றிற்கு மாருக அவருக்குத் தீங்கு செய்யும் தருணத்தை எதிர்பார்த்திருந்தான். இச் சந்தர்ப்பத்தை உபயோகப் படுத்திக் கொண்டு நாயன் அரசனுக்கு உதவி புரிவதாக வாக்களித்தான். அதன்படி அவன் ஓர் இலட்சம் வீரர்களையும், குதிரைகளையும் அனுப்பித்தந்து, மற்றும் வேண்டிய பல வசதிகளும் செய்து கொடுத்தான்.

## குப்ளாய்கான் படை திரட்டல்

அவ்விருவரும் இவ்வாறு படை திரட்டுவதைக் கேள்வியுற்ற குப்ளாய்கான் சிறிதேனும் பொழுதை வீணுக்காமல், காய்டுவுக்கும், நாயன் நாட்டிற்கும் இடையிலுள்ள கணவாயில் தமது பெரும்படைகளை நிறுத்திவிட்டார். இதனுல் அவர்கள் இருவருக்கும் ஏற்பட்ட ஒப்பந்தம் நடைமுறையில் நிறைவேருமல் போயிற்று. குப்ளாய்கான், தாம் மட்டும் அப் பிரதேசத்திலேயே வீற்றிருந்து, தம் நாட்டின் பல பகுதிகளிலும் ஆங்காங்குச் சேமித்து வைக்கப்பட்டிருந்த 360 ஆயிரம் குதிரைப் படைகளையும் தமது இருப்பிடத்துக்கு வரவழைத்தார். காலதாமதம் செய்திருந்தாரேயானுல், குப்ளாய்கான் நிலைமை என்ன

[1] KAIDU - துருக்கி நாட்டில் இருந்த இந் நகரம் டார்டாரின் முக்கிய இடமாக விளங்கிற்று.

வாகியிருக்கும்? இவ்வாறு இவர் இரு சிற்றரசர்களுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தத்தை அறிந்தவுடனே, நடு நாட்டில் நின்று, உறவைத் துண்டித்தது, அவருடைய முன் யோசனை யையும், சிறந்த புத்திக் கூர்மையையுமன்றோ காட்டு கின்றன! முன்யோசனையோடு செய்யப்பட்ட இக் காரியம் யாவராலும் நன்கு போற்றப்பட்டது.

## படை செலுத்தப்பட்ட வரலாறு

தமது நாட்டில் ஐந்து முதல் நாற்பது நாள் வரை யுள்ள பயண தூரங்களில் சேர்த்து வைக்கப்பட்ட சேனைகள், இருபத்தைந்து நாள்கள் பயணம் செய்து, நாயனது பிரதேசத்தை அடைந்தன. இப் பயணம் நாட்டில் ஒருவருக்கும் தெரியாமல் நிறைவேற்றி வைக்கப் பட்டது. இரவு வேளைகளில் மட்டுமே பயணம் செய்து அவ்வீரர்கள் நாயன் நாடு அடைந்தனர். குப்ளாய்கான், தமது எதிரிகள் இருக்கும் பக்கமாகத் தமது முகாமை அமைத்துக் கொள்ளாமல், அம் மலைச் சாரலின் மறுபகுதி யில் முகாமிட்டிருந்தார். இதன் பிறகு சேனைகளுக்கு இரண்டு ஓய்வு நாள்கள் விடப்பட்டன.

## சோதிடரிடம் கேட்ட குறி

இவ்விரண்டு ஓய்வு நாள்களிலும், பேரரசர் தம்முடன் அழைத்து வந்த சோதிடர்களைக் கூப்பிட்டு, அவர்களைத் தம் சேனைப்படைகளுக்கு முன்பாக நிறுத்தி, நடக்க விருக்கும் போரில் யாருக்கு நிச்சயம் வெற்றி கிட்டும் என்பதை ஆராய்ந்து சொல்லுமாறு பணித்தார். நாளும் கோளும் நன்காராய்ந்து, அவர்கள் யாவரும் ஒருங்கே, குப்ளாய்கான் பேரரசருக்கே வெற்றி கிடைக்கும் என உறுதிமொழி அளித்து, யாவரையும் உற்சாகப்படுத்தி நின்றனர்.

## நாயன் சேனைகளின் ஆயத்தமின்மை

இவ்வாசிச் சொற்களைக், கேட்டு உற்சாகத்தால் மனம் களிபொங்கப் போர்ப்படைகள் அடுத்த நாள் காலை, நாயன் முகாமிட்டிருக்கும் மலைச் சாரலுக்குச் சென்றன. அப்பொழுது நாயனுடைய படைகள் எவ்வித ஏற்பாடு மின்றி ஆங்காங்கே தாறுமாருய்ச் சிதறிக் கிடந்ததையும் நாயன் அரசன் தன் மனைவியுடன் கூடாரமொன்றில் கவலையற்று நன்கு உறங்கிக் கொண்டிருந்ததையும் குப்ளாய்கானின் படைவீரர் கண்டனர்.

இருப்பினும், பேரரசரின் திடீர்ப் பிரவேசம் நாயனுக்கு அறிவிக்கப்பட்டதும், அவன் தன் பள்ளியறை யிலிருந்து துள்ளி எழுந்தான். தன்னைப் பேரரசர் தனிப் போரில் எதிர்த்து நிற்பதையறிந்தான். தான் முன்னமேயே காய்டு நாட்டரசனின் நட்பினைக் கோராமைக்கு மனம் மிக வருந்தினன். ஆயினும், நேர்ந்துள்ள நெருக்கடி நிலையினை ஒருவாறு சமாளித்துக்கொண்டு தன் போர்வீரர் களைக் கூவி எழுப்பி, போருக்கு எழும்படி கட்டளையிட்டுத் தானும் அதற்குத் தயார் ஆனன்.

## போர் தொடக்கம

குப்ளாய்கான், மரத்தாலாய பாதுகாப்பு ஒன்றில் அமர்ந்து, நான்கு யானைகளால் இழுக்கப்படும் இரத மொன்றின் மீதேறி, கையில் வில்லும் அம்பும் ஏந்தி, தேர் வீரர்களும், குதிரை வீரர்களும் புடைசூழப் போர்க் களத்தில் அமர்ந்திருந்தார். தேரின் உச்சியில், சூரியனும், சந்திரனும் தீட்டப்பட்ட கொடி சலசலவெனப் பறந்து ‘வெற்றி பேரரசருடையதே’ என எடுத்துக் காட்டி நின்றது. தமது சேனைத் திரளை மூன்ருகப் பகுத்து, ஒவ்வொரு பாகத்தையும் முக்கியமான இடங்களில் நிற்க

வைத்தார்; இதனால் நாயன் சேனைகள் தப்பி ஓடிவிடாதவாறு குப்ளாய்கானின் சேனை வீரர்களே அரண் போன்று அமைந்தனர். காலாட் படைகளும், குதிரைப் படைகளும், கத்தியும் கேடயமும் தாங்கி, பகைவரை அழிக்க முந்தி நின்றன.

இவ்வாறு எல்லா ஏற்பாடுகளும் செய்து முடிந்ததும், பலவித வாத்தியங்கள், நாதத்தையும் கீதத்தையும் நயம் பெற ஒலித்துப் போர்வீரரைப் போருக்கு எழுமாறு ஊக்கம் காட்டி உற்சாக மூட்டின. இதன் பிறகு பாட்டும், கூத்தும் பற்பல பாணிகளில் நடந்தன. இவ்வாறு நிகழ்த்துவது டார்டாரியரின் வழக்கமாகும். இவை நடந்தேறியதும், முரசு வாத்தியங்கள் கணகண வென்றும், படபடவென்றும் முழக்கம் செய்தன. இப் பேரோசைகளே போர் துவங்கியதற்குரிய அடையாளமாகும்.'

## போர் விவரம்

குப்ளாய்கான் தமது தலையை அசைத்ததுதான் தாமதம், ஆயிரக்கணக்கான வில்கள் நாண்களேற்றி விண்விண் என விண்ணில் ஒலித்தன. அம்பால் பந்தல் வேய்ந்தாற்போல் ஆகாயம் காட்சியளித்தது. இரு திறத்தாரிலும் போர்வீரர் மலை மலையாகக் குவிந்து விழுந்தனர். அவர்கள் இரத்தத்தைக் கக்கினர்; குதிரைகள் கனைத்துக் கலினத்தைச் சுவைத்தன; யானைகள் பிளிறின; துதிக்கைகள் இழந்தன; தந்தங்கள் ஒடிந்து தாறுமாறுகக் கிடந்தன. விற்போர் முடிந்ததும், காலாட் படைகள் சிறிது நேரத்தில் நெருங்கி விட்டனராதலால் கத்திகளின் ஒலியும், ஈட்டிகளின் உராய்வும் காதுகளைச் செவிடாக்கின. இப்பொழுது கீழே விழுந்த உடல்கள் கணக்கி

லடங்கா. கைகளும், கால்களும், தலைகளும், உடல்களும் வெவ்வேருகப் பிரிந்து, துணிக்கப்பட்டு, அல்லோல கல்லோலமாகச் சிதறிக் கிடந்த காட்சி கல் மனத்தையும் கனிய வைக்கும் தன்மையாய் விளங்கிற்று. இரு திறத் தாருடைய உடல்கள் மலை போல் குவிந்துவிட்டபடியால், அவற்றைத் தாண்டித் துரிதமாக முன்னேற இருவராலும் முடியாமற் போயிற்று. நாயனின் வீரர்களும் சிறந்த போர்த்திறம் படைத்தவர்களே. நாயனுக்குத் தங்கள் உயிரைக் கொடுத்தாகிலும், நாயனின் புகழை நிலை நாட்டப் போர்க் களத்துக்கு அவர்கள் வந்தவர்கள். ஆதலால் அன்றைய முடிவு வெற்றியா தோல்வியா என்றும், அது எவரைச் சார்ந்தது என்றும் உறுதியாக அறிய முடியாத மயக்க நிலையில் அமைந்திருந்தது.

## நாயன் சிறைப்படுதல்

இதற்குள் குப்ளாய்கான் சிரமப்பட்டுச் சிறிது சிறி தாக முன்னேறி, நாயனைச் சூழ்ந்து கொண்டார். ஆனல், நாயன் இறுதியாக அங்கிருந்து மாறுவேடம் பூண்டு மன்னரை ஏமாற்றிச் செல்ல முயன்றும், அத் தந்திரம் பலிக்காமலேயே போயிற்று. இறுதியில், நாயன் குப்ளாய் கானின் படையால் சூழப்பட்டுச் சிறைபிடிக்கப்பட்டான்.

## நாயனின் மரணம்

சிறைபிடிக்கப்பட்ட நாயன், பேரரசர் குப்ளாய்கான் முன்னர் நிறுத்தப்பட்டான். உடனே அரசர் மாற்றுனை ஒழிப்பதே அரச நீதி என முடிவு செய்து, அவனைத் தூக்கி விடுமாறு கட்டளையிட்டார். அவ்வாறே போர்ச் சேவகர் கள் நாயனை இரண்டு சமுக்காளத்துக்கு நடுவில் வைத்துப் புரட்டிப் புரட்டித் தரை மீதுமோதி யடித்தார்கள். இவ்வாறு சமுக்காளத்தில் சுற்றப்பட்டு மோதியடித்ததன்

காரணம் யாதெனில், அரச வமிசத்தினரைச் சேர்ந்தவர்களின் மரணத்தைச் சூரிய சந்திரர்கள் நேராகப் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது என்ற கொள்கையேயாகும்.

### நாயனின் போர்வீரர் சரணடைதல்

அக் களத்தில் மிகுந்திருந்த நாயனின் போர்வீரர்கள் யாவரும், குப்ளாய்கானைச் சரணடைந்து, அவருக்கு அடி பணிந்து வாழ்வதாகக் கூறினர். அவ்வாறு அடி பணிந்தவர்கள் சோர்சா[1], கார்லி[2], பார்ஸ்கால்[3], சிடிங்கி[4] என்ற நான்கு உன்னதப் பிரதேசங்களைச் சேர்ந்த போர் வீரர்களேயாவர்.

### பேரரசர் தமது தலைநகரம் திரும்புதல்

இத்தகைய மகத்தான வெற்றியடைந்ததும், குப்ளாய் கான் தமது தலைநகரமான கான்பலு[5]வுக்குத் திரும்பினர். இக் கோலாகலம் நவம்பர் மாதம் நிகழ்ந்தது. மற்றும் இப் பேரரசர் ஈஸ்டர் பண்டிகை வரையிலும் இங்கேயே இருந்து, தம் நாட்டிலுள்ள கிறித்தவர்கள் அனைவருக்கும்

---

[1] Chorza [2] Karli [3] Barskol [4] Sitingui—இப் பிரதேசங்கள் இப்பொழுது இருக்கின்றனவா என்பது ஐயப்பாடே. ஊர்ப் பெயர்கள் அத்தனையளவாகத் திரிந்து மாறுபட்டிருக்கின்றன [5] Khan Balu - டார்டார் மொழியில் இது அரசன் இருப்பிடம் எனப் பொருள்படும். இது Cambalu என்றும் வழங்கப்படுகிறது; Khan Bhalik அல்லது Khan Balig என்பதன் திரிபாகும். Balig என்றால் நகரம் என்று பொருள். ஆதலால் Khan Baligஎன்பது கானின் நகரம் எனப் பொருள் தரும். இவ்வாறு Balig என்ற பெயர் கொண்ட ஊர்கள் பல உண்டு. Bish Balig, Mu Baligh, Ka Baligh முதலியன. இந்நகரமே இப்பொழுது பீகிங் (Peking என்று வழங்கப்படுகிறது. Pe Ho என்ற ஆற்றின் கரையிலிருப்பதால், இதற்குப் பீகிங் என்று பெயர் வந்தது.

அழைப்பு அனுப்பி, தங்களுடன் நான்கு சுவிசேஷங்கள்[1] அடங்கிய சத்திய வேதத்தைக்[2] கொண்டுவருமாறு பணித்தார். கொணர்ந்த அப் புத்தகங்கள் யாவற்றையும் அடுக்காக ஒரு பீடத்தின்மீது வைத்து அதற்குத் தூப தீபம் காட்டி, திருவிழாவெடுத்து, அக் குவியலுக்கு அன்பான முத்தம் ஒன்றீந்தார். அடுத்துப் பின்னர் வந்த ஒவ்வோர் ஈஸ்டரிலும் அவர் அவ்வாறே செய்தார். இம்மாதிரியே சாரசன் மக்கள், யூதர், விக்கிரக ஆராதனைப் பிரியர்கள் பலருடைய சின்னங்களையும் பெருமைப் படுத்தி வைத்தார். இதற்கு உரிய காரணத்தை வினவியபோது, அவர் கூறும் விடை இதுதான்: 'நான்கு பெரும் தீர்க்கதரிசிகள், நான்கு பெரும் மக்கட் பிரிவினரால் தொழுது வணக்கம் செய்யப் படுகின்றனர். கிறித்தவர்கள் தெய்வாம்சம் பொருந்திய சக்தி வாய்ந்த இயேசு நாதரையும்,[3] சாரசன் மக்கள் நபிநாயகமாக விளங்கும் மகமதுவையும்[4] யூதர்கள் மோசேவையும்,[5] 'விக்கிரக ஆராதனைப் பிரியர்கள் சாகாம்பார்க் கானையும்[6] புனிதத்தன்மை வாய்ந்த தெய்விகச்சக்தி உள்ளவர்களாகக் கொண்டாடுகின்றனர். இவ்வாறு பேராற்றல் படைத்த பெரும் சக்திகள் நான்கினுக்கும் நான் மரியாதை காட்டி வணக்கம் செய்கிறேன். இதனல் வானுலகில், இவர்களில் உண்மையில் எவர் ஒருவர் சக்தி மிக்குக் காணப் பட்டாலும், அன்னரின் அன்பையும் அருளையும் எளிதிற பெறுவேனல்லவா? ஆகவே, நான் மேற்கொண்ட வழிபாட்டு முறை சிறந்து காணப்படுகிறதன்றோ?[7]

---

[1] Four Gospels [2] Holy Bible [3] Jesus Christ [4] Muhamet [5] Moses [6] Sogombor Kan-இதையே வேறோரிடத்தில் சாகாமான் பர்ச்சான் (Sogomon Barchan) என்ற பெயரால் குறிப்பிடுகின்றார் (பக்கம் 53). இச் சொல் சாக்கிய முனி தேவன் என்பதன் சிதைவேயாகும்.

[7] இது சர்வமத சம்ரட்சணை (Religious Toleration and Protection) என்று வழங்கப்படும்.

இவ்வாறு திருவிழாவில் மக்களைக் குதூகலிக்கச் செய்த பொழுது குப்ளாய்கான் கிறித்தவருக்கு மட்டும் அதிகச் சலுகை காட்டியதாகப் பலர் கூறுகின்றனர். ஆனால், இதன் காரணமாக அரசரை, "ஏன் நீங்கள் கிறித்தவ மதத்தைத் தழுவவில்லை?'' என்று நான் அவரைக் காரணம் கேட்டதற்கு, அப் பேரரசர் பின்வருமாறு பதில் அளித்தார்.

## கிறித்தவர் ஆகாததற்குரிய காரணங்கள்

"எக் காரணத்தைக் கொண்டு, நான் கிறித்தவ மதத்தைத் தழுவிக் கிறித்தவராக வாழ வேண்டும்? இந் நாட்டில் உள்ள கிறித்தவ மக்கள் அனைவரும் அஞ்ஞானத்தில் அழுந்திக் கிடக்கின்றனர் என்பது உங்களுக்குத் தெரியும். அதன் காரணமாக, இவர்களுக்கு அற்புதங்கள் யாவும் நிகழ்த்தத் தெரியாது. ஆனால், விக்கிரக ஆராதனைப் பிரியர்கள் இவர்களுக் கெதிரிலேயே எத்தனை அற்புதங்கள் நிகழ்த்திக் காட்டுகின்றனர்? எடுத்துக்காட்டாக, நான் இம் மேசையின் அருகில் உட்கார்ந்து கொண்டிருந்த பொழுது, இதன் மேலுள்ள கோப்பைகளில் திராட்சைப் பழரசம் தானாகவே நிரம்பப் பெற்று, அவை என் கைகளால் எடுக்கப்படாமலேயே அவற்றிலுள்ள பானம் பருகும் வண்ணம் என் வாயில் வெகு அழகாகவும், மெது வாகவும் ஊற்றிச் சென்றன. கைகளில் கோப்பைகளை எடுக்காமலேயே அப் பானத்தைக் குடித்த அதிசயத்தை என்னவென்பது! மற்றும், இவர்கள் வெப்ப தட்பநிலையையும், சூறுவளியையும், கருமேகத்தையும், தங்களது மந்திர வித்தையால் அடக்கியாளுகின்றார்கள். இன்னும், இவர்கள் வருங்கால நிகழ்ச்சிகளைத் தங்கள் விக்கிரகங்களின் சக்தியால் முன்னரே நன்கு அறிகின்றனர். ஆகையால், நான் உங்களுடைய கிறித்தவ மதத்தைத் தழுவினால், என் சபை

யில் உள்ள யாவரும் நான் மதம் மாறிய காரணத்தையும், கிறித்தவர்கள் தங்களைப்போல் மாய வித்தைகள் செய்து காட்டுவார்களா என்றும் கேட்பார்கள். இவ்வாறு கேட்பவர்களுக்கு நான் என்ன சமாதானம் சொல்லக்கூடும்? இதற்குரிய காரணத்தைச் சரிவரக் காட்டேனுகில், மாய வித்தையில் வல்ல இவர்கள் என்னைக் கொல்லவும் முயல் வார்களன்றோ?

## கிறித்தவராவதற்குரிய நிபந்தனை

ஆகையால், நீங்கள் உங்கள் நாட்டுக்குத் திரும்பிச் செல்லும் பொழுது, போப்பாண்டவரிடம் சென்று கிறித்தவ மதத்தை மற்றவருக்கு நம்பிக்கை ஏற்படுமாறு செய்யவல்ல நூறு பாதிரிமார்களை அனுப்புமாறு கேட்டுக் கொள்வீராக! அவர்கள் இங்குவந்து இவர்களுக்கெதிரில் அற்புதங்கள் செய்து காட்டினுல், நான் மட்டுமல்ல—என் நாட்டினர் யாவருமே—உங்கள் கிறித்தவ மதத்தைத் தழுவு வோம் என்பது உறுதி. முதலில் நான் கிறித்தவனுனல், பிறகு எல்லோரும் என்னைப் பின்பற்றுவரன்றோ? அப்பொழுது உங்கள் நாட்டில் நிலவும் கிறித்தவ மக்கள் தொகையைவிட என் நாட்டில் ஆகப்போகும் கிறித்தவர் களின் தொகை மிகுதியாகவே காணப்படும் அல்லவா?

## அரசச் சின்னங்கள்

போர்க் காலங்களிலும், மற்ற நேரங்களிலும், அரச ருக்கு அவ்வப்பொழுது தகவல் கொடுக்க அலுவலாளர் பன்னிருவர் அரசரால் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். இவர்களைத் தகுதிக்கேற்பப் பிரித்தெடுத்து, நூறு மக்க ளுக்கு அதிபராய் வாழ்பவருக்கு ஒரு வெள்ளிப் பூணும், ஆயிரம் மக்களுக்கு அதிபராய் வாழ்பவருக்குப் பொற் பூணும், பதினுயிரம் மக்களுக்கு அதிபராய் இருப்பவர்

களுக்குச் சிங்க உருவம் பொறித்த பொற்பூணும் கொடுத்து, அவர்களை அவரவர் தொழிலில் நேர்மையா யிருக்குமாறு உற்சாகப்படுத்தி வைப்பார். பொற்பூணின் பெறுமானம் 120 சாகியும்,[1] சிங்க உருவம் பொறித்த பொற்பூணின் பெறுமானம் 220 சாகியும் ஆகும். அப் பூணின் தலையில் இவ்வாறு எழுதியிருக்கும்: "எல்லாம் வல்ல இறைவனின் உன்னத மகிமையால் நம் நாட்டுக்குப் பேரரசராக அளிக்கப்பட்ட வள்ளல் குப்ளாய்கான் நீடூழி வாழ்வாராக! அவருக்குக் கீழ்ப்படியாதிருப்பவர் யாவரா யினும் அவர் தூக்கிலிடப்பட்டு நாசமாக்கப்படுவார்.', ஆகவே, இவ்வெழுத்துகள் பொறித்த பூணை உடையவர் மக்களுடைய சொத்துகளை ஏலம் விடலாம்; பறிமுதல் செய்யலாம். அரச கட்டளையின்படி வரி வசூல் செய்ய லாம். அரசர்க்குரிய உரிமைகள் யாவும் அதிகார பூர்வ மாக இப் பூண் உடையவர்களுக்குக் கொடுக்கப் பட்டுள்ளன.

## பேரரசரின் உருவ அமைப்பு

குப்ளாய்கானின் நடுத்தர உயரமும், நல்ல கட்டுள்ள உடலும், உறுதி பெற்ற கைகளும், கால்களும் பெற்றவ ராய் விளங்குகின்றார். அவருடைய உடல் அழகாக உள்ள தென்றே கூறலாம்; சிற்சில சமயம் ரோஜா மலரின் சிவப்பு நிறம் போலவும் காணப்படுவதுண்டு. இந் நிறம் அவருடைய தோற்றத்துக்கு மிக்க அழகையும் கம்பீரத் தையும் கொடுத்து உதவுகிறது. அவருடைய கண்கள் கறுப்பாகவும், அழகாகவும் மூக்கு எடுப்பாகவும், வனப்பாக வும் அமைந்துள்ளன.

---

[1] Sagi - ஒன்றரை ரூபாய் பெறுமானமுள்ள ஒரு நாண யம்; இப்பொழுது இது புழக்கத்தில் இல்லை.

## அவரது குடும்பம்

அவருக்கு நான்கு மனைவிகள் உண்டு. இம் மனைவிகளுக்குப் பிறக்கும் குமாரர்களில் மூத்தவன் எவனோ, அவனே அச் சீனப் பேரரசருக்குப் பின் பட்டத்துக்கு வரும் உரிமை பெற்றவனாவான். அந்தப்புரம் என்று தனியே ஒன்று உண்டு. அதில் தம் நான்கு மனைவிகளும், நூற்றுக்கணக்கான பணிப் பெண்களும் அரசரைக் களிப்பூட்டி மகிழ்வர் தம் நான்கு மனைவிகளின் மூலமாகக் குப்ளாய்கானுக்குப் பிறந்த ஆண் மக்கள் இருபத்திரண்டு பெயர்கள். அவர்களில் மூத்தப் பிள்ளையின் பெயர் செங்கிஸ்[1] எனப்படும். மற்றவர்களுள், ஏழு பெயர்கள் அந் நாட்டின் ஏழு பகுதிகளுக்கு ஏழு அரசர்களாக நியமிக்கப் பட்டுள்ளனர்.

## கான்பலுவில் உள்ள அரண்மனை

குப்ளாய்கான் பெரும்பாலும் டிசம்பர், ஜனவரி, பிப்ரவரி ஆகிய மூன்று மாதங்களிலும் கான்பலு[2] என்ற நகரில் வசித்து வருகின்றார். இது கெதே[3] என்ற சீன நாட்டின் பகுதிக்கு வடகிழக்குக் கோடியில் உள்ளது. இந் நகரத்தின் தெற்குப் பாகத்தில் உள்ள அரசரின் அரண்மனையின் விவரம் பின்வருமாறு.

## எட்டு மைல் நீளமுள்ள வெளிமதில்

அரசரது அரண்மனை சதுர வடிவமானதாயும், ஆழ்ந்த அகழியால சூழப்பட்டதாயும், ஒவ்வொரு மதிற்சுவரும்

---

[1] Chingis – மூதாதையரான செங்கிஸ்கான் என்ற பெயரையே சந்ததிகளுக்கு - முக்கியமாகப் பேரன்மார்களுக்கு - இடப்பட்டு வருகிறதுபோலும். செங்கிஸ்கானின் பேரனும் அதே பெயராலேயே வழங்கப்படுகிறான் என்று தெரிகிறது.

[2] Khanbalu [3] Cathay

எட்டு மைல் அளவுள்ள நீளத்தை உடையதாகவும், சரி சமமாகப் பங்கிடப்பட்ட தூரத்தில் வாயில்களை உடைய தாகவும், அவ்வாயில்களில் வாயில் காப்போர் நிறுத்தி வைக்கப்பட்டும் சிறந்த பாதுகாப்போடும் விளங்குகிறது.

## ஆறு மைல் மதில்

இவ் வெளி மதிலுக்குள் மற்றுமோர் ஆறு மைல் நீளமுள்ள மதில் காணப்படும். அம் மதிலின் வடக்குப் பாகத்தில் மூன்று வாயில்களும், தெற்கில் மூன்று வாயில் களும் காணப்படும். நடுவில் உள்ள வாயில் மற்ற இரண்டு வாயில்களை விடச் சற்றுப் பெரியதாகக் காணப்படும். அப் பெருவாயிலின் வழியாகத்தான் அரசர் அரண்மனையுள் செல்வார். அவ் வாயில் அரசர் வரும்பொழுதும் போகும் பொழுதும் திறந்து வைக்கப்படும்; மற்றக் காலங்களில் மூடப்பட்டிருக்கும்.

இம் மதிலைக் கடந்து சென்றால், உள்ளே எண் வகைக் கட்டடங்கள் காணப்படும். இவை உணவுச் சாலைகளாக வும், படை அரண்களாகவும், தானியக் களஞ்சியமாகவும், இப்படிப் பலவிதமாகப் பாகுபட்டுக் காணப்படுகின்றன. இதனால், இவ்வெட்டுக் கட்டடங்களிலும் பண்டங்கள் நிரம்பியிருக்கும்.

## நான்கு மைல் மதில்

இக் கட்டடங்களைத் தாண்டி இன்னும் உள்ளே சென்றால், நான்கு மைல் நீளமுள்ள சதுர வடிவ மதில் ஒன்று காணப்படும். இம் மதிலுள்ளும் எட்டுக் கட்டடங் கள் உண்டு. இவை ஒவ்வொன்றிலும் மான் கூட்டங் களும், கிளிக் கூட்டங்களும், விலங்குகளின் பலவிதக் கூட்டங்களும் காணப்படும். ஒவ்வொரு கட்டடத்துக்கும் இடையில் குளிர்தரும் சோலைகளும், அச் சோலைகளில்

அழகான குளங்களும், நடனமாடும் மயில்களும் கணக்கின்றிக் காணப்படுகின்றன.

## உள்ளே தோன்றும் அரண்மனே

இந் நான்கு மைல் அளவுள்ள மதிலுக்குள்தான் பேரரசரின் அரண்மனே எழில் பெற்று விளங்குகிறது. அரண்மனேக்கும் நேரான நீண்டபாதை ஒன்றுண்டு. அப்பாதையில்தான் திருவிழாக் காலங்களிலும், திருவோலக்கக் காலங்களிலும் அரசர் பவனி செல்வது வழக்கம். அரண்மனேயில் திருவோலக்கக் கூடம் ஒன்று உண்டு. அதன் சுவர்கள் பளிங்குக் கற்களால் ஆனவை. இக் கூடத்தில் நவரத்தினங்கள் பதிக்கப்பெற்று, ஆயிரக்கணக்கான சூரியர்கள் பிரகாசிப்பதுபோல் தோற்றமளித்து நிற்கும். இவ்வரண்மனேயின் மேன்மாடத்தில் ஓர் அறை உண்டு. அவ்வறையினின்று பார்த்தால், வெளிமதில் வழியாக நுழையும் எவரும் நன்கு கண்ணில் தென்படுவர்.

## கொலுக்காட்சி மண்டபம்

கொலுக்காட்சி மண்டபம் ஒன்று உண்டு. இதில் வித விதமான சித்திரங்களும், உருவங்களும், தந்தப் பதுமைகளும் அழகு செய்து நிற்கும். பளிங்கால் ஆன மாடிப் படிகள் மேன் மாடம் வரையில் செல்லும். இவ்வரண்மனேயின் வெளிக் கூரையும் பல நவரத்தின மணிகளால் இழைக்கப்பட்டதாகும். படிகம் போன்று ஒளியை உள்ளே செலுத்தி நிற்கும். இதற்கும் உட்பாகத்தில் அரசரின் நிதி பாதுகாக்கப்படும் இடம் உண்டு.

## நிதிபாதுகாப்புச் சாலே

அந்நிதி பாதுகாப்புச் சாலேயில், பலவித உயர்ந்த நவமணிகளும், செல்வமும், பொன், வைரம், வைடூரியம்,

முத்து, பவழம் முதலிய விலை மதிப்பரிய நிதியங்களும் குவியல் குவியலாகக்கொட்டி வைத்துள்ளார். அவற்றிற்கு வெளியில் மிகச் சிறந்த காவற்காரர்களை நிறுத்தி, பாது காக்குமாறு கட்டளையிட்டிருக்கின்றார். அரச போசனத்துக் குரிய பொன் வெள்ளிப் பாத்திரங்கள் பல, அளவின்றி வேறு அறையொன்றில்காணப்படும்.

இவ்வரண்மனைக்குப் பக்கத்தில் பசுமை படர்ந்த குன்று ஒன்று காணப்படுகிறது. குளங்களில் அரசருடைய உணவுக்காக உயர்தர மீன்கள் வளர்க்கப்படுகின்றன. மீன்கள் வாழும் குளங்களுக்குத் தினமும் புதுத் தண்ணீர் விடப்படும். இவ்வாறு தண்ணீர் பாயும்போது மீன்கள் தப்பியோடாதவாறு சிறந்த பாதுகாப்புகள் செய்யப் பட்டிருக்கின்றன. குளங்களில் அன்னப் பறவைகளும் கொக்குகளும் காணப்படுகின்றன. இத்தகைய சுகபோகங் களுடன் சீனப்பேரரசர் இக் கான்பலு என்ற அரண் மனையில் வாழ்ந்து வருகின்றார்.

## புதிய தலை நகரம் தாய் – டு

சில சோதிடர்களால் கான்பலு அரண்மனையால் கலகம் ஏற்படுமெனக் கேள்விப்பட்டு, தாய்-டு[1] என்ற இடத்தில் வேறோர் அரண்மனையை அரசர் கட்டுவித்தார். இப் புதிய நகரத்தின் சுற்றளவு 24 மைல்கள். இதிலும் முற்குறித்த அரண்மனை போலவே எல்லா வசதிகளும் செய்யப்பட்டன.

## மெய்காப்பாளர்கள்

அரசரின் மெய்காப்பாளர்களில் பன்னீராயிரம் குதிரைப்படை வீரர்கள் இருக்கிறார்கள். அவர்கள்

---

[1] Tai-Du —இது Tatu என்றதன் திரிபு. பேரரசரின் உயர் நீதித்தலம் என்று இதற்குப் பொருள்.

காசிதான்[1] என்ற பெயரால் வழங்கப்படுகின்றனர். இப் படைகளுக்கு நான்கு அதிகாரிகள் உண்டு. ஒவ்வோர் அதிகாரியும், மூவாயிரம் படைகளுடன் அரசரைத் தினமும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் பாதுகாத்து நிற்க வேண்டும். மற்றவரும் தங்கள் முறையில் அவ்வாறே செய்து, நாள் முழுவதும் அரசரைப் பாதுகாத்து வருவர்.

## நியாய சபை

கூடத்தின் நடுவில் ஒரு தனியான இருக்கையில் அரசர் உட்கார்ந்து, சுற்றிலும் அமைச்சர் சூழ, நியாய சபையில் நியாயம் வழங்கிடுவார். அரசருக்கும், நியாயாதிபதிகளுக்கும், அமைச்சர்களுக்கும் அவ்வப்பொழுது திராட்சை இரசம் கோப்பைகளில் அளிக்கப்படும். அச் சமயத்தில் அதை விநியோகிக்கும் பணியாள்கள் தங்கள் மூக்கையும் காதையும் ஒருவித வெண்மையான துணியால் மூடிக் கொள்ள வேண்டும். கொடுக்கப்படும் பானங்கள் கொடுப்போரின் மூச்சால் கெட்டுவிடாதிருக்கும் பொருட்டே அரசரால் இத்தகைய ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

## பேரரசரின் பிறந்த நாள் திருவிழா

ஒவ்வோராண்டும் செப்டம்பர் மாதம் 28 ஆம் தேதியைச் சீனமக்கள் சீனப் பேரரசர் குப்ளாய்கானின் பிறந்தநாளாகக் கொண்டாடுகின்றனர். அந் நாளில் அரசர் பொன்னுடை தரித்துப் பலவித நவரத்தினங்கள் அணிந்து சபையில் மக்களுக்குக் காட்சியளிப்பார். ஆடையின் ஓரமெல்லாம் வைரத்தால் நிறைந்த வேலைப்பாடுகள் மிளிரும். அன்று அரசர் எந்த விதமான ஆடையை அணிய

[1] Kasitan-இது Quiestani என்ற சொல்லின் சிதைவேயாகும். இதற்கு அரசனது மெய்காப்பாளர் என்பது பொருள்.

விரும்புகிருரோ, அமைச்சர்களும், சபைக்கு வருபவர்களும் அதற்கேற்றுற் போல், அதே நிறமுள்ள ஆடைகள் அணிந்து வரவேண்டும். அரசருக்கு அன்று வெகுமதிகள் அளவில்லாமல் வந்து குவிகின்றன. அரசரும் அதற்கேற்ற வாறு பதில் மரியாதைகள் செய்வார். அன்று சாரசன் மக்கள், கிறித்தவர்கள், விக்கிர ஆராதனைப் பிரியர்கள், டார்டார்கள் முதலிய யாவரும் தத்தம் கடவுளுக்குப் பூசனையும் வந்தனையும் புரிவார்கள். அந் நாளில், நாடு முழுவதும் கோலாகலத்திலாழ்ந்து, அரசரை நீடூழி வாழு மாறு அந் நாட்டுப் பெருமக்கள் ஒருங்கு கூடி வாழ்த்துவர்.

## நாணய விநியோகம்

கான்பலு நகரத்தில் நாணய உருக்குச்சாலை இருக் கிறது. நாணய உருக்குமுறை அச் சாலையாளர்க்கு மட்டும் தெரியுமே தவிர, பிறருக்கு அவ்விரகசியம் தெரியவிட மாட்டார்கள். இந் நாட்டில் காகிதச் செலாவணி அமுலில் இருக்கிறது. நோட்டுகள் அச்சிடப்படுகின்றன. போலி நோட்டுகள் தயாரிப்பவர்களுக்குக் கடுந்தண்டனை யளிக்கப் படும். அரச நாணயங்களாலேயே இந் நாட்டின் பண்ட மாற்று வாணிகம் நடைபெறும். பொன், வெள்ளி, முத் துக்கள் முதலிய பலவும் வாங்க நாணயங்களே பயன் படுத்தப்படுகின்றன. கிழிந்த நோட்டுகளை அரசாங்க இலாகாவில் கொடுத்து, அவற்றைப் புதுப்பிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

## அரசரின் பெருந்தன்மை

ஒவ்வோர் ஆண்டும், குப்ளாய்கான், தம் நாட்டின் பல பகுதிகளுக்கும் விசாரணைக் கமிட்டிகளை அனுப்பி, மக்களின் முக்கியத் தேவைகளை யறிந்து வருமாறு

பணிப்பார். வேளாண்மை நன்ருக நடக்க ஏற்பாடுகளும், மழை குறைந்த விடத்தும், மக்கள் பஞ்ச காலத்தில் உணவுக்காகத் துன்புறும்போதும், தம் அரிய களஞ்சியத்திலிருந்து தானியங்களை எடுத்து விநியோகம் செய்தும், இங்ஙனமாகப் பலவித நலந்தரும் ஏற்பாடுகள் செய்கின்ருர். பஞ்சகாலத்துக்கென்று தனியாகக் கட்டப்பட்ட களஞ்சியத்தில், வேளாண்மை செழிப்பாக நடக்கும் பொழுது, மிகுதியான தானியங்கள் சேமித்து வைக்கப்படும். அத்தானியமே பஞ்ச காலத்தில் யாவருக்கும் விநியோகிக்கப் படும். பஞ்ச காலத்தில் தானியங்கள் வழங்கி, அவர்களுடைய சோகக்குரலை இன்பக் குரலாக மாற்றிவிடுகிருர். இவ்வாறு சேமிக்கப்படும் தானியங்கள் நான்கு ஆண்டுகள் வரை மக்களுக்கு வழங்கப்படும். இதே விதம், நாட்டில் கால்நடை சீவன்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டாலும், மக்களுக்குத் தம் அரண்மனையிலிருக்கும் ஆடு மாடுகளை எடுத்து வளர்ந்துப் பிழைக்க விநியோகிப்பார். எப்பொழுதும் தம் நாட்டினர்க்கும் குடிமக்களுக்கும் எத்தகைய உதவியைச் செய்யக்கூடும் என்ற நல்லெண்ணமே அவரிடத்தில் குடிகொண்டு, அவரது மனத்தில் ஓங்கி நிற்கும். மற்றும், மின்னலாலும், இடியாலும் நாசமடைந்த ஆடு மாடுகளின் சொந்தக்காரர்களிடமிருந்து வசூலிக்கப் படும் பத்தில் ஒரு பங்கு வரியையும் கொடுக்க வேண்டாமெனக் கூறி, அவர்களுக்குத் தக்க உதவிவும் அளிப்பார். கடவுள் அத்தகையவரிடம் ஏதோ கோபங்கொண்டு இத்தகைய இடையூற்றை உண்டாக்கியிருக்கிருர் என்றும், இங்ஙனம் துன்பப்படுவரிடமிருந்து வசூலிக்கப்படும் வரி தம் நிதியத்தில் சேர்ந்தால், அந் நிதியம் முழுவதுமே நாசமடைந்து போகும் என்றும் கொண்டுள்ள கொள்கையே இதற்கு முக்கியமான காரணமாகும்.

## எரியும் கற்கள்

கெதேயிலுள்ள மக்கள் மலைக்குன்றுகளிலிருந்து கறுப்பு நிறம் கொண்ட கற்கள் போன்ற துண்டுகளை வெட்டி எடுத்து அவற்றை அடுப்பெரிக்கப் பயன்படுத்துகின்றனர். அவற்றை எரித்தால், கரியைப்போல் கனிந்து எரிகின்றன விறகைவிட அதிக நேரமும் எரிவதால், இவை அடுப்பெரிக்க உதவும் சிறந்த பொருள்களாகக் கொள்ளப் படுகின்றன. ஆனால் நாட்டின் மக்கள் யாவருக்கும் தேவையான கற்கள் கிடைப்பது அரிதாயிருக்கிறது. இன்னல்கள் பாராட்டாது இக் கற்களைத் தோண்டி எடுத்தால் அவை சிக்கனத்துடன் பெருவாரியாகவும் மக்களின் தேவையை முழுவதும் பூர்த்தி செய்யக்கூடும் என்பது திண்ணம்.

## கான்பலுவின் சோதிடர்கள்

கான்பலுவில் சுமார் ஐயாயிரம் சோதிடர்கள் இருக்கிறார்கள். குப்ளாய்கான் இவர்களுக்கு இலவச உண்டியும் உணவும் அளித்து வருகிறார். இவர்கள் அரசர்க்கு அடிக்கடி வருங்கால நிகழ்ச்சிகளைச் சொல்லி வருவார்கள். மற்றும், இவர்கள் காகிதத்தில் ஒரு சதுரக் கட்டத்தில் அவ்ஆண்டில் காணப்படும் கிரகங்களின் நிலைகளைக் குறித்து, அவற்றை விற்கவும் செய்கின்றனர். அவற்றிற்குப் பொதுமக்களிட மிருந்து வரவேற்பு மிகுதியாயிருக்கும். இச் சோதிடர்களில் எவர் சோதிடம் உண்மையாக நடந்தேறுகிறதோ, அவர்களுக்கு அரசர் சன்மானம் செய்து பல வகைகளாலும் கௌரவப்படுத்தி வைப்பார் இவர்கள் சோதிடக் கட்டத்தைப் பன்னிரண்டு பகுதிகளாகப் பிரிக்கின்றனர். முதல் கட்டத்திற்குச் சிங்கத்தின்[1] பெயரையும், இரண்டாம் கட்டத்திற்கு எருதின்[2] பெயரையும் குறிப்பிட்டு, மற்றும்

---

[1] Lion [2] Ox

இவ்வாறே பன்னிரண்டு கட்டங்களுக்கும் பன்னிரண்டு பெயர்களிட்டு வழங்குவர்[1]. ஆகையால், ஒருவனுடைய பிறந்த தேதியைக் கேட்டு, அதனுல் அவன் பிறந்த இலக்கினத்தை யறிந்து, அதற்கேற்றபடி வருங்கால நிகழ்ச்சிகளைக் கணித்து, ஆராய்ந்து கூறுகின்றனர்.

## மார்க்கோ போலோ கவர்னராதல்

"சின்குவி[2] என்ற பிரதேசத்திலிருந்து தென்கிழக்கில் பயணம் செய்தால், நீங்கள் யான் குவி[3] என்ற முக்கியமான பெருநகரத்தை அடைவீர்கள். இந் நகரத்தின் ஆதிக்கத்தில் இருபத்து நான்கு சிறிய கிராமங்கள் இருக்கின்றன. இதன் காரணமாக, இப்பெரு நகரம் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் காணப்படுகிறது. இந் நகர பரிபாலனம் சீனப் பேரரசைச் சார்ந்ததாகும். இங்கு வாழும் மக்கள் விக்கிரக ஆராதனைப் பிரியர்களாகவும், வாணிகத்தைப் பேணுபவர்களாகவும், உடலுழைப்பையே பெருமையாகக் கொள்பவராகவும் காணப்படுகின்றனர். இவ்விடத்தில் யுத்த தளவாடங்கள் மிகுதியாகச் செய்யப்படுகின்றன. இதன் காரணமாக அணிவகுத்த படைகள் பல இங்கு முகாம் போடப்பட்டிருக்கின்றன. முன்னர்க் கூறப்பட்ட பன்னிரு கவர்னர்களில் ஒருவர் வாழ்ந்து வருவது இவ்விடமேயாகும். சீனப் பேரரசர் குப்ளாய்கானின் சிறப்பு ஆணையின்படி நான் இப் பெரு நகரத்துக்கு மூன்று ஆண்டுக் காலம் கவர்னராக நியமிக்கப்பட்டிருந்தேன்.

---

1 இந்தியாவில் முதல் கட்டம் மேஷம் அதாவது ஆட்டின் உருவமுள்ள ராசியும் இரண்டாவது ரிஷபம் அதாவது எருதின் உருவமுள்ள ராசியும், மற்றும் இவ்வாறே மற்ற ராசிகளும் பெயரிடப்பட்டுள்ளன.

2 Chin-Gui 3 Yan-Gui-இது Yan-chen - fu- என்பதன் திரிபேயாகும். மற்றும் Hang Chen-Fu என்ற நதிக்கரையில்

எனக்கும், என் தந்தைக்கும், தந்தையின் நண்பர்க்கும் நவரத்தினங்களும், பொன்னும் மணியும் ஆகப் பல பரிசுகளைச் சீனப் பேரரசர் கொடுத்தனுப்பினர். மற்றும் ஒவ்வொருவருக்கும் நான்கு பொற்கேடயங்கள் கொடுத்து, அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளும்படி பணித்தார். ஒவ்வொரு கேடயத்தின் நீளம் ஒரு முழமும், கனம் ஐந்து அங்குலமும் உடையதாய், முழுவதும் பொன்னால் ஆனதே யாகும். அதில் அரசருடைய பெயரும் அவர் நீடுழி வாழ்வதற்கான வாழ்த்துகளும் பொறிக்கப்பட்டிருந்தன. அவற்றை எடுத்துக் கொண்டு பல நாடுகளையும் கடந்து சென்றோம். 1295 ஆம் ஆண்டில் நாங்கள் வெனிசு நாடு அடைந்ததும், இதற்கு ஓர் ஆண்டு முன்னராகக் காலம் சென்று விட்ட-அதாவது கி. பி. 1294 ஆம் ஆண்டு காலம் சென்ற-பேரரசர் குப்ளாய்கானின் மரணத்தைக் கேட்டு மிகவும் ஆருத் துயரத்தில் அழுந்தினோம். இனி அத்தகைய பெருந்தன்மையும் நற்குணமுமுள்ள பேரரசரை நாங்கள் எங்குக் காணப் போகிறோம்? வாழ்க குப்ளாய்கான்!''

---

உள்ள நகரம் என்றும் பொருள்படும். ஆற்றுப் பெயரே, அது பாயும் நாட்டிற்கும் இடப்படுவது மரபு. இப் புத்தகத்தின் முதல் பகுதியில் பாலாறு பாயும் நாட்டை லார் என்ற பெயரால் அழைத்தது ஈண்டு நினைவு கூறுதற் பாலது.

# 4. ஜப்பானும் ஜாவாவும்

## ஜப்பான்

"ஜிப்பாங்கு[1] கீழைப் பெருங்கடலில் உள்ள ஒரு பெருந் தீவாகும். இது சீன தேசத்திலிருந்து அல்லது மஞ்சி[2] நாட்டின் கடற்கரையிலிருந்து 1500 மைல் தொலைவில் உள்ளது. இத் தீவு உருவில் மிகப் பெரியதாகும். இத் தீவின் மக்கள் நல்ல வனப்புள்ளவர்களாகவும் நாகரிகமடைந்தவர்களாகவும் காணப்படுகின்றனர். இவர்களைச் சுதேச அரசர்களே ஆள்கின்றனர். இத் தீவில் பொன் மிகுந்த அளவில் கிடைக்கிறது. ஆனல், இப் பொன்னை இத் தீவின் அரசன் வெளிநாட்டவர் எவரையும் எடுத்துச் செல்ல விடுவதில்லை. வெளிநாட்டார் எவரும் இத் தீவினுள் அனுமதிக்கப்படுவதே கிடையாது இதன் காரணமாக, இத் தீவிற்கு வாணிக அலுவலாக வரும் கப்பல்கள் பெரும்பாலும் இல்லையென்றே அறுதியிட்டுக் கூறலாம். ஆகவே இத் தீவில் கிடைக்கப்பெறும் செல்வங்கள் யாவும் அரசனின் அரண்மனையை நாடியே எடுத்தேகப் பட்டு, அங்குக் குவிக்கப் படுகின்றன. அரண்மனையின் சுவர்கள் யாவும் பொற்றகட்டால் ஒளிவிடும். அரண்மனையின் அறைகள் யாவற்றிலும் பொற்பாளங்கள் பெருவாரியாகக் காணப்படும். கதவின் சன்னல்கள் கூடப் பொன் தகட்டால் செய்யப்பட்டனவே என்று சொன்னல், அரண்மனையில்

---

[1] Jipangu-நவீன ஜப்பானை இவ்வாறு வழங்குகிறுர். இதில் Gu என்ற சொல் நாடு என்று பொருள் படும். ஆகையால் இச் சொல் ஜப்பான் நாடு என்று பொருள் தரும்.

[2] Manji-சீனவின் தெற்குப் பாகம்.

உள்ள செல்வத்தையும் அதன் பெருமானத்தையும் இவ்வளவு அவ்வளவு என்று அளவிட்டுக் கூற முடியாத நிலையில் இருக்கிறது என்பதை யூகித்தறியலாமல்லவா?

இத் தீவில் முத்துகள் நிறையக் காணப்படுகின்றன. கோமேதகங்களும், உருண்டை வடிவமான வைடூரியங்களும் வெண்மை முத்துகளைவிட விலை யுயர்ந்தவைகளாக மதிக்கப்படுகின்றன. இந் நாட்டின் ஒரு பகுதியினர் இறந்தோரின் சடலத்தைக் கொளுத்துவர்; மற்றவர் புதைப்பர். புதைப்பவர், சடலத்தின் வாயில் நிறைய பொன்னும் மணியும் இட்டு, பிறகு புதைக்கும் சடங்கை நிறைவேற்றுவர்.

## சீனப் பேரரசர் தொடுத்த போர்

இத்தகைய செல்வம் மிக்குப் புகழ்படைத்த ஜப்பான் தீவினைப் பேரரசர் குப்ளாய்கான் தமதாக்கிக் கொள்ளுமாறும், அதன்மீது படையெடுத்துச் செல்லுமாறும் சிலரால் தூண்டப்பட்டார். அதன்படி தமது பெருத்த கப்பற் படையை இருபகுதிகளாகப் பிரித்து, ஒரு பகுதியை அப்பாகடன்[1] என்பவர் தலைமையிலும், மற்றப் பகுதியை வான்சான்சின்[2] என்பவர் தலைமையிலும் அணி வகுத்துச் செல்லுமாறு பணித்தார்.

ஆனால், அவ்விரு தலைவர்களுக்குள்ளும் பிணக்கு ஏற்பட்டதன் காரணமாக, ஒருவர் சொல்லை மற்றவர் ஏற்காமலே, தமக்குத் தோன்றியவாறு தனித் தனியே பிரிந்து, ஒருவர் ஜாய்டன்[3] என்ற துறைமுகத்திலிருந்தும்,

[1] Abbacatan [2] Voncancin [3] Zai-Tun-இது அமாய் (Amoy) என்று வழங்கப்படும் நகரம்.

மற்றவர் கின் சாய்[1] என்ற துறைமுகத்திலிருந்தும், புறப் பட்டு ஜப்பான் தீவை அடைந்தனர். ஜப்பானுள்ளும் இருவரும் வெவ்வேறு வழிகளில் உட்புகுந்து சென்றதால், ஒருவராயினும் எந்த இடத்தையும் தமதாக்கிக் கொண்டா ரல்லர். இறுதியில் ஒரு கோட்டை மட்டும் அவர்களுள் ஒருவரால் பிடிக்கப்பட்டது. அவர்கள் அக் கோட்டை யினுள்ளிருந்த மக்களைக் கொன்றுவிடத் திட்டமிட்டு, அவ்வாறே அதில் இருந்த எண்மர்களைத் தவிர மற்ற யாவரையும் கருணையின்றிக் கொன்று குவித்தனர். ஆனால் இவ்வெண்மரின் உடலை எவ்விதத்திலும் துணிக்க முடிய வில்லை. ஏனெனில், இவர்கள் தங்கள் கைகளில் மந்திரச் சொற்கள் அமைந்த இரட்சைகளை யணிந்திருந்தார்கள். அவ்விரட்சையே இவர்களை எத்தகைய இரும்பாயுதங்களி லிருந்தும் உயிர் போகாமல் தடுத்துக் காப்பாற்றி வந்தது. இந்த யந்திரத்தின் தந்திரத்தை யறிந்த அவ்வதிகாரி, இவ் வெண்மரையும், மரத்தால் ஆகிய குறுந்தடியால் தலையி லடித்துக் கொல்ல உத்தரவிட, அவ்வாறே அவ்வெண்மர் களைக் கொன்று தீர்த்தார்கள்.

## படையெடுத்தோர் பட்ட பாடு

இதற்குச் சிறிது நேரத்தில் கடற்கரையில் ஏற்பட்ட பெரும் புயலால், படையெடுத்து வந்த கப்பல்கள் பக்கத்துத் தீவினுக்கு அடித்துச் செல்லப்பட்டன. அத் தீவில் குப்ளாய்கானின் படைவீரர்கள் உணவிற்காக உலாவி வந்தனர். ஜப்பானில் உள்ள ஆதிவாசிகள் சிறு படகுகளில் ஆயிரக்கணக்காக ஏறிவந்து, அங்கு உலாவி வந்த சீனப்போர் வீரர்களை வளைத்துக் கொண்டனர். வளைத்து, அவர்கள் இருந்த இடத்தை முற்றுகையிட்டதன்

[1] Kin'Sai-இது Kintsay என்று வழங்கப்படும் துறை முகமாகும். இதற்குத் தேவர் உலகம் என்பது பொருள்.

காரணமாக, சீனப் பெரும்படைகள் அத் தீவின் சுதேசி மக்களுக்கு அடிபணிந்தனர்[1]. இந் நிகழ்ச்சி கி.பி. 1264 ஆம் ஆண்டு நிகழ்ந்ததாகும். இதைக் குப்ளாய்கான் பல ஆண்டுகள் கழித்து அறிந்து, சரணடைந்த தலைவர் இருவரையும் தம்நாட்டிற்குத் திரும்ப அழைத்து, அவ்விரு வருக்குள் ஏற்பட்ட பூசலினாலன்றோ இந்நிலை ஏற்பட்ட தென தீர ஆராய்ந்து, அவ்விருவரில் ஒருவரை தூக்கி லிட்டும், மற்றவரை ஜோர்ஜா[2] என்ற தீவுக்குக் கொலைத் தண்டனை யிட்டும் அனுப்பிவிட்டார்.

இந்த ஜோர்ஜா தீவில் கொலைத் தண்டனை பின் வருமாறு நிறைவேற்றப்படுகிறது.

## ஜோர்ஜாவில் கொலைத் தண்டனை நிறைவேற்றும் முறை

தண்டனையடைந்தோனின் இரு கைகளையும், பின்னால் சங்கிலியினால் பிணைத்து, புதிதாகத் தோலுரிக்கப்பட்ட எருமை மாட்டின் மேல்தோலினால் மூடி, அழுத்தமாக ஊசி கொண்டு அத் தோலைத் தைத்து விடுவார்கள். இப் பச்சைத்தோல் காயக்காய, அதனால் ஏற்படும் அதிகமான சுருக்கத்தினால் உள்ளிருக்கும் தண்டனை பெற்றவன் சித்திர வதை செய்யப்பட்டு, மரணமடைவான். இம் மாதிரியே குப்ளாய்கானால் அனுப்பப்பட்ட படைத்தலைவனுக்குத் தண்டனை நிறைவேற்றப்பட்டது.

## ஜப்பான் மக்களும், தெய்வ வழிபாடும்

இந்த ஜிப்பாங்குத் தீவில், விக்கிரகங்கள் பற்பல உருவங்களில் காணப்படுகின்றன. சிலவற்றிற்கு மாட்டின்

---

[1] சீனருக்கும் ஜப்பானியருக்கும் ஏற்பட்ட பகைமைக்கு ஆதி காரணம் இதுவே எனக் கூறுவர்.

[2] Zorza - எரிமலை உள்ள ஒரு தீவு.

தலையும், சிலவற்றிற்குப் பன்றியின் உருவமும், சிலவற்றிற்கு மூன்று தலைகளும் வைக்கப்பட்டிருக்கும். மற்றும் சிலவற்றிற்கு நான்கு கால்களும், சிலவற்றிற்குப் பத்துக் கைகளும் காணப்படுகின்றன. நூறு கரங்கள், ஆயிரம் கரங்கள் கொண்ட விக்கிரகங்களும் ஆங்காங்கே காணப்படுகின்றன.[1] எவ்வளவுக் கெவ்வளவு கரங்கள் பெருகிக் காண்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு அதிகமான சக்தியை அவை படைத்துள்ளன என்பதைக் காட்டுகின்றனவாம் இவ்வளவு வேறுபாடுகள் எதற்கு என்று கிறித்தவர்கள் இத் தீவின் ஆதிவாசிகளைக் கேட்டதற்கு அவர்கள், "எங்கள் முன்னோர் இவ்வாறுதான் பூசித்து வந்தனர்; அதேவிதமாக நாங்களும் அவர்களைப் பின்பற்றுகிறோம்," என்று பதில் இறுத்தனர்! இவ்விக்கிரகங்களுக்கு நடத்தப்படும் திருவிழாவின் சிறப்பு ஏட்டில் எழுத முடியாத தொன்றாகும். இவ்விழாவில் சிறப்பும், கொடுமையும் மிகப் பெருமளவில் கலந்தே காணப்படும்.

## ஜாவா

ஜியாம்பா[2] என்ற இடத்தை விட்டகன்று தெற்கிற்கும் தென்கிழக்கிற்கும் இடையிலே கப்பலைச் செலுத்திச்

---

[1] இவ்வித உருவ வழிபாடு இந்தியாவிலிருந்து ஜப்பானுக்குச் சென்றிருக்க வேண்டும். ஒருதலை உள்ள விக்கிரகம் புத்த பெருமானைக் குறிப்பிடுவதாகும். ஏனெனில், புத்த மதம் சீனாவிலும், ஜப்பானிலும் கிறித்து பிறப்பதற்குப் பன்னூறாண்டுகட்கு முன்னரே பரவியிருந்தது என வரலாறு சான்று பகர்கின்றது. அதற்கடுத்தாற்போல் காணப்படும் எருதின் தலை, சிவ வணக்கத்தையும், மூன்று தலைகள் பிரம்மா வணக்கத்தையும், ஆயிரம் தலைகள் காளியின் வணக்கத்தையும் தெரிவிப்பதாகும். அதேவிதமாகக் கைகள் பல இருப்பனவற்றையும் பாகுபடுத்திச் சொல்வர்.

[2] Ziamba-இது இப்பொழுது இந்தோ சீனாவில் உள்ள கம்போஜா (Kamboja) என்ற இடத்தைக் குறிக்கிறது.

சென்ருல் நீங்கள் உருவத்தில் மிகப்பெரிய அளவுள்ள தீவு ஒன்றினை அடைவீர்கள். இத் தீவிற்குப் பெயர் ஜாவா[1] எனப்படும். இத் தீவையே மக்கள் உலகத்தில் பெரிய தீவாகக் கருதுகின்றனர். இதன் சுற்றளவு 3000 மைல் களாகும். இது சுதேசி மன்னரால் ஆளப்பட்டு, எவருக்கும் கப்பம் கட்டாத குடிமக்களைக் கொண்டுள்ளது. இக் குடிகள் விக்கிரக ஆராதனைப் பிரியர்களே. இங்கு விலையுயர்ந்த வாசனைப் பண்டங்கள் மிகுதியாக விளை கின்றன. மிளகு, சாதிக்காய், ஏலக்காய், இலவங்கம் முதலிய வாசனைப் பண்டங்கள் பெருவாரியாகப் பயிராக்கப்படுகின் றன. இங்குத்தான் சீனுவின் பல பாகங்களுக்கு ஏற்றுமதி செய்யப்படும் பொற்கட்டிகள் பூமியிலிருந்து தோண்டி எடுக்கப்படுகின்றன. முக்கியமாக காய்-டு,[2] மஞ்சி[3] முதலிய சீன நாட்டின் துறைமுகங்கள், இங்கிருந்து கொணரப் படும் பொன்னை இறக்குமதி செய்கின்றன. இத் தீவைக்

---

[1] **Java**-இதை நம் பழந்தமிழிலக்கியங்கள் சாவகத்தீவு என வழங்குகின்றன. ஆக, **Java** வைச் சாவ்கத் தீவு என்றும், இலங்கையைச் சிங்களத்தீவு என்றும் வழங்கு கின்றன. பாரதியாரின் இன்சுவைப் பாடல்களையும், சிலப் பதிகாரம், மணிமேகலை என்பவற்றின் சீரிய செய்யுட் களையும், கலிங்கத்துப் பரணியின் கவின்பெருஞ் சொல் லோவியங்களையும் ஈண்டு ஒப்பிட்டுப் பார்க்கவும். வட மொழியில் இத் தீவு யவத் வீபம் என்று வழங்கப்பட்டது. யவம் என்ருல் கோதுமை அல்லது பார்லி என்று பொருள் படும். கோதுமை போன்ற உருவத்தில் அத்தீவு இருத் தலால் அத்தீவு யவத்வீபம் அல்லது யவத்தீவு என்றே வழங் கப்பட்டது. யவம் என்பதே பின்னர் ஜாவா என மாறிற்று என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர்.

[2] **Kaidu** [3] **Manji**

குப்ளாய்கான் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டுவராமைக்குக் காரணம், பயணம் செய்யவேண்டிய தொலைவும் கடல் கடப்பதனால் ஏற்படும் இன்னல்களுமேயாம்.

## முடிவுரை

இதுகாறும் நீங்கள் பொறுமையாகப் படித்து வந்தீர்கள். இந்தியாவைப் பற்றியும், முக்கியமாகத் தமிழ் நாட்டைப் பற்றியும், பாரசீக நாட்டில் கண்ட புதுமையையும், ஜப்பான் தீவின் மகிமையையும், ஜாவாத்தீவின் அழகினையும் அறிந்தீர்கள். முதல் அத்தியாயத்தில் கூறப்பட்ட எங்கள் யாத்திரையின் வரலாற்றையும் அறிந்தீர்கள். அவ்வத்தியாயத்திலே, நாங்கள் சீன தேசத்துக்குச் சென்ற முறையையும், பேரரசர் குப்ளாய்கானால் ஆதரிக்கப்பட்ட நிலையையும், அங்கிருந்து பதினேழு ஆண்டுகள் கழித்து எங்கள் சொந்த நாட்டுக்குத் திரும்பத்தக்க தருணம் கிடைக்காது தவித்துக் கொண்டிருக்கும்போது, எதிர் பாராத விதமாக ஏற்பட்ட நற்காலத்தையும், அதன் காரணமாக நாங்கள் பாரசீக நாடடைந்ததைப் பற்றிய வரலாற்றையும் படித்தீர்கள். தற்செயலாகச் சீனப் பேரரசினை விட்டு வெளியேறும் பேறு கிடைத்திராவிட்டால், தாய்நாட்டில் உள்ள வெனிசு நகரத்தை எங்கள் வாழ்நாளில் திரும்பவும் பார்த்திருக்கவே முடியாது என்று திட்டமாகக் கூறலாம்.

ஆனால், நாங்கள் திரும்பிச் செல்ல வேண்டும் என்பது ஆண்டவரின் திருவுள்ளம் போலும்! உலகம் எவ்வாறு உள்ளது என்பதைப் பொது மக்களாகிய பெருமக்கள் அறிந்து கொள்ளவே, எங்களை எமது நாட்டிற்குத் திரும்ப அனுப்பினார் என ஊகிக்கின்றோம்.''

ஒன்று மட்டும் உண்மை-மறுக்கமுடியாத உண்மை. கிறித்தவராயினுஞ் சரி, சாரசனயினுஞ் சரி, அல்லது டார்டார் வமிசத்தவராயினுஞ் சரி, பண்பாடும், மனத் துணிவும், வீரமும், தீரமும் கொண்டுள்ள—நிக்கோலோ போலோவின் திருமகனரான—வெனிசு நாட்டு யாத்திரிகர் மார்க்கோ போலோவைப்போல் உலகத்தின் பரந்த பாகத் தைக் கடந்து காணக்கிடைக்காத காட்சிகளை யெல்லாம் கண்டு, அவற்றை உலகோர் யாவரும் அறியத் தாம் கண்ட தைக் கண்டவாறே வெளியிட்டவர் வேறு எவரேனும் உளரோ? கிடையாது; இது உண்மை; உறுதி; எவருக்கும் கிடைக்காத பெரும் பேறு அன்றோ? வாழ்க மார்க்கோ போலோ! வளர்க தமிழ்ப் பண்பாடு!

''எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.'' —திருக்குறள்

---

# மேற்கோள் நூற்பட்டியல்

## (BIBLIOGRAPHY)


1. Cassel & Co , London :
Latin-English Dictionary 1919

2. DeCruz, F. A. : Saint Thomas 1924

3. Herman De Souza :
In the Steps of St. Thomas 1972

4. Krishnaswamy Iyengar, Dr. S. :
Beginnings of South Indian History 1918

5. McCrindle : Megasthenes 1926

6. ,, Periplus 1926

7. ,, : Ptolemy 1914

8. Dr. Mazumdar : An Advanced
History of India 1940

9. Nilakanta Sastri, K. A., M. A. :
South India (2nd Edn.) 1968

10. Rackham, M. A. : Pliny 1938

11. Sathianatha Iyer, M.A.L.T. :
History of India, Vol. I 1952

12. Thakaksu. M. A. : Fa-Hien 1896

13. Dr. Vincent Smith, M.A. : History of India 1920

14. Watters, T : Yuwan Chwang Travels In India 1904

15. ,, : Travels of Marco Polo 1925

16. William Marsden, F. R. S. :
Travels of Marco Polo 1950

17. Yule : Marco Polo's Travels 1926

## தமிழ் நூல்கள்


18. ஆறுமுக நாவலர் பதிப்பு : திருக்குறள் 1949

19. இராகவன், வி.எஸ்.வி. : சிந்துபாது 1968

20. ,, தாலமி 1978

21. ,, பாஹியான் 1963

22. ,, பிளினி 1977

23. ,, பெரிப்ளூஸ் 1977

24. ,, மெகஸ்தனிஸ் 1978

25. ,, யுவான் சுவாங் 1978

26. கோபால ஐயர், அ. பண்டிதர்
கலிங்கத்துப்பரணி 1923

27. கோபாலகிருஷ்ணமாசாரியர், வை. மு. :
கம்பராமாயணம் 1939

28. சதாசிவ பண்டாரத்தார், டி. வி. :
பாண்டியர் வரலாறு 1956

29. சாமிநாத ஐயர், டாக்டர், உ. வே.
பத்துப்பாட்டு 1956

30. தரங்கம்பாடிப் பதிப்பு : சத்தியவேதம் 1952

31. திருநாவுக்கரசர் தேவாரம் : தேவாரம் 1949
[காசிமடம் பதிப்பு]

32. வானவில் பிரசுரம் : பாரதியார் கவிதைகள் 1977

33. வேங்கடசாமி நாட்டார் : சிலப்பதிகாரம் 1950

34. வையாபுரிப்பிள்ளை, பி.ஏ.பி.ல். :
தமிழ் லெக்சிகன் Vols. I-VII. 1936


---

# பொருட் குறிப்பகராதி